# சித்தூர் மாவட்ட பக்திப்பாடல்களும் வழிபாடுகளும்



டாக்டர் ஜா. மணுவேல்

# சித்தூர் மாவட்ட
# பக்திப் பாடல்களும்—வழிபாடுகளும்




டாக்டர் ஜா. மனுவேல்

# திருடர்களின் பிரார்த்தனை

தமிழ் :

கொள்ளையிடப் போரம்மா—நாங்க
கொண்டு வந்தத தாரம்மா
திருட்டுப் பொருளாச் சேன்னு
திட்டுபட் டுருச்சேன்னு
தள்ளிவிடா தம்மா—தாயே
தள்ளி விடாதம்மா

தெலுங்கு :

தொங்ககச்சனு போத்தம்மா—மேமு
தொரக்குண்டா ரவலம்மா
தொரக்க குண்ட வஸ்தேனம்மா—மேமு
கோக்க எத்தி பெடத்தா மாகே
ரய்க்க எத்தி பெடத்த—மேமுதானம்மா

(இந்நூல்—பக். 61, 62)

# சித்தூர் மாவட்ட பக்திப் பாடல்களும் வழிபாடுகளும்

[1990-ல் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் அளிக்கப்பெற்ற பிஎச்.டி பட்ட ஆய்வேட்டின் ஒரு பகுதி.]

ஆசிரியர் :

**டாக்டர். ஜா. மனுவேல்,**
எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ் விரிவுரையாளர்,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்
திருப்பதி-517 502 (ஆ.மா.)

விற்பனை உரிமை :

**பாரி நிலையம்**
184, பிராட்வே, சென்னை-600108

நூலின் பெயர் : சித்தூர் மாவட்ட பக்திப் பாடல்களும் வழிபாடுகளும்

ஆசிரியர் : டாக்டர். ஜா. மனுவேல்

உரிமை : ஆசிரியருக்கு

மொழி : தமிழ்

பதிப்பு : முதற்பதிப்பு

ஆண்டு : நவம்பர், 1993

தாள் : 10.7 k.g.

நூல் அளவு : D/c 12.5×18.5 செ.மீ.

எழுத்து : 10 புள்ளி

பக்கங்கள் : xvi + 172 = 188

படிகள் : 1000

அச்சிட்டோர் : மூவேந்தர் அச்சகம்
இராயப்பேட்டை
சென்னை-600 014
தொலைபேசி : 8267189

விலை : ரூ. 25-00

# வாழ்த்துரை

பேராசிரியர்
டாக்டர் ந. சுப்புரெட்டியார்
'வேங்கடம்'
அண்ணா நகர், சென்னை-600 040.

ஆதி மனிதர்கள் தம் பல்வேறு உணர்ச்சிகளை முதன் முதலாக வாய்மொழியாகக் கவிதை வடிவில் வெளிப் படுத்தியதாகக் கொள்வர் திறனாய்வாளர்கள். இவை இன்ப துன்ப உணர்ச்சிகள், பக்தி உணர்வுகள், கேளிக்கைகள் முதலியவையே பாடல்கள் வடிவில் வெளிப்பட்டனவாக அவர்கள் கருதுவர். இன்ப உணர்ச்சியின் வெளிப்பாடாகத் தெம்மாங்குப் பாடல்கள் பிறந்தலையும், துன்ப உணர்ச்சி யின் வெளிப்பாடாகத் ஒப்பாரிப் பாடல்கள் முதலியன முகிழ்த் தலையும் காண்கின்றோம். இங்ஙனம் தொடக்கக் காலத்தில் ஆதிமனிதர்களின் பல்வேறு உணர்ச்சிகளை வெளிப்படுத்த முயன்ற முயற்சியின் விளைவே தொன்மை இலக்கியங்களாகும். அவை எழுத்து வடிவம் பெறாமல் மக்களிடம் வழங்கி வந்தன. அந்த நிலையில் அவை 'வாய்மொழி இலக்கியங்களாக'—வாழ்வு இலக்கியங்களாக வழங்களாயின.

இவ்வாறு மக்களிடையே வழங்கி அச்சுவடிவில் வெளி வந்த இலக்கியமே நாட்டுப்புறப் பாடல்களாகும். இவை உயிராற்றலுடன் மிளிர்பவை; இவை கணக்கற்றவை. இப்

போதும் சிற்றூர்களில் இருந்து வருபவை. ஊர்தோறும் பல்வேறு பாடல்கள் உள்ளன. இவற்றைத் தொகுத்தால் நூற்றுக்கு மேற்பட்ட புத்தகங்களாக வெளிவரலாம். இது வரையில் பத்துக்கு மேற்பட்ட தொகுப்புகள் வெளி வந்துள்ளன. வானமாமலை, கி. வா. ஜகந்நாதன், இலங்கை இராமலிங்கம் முதலானவர்களின் தொகுப்புகள் குறிப்பிடத்தக்கவை. இவற்றுள் பல நல்ல பாடல்கள் அடங்கி யிருப்பதைக் கண்டு மகிழலாம்.

நாட்டுப்புறப் பாடல்களில் இலக்கியத்தின் எல்லாக் கூறு களும் அடங்கியுள்ளன. பழங்கால இலக்கியத்திற்கு அக்காலத்து நாட்டுப்புறப் பாடல்களே தாயாக—உயிர்நாடி யாக—அமைந்து அதன் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் காரணமாக இருந்தன என்று கூறலாம். இன்றும் இயற்கை யோடு ஒட்டி வாழும் நாட்டுப்புற மக்களின் இயல்பான உணர்ச்சிகளில் உள்ள புதுமைகளை நாட்டுப்புறப் பாடல் களில் கண்டு மகிழலாம். உணர்ச்சிச் செல்வம், கற்பனை வளம், வடிவழகு முதலியவற்றை நுகர்ந்து களிக்கலாம். இவற்றில் மக்களின் பேச்சு வழக்கில் உள்ள கொச்சைச் சொற்கள், சொற்களின் திரிபுகள் பலவாகச் செறிந்துக் கிடப்பதைக் காணலாம்.

இங்ஙனம் மக்களிடையே வாழும் நாட்டுப்புறப் பாடல் களின் சில கூறுகளை மாணிக்க வாசகர், திருமங்கை யாழ்வார் போன்ற அருட்செல்வர்களும் தம் பாடல்களில் கையாண்டு தம் இலக்கியங்களை வளப்படுத்தியுள்ளமை கண்டு சிந்திக்கத் தக்கது. திருவாசகத்திலுள்ள "திருப்பொற் சுண்ணம்" 'திருக்கோத்தும்பி' 'திருச்சாழல்', "திருப் பூவல்லி" முதலிய பாடல்களும்; பெரிய திருமொழியிலுள்ள 'பொங்கத்தம் பொங்கோ' 'குழமணி தூரம்', 'பழமொழி யால் பணிந்துரைத்த பாட்டு' முதலிய பாசுரங்களும் நாட்டுப் புறப்பாடல்களின் கூறுகளைக் கொண்டவை.

இந்த நூலிலுள்ள பாடல்கள் சித்தூர் மாவட்டத்தின் சிற்றூர்களில் மக்களிடையே வழங்கும் தமிழ், தெலுங்குப்

பாடல்கள் பல இடம் பெற்றுள்ளன. சித்தூர் மாவட்டம் இருமொழி வழங்கும் மாவட்டமாகும். மொழிவழி மாநிலங்கள் அமைந்த பிறகு எல்லைப்புற ஊர்களில் பிரிந்த மாநிலத்தின் மொழி வளர்ந்தும், மற்றைய மொழி தேய்ந்தும் வரும் போக்கையும் காணலாம். இந்த நூலில் இந்நூலாசிரியர் டாக்டர் ஜா. மனுவேல் பக்திப் பாடல்களையும் வழிபாட்டு முறைகளையும் மட்டிலும் தொகுத்து அளித்துள்ளார். சித்தூர் மாவட்டத்தைச் சேர்ந்தவராதலால் அவருக்கு இருமொழிப் பயிற்சியும் உண்டு. சேர்ந்து ஒன்றி வாழும் தமிழ், தெலுங்கு மக்களிடையே வாழும் பாடல்களும் கிட்டத்தட்ட ஒரே பொருளுடையனவாகத் திகழ்வதில் வியப்பில்லை. ஒரு சில எடுத்துக்காட்டுகள் :

## விநாயக வணக்கப் பாடல்கள் (பக். 32)

தமிழ் :

குள்ள விநாயகரே வாரும்
குண்டு விநாயகரே வாரும்
செல்லப் பிள்ளையாரே வாரும்
திருவடியே சரணம் சரணம்

தெலுங்கு :

போத்து கணநாதா ராவே
பொட்டி கணநாதா ராவே
கன்னெத்து ஜடுமு
கான தேனி மகமனு

கிட்டத்தட்ட ஒரே பொருளுடையன இவை.

## இராமபக்தி பற்றியவை (46-47)

தமிழ் :

ஆதியும் ராமனே
அந்தமும் ராமனே
அயோத்தி மன்னனே
லோக மெல்லாம் நீயே—அந்த
பூலோக மெல்லாம் நீயே
காடும் நீயே—ராமா
காட்டுப் பூவும் நீயே
கடலும் நீயே ராமா
.............................

தெலுங்கு :

அந்த்தா ராம மயம்
ஜகமந்த்தா ராம மயம்
அந்தரங்க முனா
ஆத்ம ராமுடு
அனந்த ருப்பமுனா
விந்த்த ராமுடு ஜகமந்த்தா
நதுலு வனம்புலு
நாநா மருகபுலு
விதித கர்மமுலு
வேத சாஸ்திரமுலு
அன்னியு ராமமயம்
மனக்கேதி பயம்

இங்ஙனமே சூரிய வழிபாடு, மாவழிபாட்டில் அரசமரம், வேப்பமரம், துளசிசெடி முதலியவைகட்கும்; உயிரின வழி பாட்டில் நாகத்திற்கும் தமிழ்—தெலுங்கு பாடல்கள் உள்ளன. பெருந்தெய்வ வழிபாட்டில் சிவன், சக்தி, முருகன் இவர்கட்கும் இருமொழியிலும் பாடல்கள் உண்டு. விரதங் களில் வரலட்சுமி விரதம், கௌரி விரதம், கிராம

தேவதைகள் விரதம் இவற்றிற்கும் பாடல்கள் இருமொழி களிலும் உண்டு.

பாடல்கள் காட்டுவதைத் தவிர, கிராம தேவதை கட்குப் பூசை செய்யும் முறைகள், மந்திரச் சடங்குகள், பிரார்த்தனை முறைகள், பலி, நரபலி, கங்கையம்மனை ஆராதிக்கும் முறை, பல இடங்களில் கங்கையம்மனை ஆராதிக்கும் முறைகள், திரௌபதி தேவி, மாரியம்மன், தேசியம்மா, நாகபிலம்மா காட்டேரி, சௌடேசுவர அம்மன், முனீசுவரன், உப்பர தேவதை போன்ற தேவதைகளின் வழிபாட்டுமுறைகளும் விளக்கப் பெறுகின்றன.

நூல் எழுதுவதில் இந்நூல், ஆசிரியரின் கன்னி முயற்சி யின் விளைவு. இன்னும் சற்று சிந்தனையைச் செலுத்தி யிருந்தால், நூலின் அமைப்பு முறை நன்கு அமைந்திருக்கும். 'கூறியது கூறல்' குற்றத்தையும் தவிர்த்திருக்கலாம். நடையையும் பாங்குற அமைந்திருக்கலாம். எழுத்துப் பிழை களையும் தவிர்த்திருக்கலாம். நூல் நல்ல நகரமைப்பு போல் அமைத்திருக்க வேண்டும். பழங்கால சேரி போன்ற அமைப்பு காணப்பெறுகின்றது. அவசரமாக நூல் எழுதி அவசரமாக அச்சேற்றும் முறையை இந்த ஆசிரியர் தவிர்க்க வேண்டும். இம்முறையை மேற் கொண்டால், தாம் பெற்ற பட்டங்கட்கும், தாம் பணிபுரியும் இடத்திற்கும் ஒரு மரியாதை கிடைக்கும். இந்த முறையைக் கடைப் பிடித்தால் இந்த ஆசிரியருக்கு நல்ல எதிர்காலம் உண்டு. இவர் முயற்சி வாழ்க; அதில் வெற்றியும் பெறுக என வாழ்த்துகிறேன்.

'வேங்கடம்'
AD-13, அண்ணா நகர்
சென்னை-600 040
விசயதசமி
அக்டோபர் 23, 1993.

ந. சுப்புரெட்டியார்

# அணிந்துரை

டாக்டர் பொன். சௌரிராசன்
முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்
திருப்பதி. ஆ.மா.

இன்ப துன்பங்கள் உயிர்களை இயக்குகின்றன. பேசத் தெரிந்த மனிதன் துயரப்படும்போதும், மகிழும்போதும் வாய்விட்டு அழும்போதும் மனம் விட்டுச் சிரிக்கும்போதும் அவன் பயன்படுத்துகின்ற மொழி ஏக்கமும் எழுச்சியும் உடையதாகிப் பாடல்களாய் அமைகின்றன. அந்த இன்ப துன்பங்கள் ஓரினத்திற்குப் பொதுவானவையாக அல்லது ஒரு பொது நிகழ்ச்சியைச் சார்ந்தனவாக அமையும்போது பொதுப் பாடல்களாக உருவாகின்றன, அவ்வாறு உருவாகிய பொதுப் பாடல்கள் அந்த இடத்தின் தனித் தன்மைகளைப் பெற்று அந்த இனத்திற்கே உரிய, அது வாழ்ந்த அல்லது வாழும் எல்லைக்கே உரிய இயல்புகளைப் பெற்றுத் திகழ்கின்றன. இத்தகு பாடல்களை நாட்டுப்புறப் பாடல்கள் என்கிறோம்.

இந்த நாட்டுப்புறப் பாடல்கள் மனிதனின் இயல்பூக்கங்களாகிய காதல், பசி, கோபம், தாபம் இவற்றை அடிப்படையாகக் கொண்டு தோன்றின. காலப்போக்கில் மனிதனுக்குக் கடவுள் நம்பிக்கை வந்தபோது காதலின் ஒரு கூறு பக்தியாக வடிவெடுத்து நாட்டுப்புறப் பாடல்களில் இடம் பெற்று விட்டது. அத்தகு நாட்டுப்புறப் பக்திப் பாடல்கள் கால இட இனச் சூழலுக்கேற்ப சில வேறுபாடுகளையும் கொண்டு அமைந்தன.

இத்தகைய பொதுத் தன்மைகளையும், தனிச் சிறப்புக் களையும் கண்டறிவது மானுடவியல் பண்பாட்டுத் துறைக்கும், மொழியியல் துறைக்கும் பெரிதும் பயன்படும். அத்தகு நல்ல முயற்சி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்

தமிழ் விரிவுரையாளர் முனைவர் ஜா. மனுவேல் அவர் களால் இந்த நூலில் மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

பொருளாதார, சமுதாயச் சிக்கல்கள், சீர்கேடுகள் பல இந்த பக்திப் பாடல்கள்வழி ஆசிரியரால் கண்டுபிடிக்கப் பட்டு வெளியிடப்பட்டுள்ளன. வறுமை எதையும் உண்ணச் செய்கிறது. வளமை தேர்ந்தெடுத்து உண்ண உதவுகிறது. வழிபாடுகளிலும் வறியவர்கள் எல்லாவற்றையும் தங்கள் வழிபடும் தெய்வங்களுக்குப் படைக்க, வளமானோர் தெரிந் தெடுத்த சில பொருட்களையே படைப்பதை இந் நூலாசிரியர் தெளிவுபட விளக்கியுள்ளார்.

வறுமையாலும், அறிவின்மையாலும் மென்மையும் திண்மையும் குறைந்த ஏழை எளிய சேரி மக்கள் அச்சத்தா லும் அடிமைத்தனத்தாலும் அஞ்சியும், பயந்தும் வழிபடும் போது காடனும், மாடனும், வீரனும், சூரனும், மாரியும், காளியும் இவர்கள் வழிபடும் தெய்வங்களாக அமைகின்றன. வளமும் அறிவும் படைத்தோர் அமைதியையும், சிந்திக்கும் ஆற்றலையும் வளர்த்துக் கொண்டோர் தத்துவங்களை உருவாக்கி அதற்குத் தெய்வ வடிவங்களைக் கற்பித்து அந்தணர்களைக் கொண்டு வழிபாடு செய்கின்றனர். அந்தத் தாழ்ந்த மக்களுடைய வேண்டுகோள்களையும், இந்த உயர் சாதி மக்களின் குறிக்கோள்களையும் ஆசிரியர் சுட்டிச் செல்கின்றார். அவர்களுக்குச் 'சோறு' சொர்க்கமாக இருக்க, இவர்களுக்குச் சொர்க்கமே 'சோறு' ஆக அமைவது இந்த ஆராய்ச்சியால் புலப்படுகின்றது.

மொத்தத்தில் ''சித்தூர் மாவட்ட பக்திப் பாடல்களும் வழிபாடுகளும்'' என்னும் நூல் ஒரு குறிப்பிட்ட இடத்தைச் சார்ந்த, காலத்தைச் சார்ந்த மானுடத்தின் வரலாற்றை, வாழ்வை, சமுதாயத்தை, சமயத்தை மீட்டுருவாக்கம் செய்து நமக்கு வழங்குகின்றார் இந்நூலாசிரியர்.

—பொன். சௌரிராசன்

# நூல்முகம்

நான் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் முதுகலைப் பட்டப் படிப்புக்குச் சேர்ந்த பொழுதே இலக்கியத்துறையில் அதிக ஈடுபாடு செலுத்தினேன். சிறுவயது முதல் நடிப்பிலும் இசையிலும் அதிகமான ஆர்வம் எனக்குண்டு. ஏற்ற நபர்கள் எனக்குக் கிடைக்காத காரணத்தால் ஏமாற்றம் கண்டேன்.

நாவல் எழுதுதல், சிறுகதை படைத்தல், நாடகம் எழுதுதல் போன்றவற்றிலும் ஈடுபாடு அதிகம்; அதன் மூலம் வெற்றி வாய்ப்பும் கிட்டியது.

ஆய்வுத் துறையில் அடியெடுத்து வைத்த எனக்கு நாட்டுப்புறப் பாடல்களில் ஈடுபாடு அதிகமாகியது. முற்றிலும் கிராமத்துச் சூழ்நிலையில் வளர்ந்த நான் கிராமியப் பாடல்களைப் பாடிய நபர்களின் சாயலாகவே பாடுவேன். இதனைக் கேட்ட பல அறிஞர் பெருமக்கள் பாராட்டத் தவறியதில்லை. இப்படியாகக் காலம் உருண்டோட முதல் முயற்சியாக ''சித்தூர் மாவட்ட பக்திப் பாடல்களும் வழிபாடுகளும்'' என்ற தலைப்பில் தமிழ் இலக்கிய மாந்தர்களுக்கு என்னை அறிமுகம் செய்ய எண்ணி முடிவுக்கு வந்தேன். முற்றுப் பெற்ற நாளில் மகிழ்வும் எய்தினேன்.

இந்நூலில் மூன்று சிறப்பு நிகழ்ச்சிகளை வாசகர்களுக்குப் படைத்துள்ளேன்.

முதலாம் இயலில் பக்திப் பாடல்களின் தோற்றம், வரலாறு, சிறப்புச் செய்திகள், தன்மைகள், நாட்டுப்புறப் பாடல்களிலிருந்து சற்று வேறுபடும் தன்மை போன்றவற்றைச் செவ்வனே விளக்கிச் சென்றுள்ளேன்.

இரண்டாம் இயலில் கிராம தேவதைகளின் பூசை முறைகள் விளக்கப்பட்டுள்ளன. ஆந்திரத்தில் உள்ள சித்தூர் மாவட்டத்தில் தமிழரும் தெலுங்கரும் சேர்ந்து வாழ்கின்றனர். அவர்களுக்கிடையே வேறுபாடு கொள்ளும் பூசை முறைகள், பழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், காரணங்கள் முதலானவை சொல்லப்பட்டுள்ளன.

மூன்றாவது இயல் புத்தூரும் புரட்சியும்' என்பதாகும் நூலாசிரியர் சிறு வயது முதல் தமது உயிர் நண்பரான எம். விஜயன் அவர்களின் நட்பினைக் கைவிட நினையாது நண்பரின் சொந்த கிராமமான பாலகிருஷ்ணாபுரம் புத்தூரில் வாழ்ந்தபோது பண்டிகை நாட்களிலும், மற்றும் சிறப்பாகப் புரட்டாசி மாதங்களில் அய்யர்கள் மேற்கொள்ளும் பூசை முறைகள், விழாக்கள் செயல் வீரர்களின் செயல்பாடுகள் போன்றவை சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன.

ஆக, என்னுடைய கன்னி முயற்சிக்குத் தமிழக மக்களின் ஆதரவும், அன்பும் எனக்குப் பெரும்பான்மை கிட்டும் என நம்புகிறேன். நான் தொடர்ந்து இந்தப் பணியில் வெற்றி பெற இறைவனிடம் மன்றாடி வேண்டிக் கொள்கிறேன்.

முனைவர் ஜா. மனுவேல்

# நன்றியுரை

ஒரு மொழி இலக்கியத்தைக் கற்பதைவிடப் பலமொழி இலக்கியங்களையும் தெரிந்து வைத்துக் கொள்வது பல நிலைகளிலும் சிறப்பினை நல்கும் என்பது திண்ணம். வளர்ந்து வரும் இலக்கியத் துறையில் ஒப்பியல் என்பது தற்காலத்தில் எல்லா பல்கலைக் கழகங்களும் வரவேற்கப் படும் இலக்கியமாகத் திகழ்கின்றது. ஒப்பிலக்கியத் துறையில் ஆர்வமுடைய எனக்கு நாட்டுப்புறவியலில் தமிழையும், தெலுங்கையும் ஒப்புமைப்படுத்தி ஆய்வு மேற்கொள்ள வழியமைத்து நல்கிய திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைக்கு நான் என்றும் நன்றி சொல்லக் கடமைப் பட்டிருக்கிறேன். சித்தூர் மாவட்ட நாட்டுப்புற மக்களின் பக்திப் பாடல்களையும், பூசை முறைகளையும் அச்சு வடிவேற்பதற்கு முழு ஆதரவு கொடுத்த பேராசிரியர். பொன். சௌரிராசன் அவர்களுக்கு நன்றி.

எனது ஆய்வுப்பணி சிறக்கவும், காலத்தே இனிது முடிக்க வும் துணையாய் நின்ற பேராசிரியர் தானியேல் தேவ சங்கீதம் அவர்களுக்குநன்றி. சென்னையில் உள்ள மூவேந்தர் அச்சகத்திற்கு என்னை அறிமுகப்படுத்தி நூல் வடிவம் பெற முழு ஆதரவு அளித்த பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களுக்கு நன்றி. எனது பணிக்கு ஆக்கமும், ஊக்கமும் நல்கிய தமிழ்த் துறைத் தலைவர் ஆர். மனுவேல் அவர் களுக்கு நன்றி. இந்நூல் அமைவதற்கு உதவியாக இருந்த பேராசிரியர் தர்மாரெட்டி, முனைவர் ரகுபதி, முனைவர் வரதராசன் ஆகியோருக்கும் நன்றி. முதன் முதலாக என்னை திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கு அறிமுகப் படுத்திய சி. இராசேந்திரன் அவர்களுக்கு நன்றி.

இப்புத்தகம் வெளியிடுவதற்கு ஆலோசனை வழங்கிய நண்பர்கள் பீமாஸ் ரவி, இரவீந்திரன், சம்பத்குமார், டாக்டர் சுப்பிரமணியம் ஆகியோர்க்கும் நன்றி.

மேலும் திருப்பதியில் என்னுடன் இன்பத்திலும், துன்பத்திலும் பங்கு கொண்ட நண்பர் கணேசன் அவரது துணைவியார் ஞானசவுந்திரிக்கும் நன்றி.

நான் சோர்வு அடையும் போதெல்லாம் எனக்கு ஊக்கம் அளித்த நண்பர்கள் M.மாணிக்கம் சுப்தார் மேஜர், P. விஜயன், S. செல்வராஜ், M. விஜயன், T.M. நிஜாம், T.M. முத்திலிபா, G. அமிர்தராஜ் ஆகியோர்க்கும் நன்றி. எழுதும் போது எனக்கு உதவியாக இருந்த மாணவர்கள் பாஸ்கர், குமார், செந்தில், கோபாலகிருஷ்ணன், முருகன், சீனிவாசன், ஜகந்நாதன், முரளி,கார்த்திக், முனிகிருஷ்ணன், வெங்கடேசன், ராபியா, சர்மிளா, ஹேமலதா, பார்வதி, விஜயலட்சுமி ஆகியோருக்கு நன்றி.

எனக்குப் பெரும் உதவியாக இருந்த உடன் பிறப்புகள் J. ஏசுபாதம், J. வளர்மதி ஆகியோருக்கும் நன்றி. நூல் வடிவுக்கு உதவிய மூவேந்தர் அச்சகத்தாருக்கு நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். எனது ஆய்வு நூல் வடிவில் வெளிவர உதவியாயிருந்த சப்தகிரி இராமமூர்த்தி அவர்களுக்கும் எனது நன்றி.

—ஆசிரியர்

# உள்ளுறை

# சித்தூர் மாவட்ட
# பக்திப்பாடல்களும்—வழிபாடுகளும்

## பக்திப் பாடல்கள்

பஞ்சபூதங்கள், சூரியன், சந்திரன், விண்மீன்கள், மலைகள், நதிகள், மழை, இடி, மின்னல், காற்று முதலிய இயற்கையிலுள்ள புதுமைகளை மறுக்கவோ மாற்றவோ முடியாது. காடுகளை அழித்து உழுது பயிர் செய்து பலனடைய நினைக்கும் பலமற்ற மனிதன், தன்னைச் சூழ்ந்துள்ள அளவிட இயலாத இயற்கைச் சக்திகளால் தனக்கும், தனது பயிர்களுக்கும், ஆடு மாடுகளுக்கும் தீங்கு விளையுமெனப் பயந்தான். இவ்வாறு பயமடைந்த தன் மனத்தைத் திடமடையச் செய்யவும், தன்னைச் சூழ்ந்துள்ள இயற்கை, மகிழ்வு கொண்டு தனக்குத் தீங்கிழைக்காதிருக்கு மாறும், உதவி செய்யுமாறும் துதி பாடினான். இதுவே மனிதன் தனக்குப் புறம்பாகவுள்ள சக்திகளைப் பற்றி நினைக்க, துதிக்க ஆரம்பித்த வரலாறு என நாட்டுப்புறவிய லறிஞர் கூறுவர்.[1] இதிலிருந்து அச்சமும் நன்றியறிதலும் வழிபாட்டின் காரணங்கள் என்பதை அறிந்து கொள்ளு கின்றோம்.

நாட்டுப்புறப் பாடல்களில் பல பக்திப் பாடல்களாகத் திகழ்கின்றன. தொழிற் பாடல்களிலும், கொண்டாட்டப்

பாடல்களிலும் பக்திப் பாடல்கள் இடம் பெறுகின்றன. இவை அப்பாடல்களில் முதலிடத்தைப் பெற்றுத் திகழ் கின்றன. இப்பாடல்களைத் துதிப்பாடல் என்றும் வழங்குவ துண்டு. தெலுங்கிலும் 'பக்திப் பாட்டலு' என்றும், 'பாரமார்த்திக்ககேயாலு' என்றும்அழைக்கின்றனர். தமிழ்ப் பாடல்களைப் போன்றே தெலுங்கிலும் பணிபாட்டலு (தொழிற்பாடல்) 'வேடுக்கப்பாட்டலு' (கொண்டாட்டப் பாடல்கள்) போன்ற பாடல் வகைகளுள் பக்திப் பாடல்கள் முதலிடத்தைப் பெற்று வருகின்றன. தாலாட்டுப் பாடல் களிலும் இறைவனைக் குழவியாக நினைத்துப் பாடுவதாகப் பாடல்கள் கிடைத்துள்ளன.

தமிழ், தெலுங்கு இலக்கியங்களில் தனியாகப் பக்தி இலக்கியங்கள் இருப்பது போன்று நாட்டுப்புறப் பாடல்களி லும் பக்திப் பாடல்களைக் காண முடிகிறது. இவ்வியலில் தமிழ் இயற்கை வழிபாட்டுப் பாடல்களோடு தெலுங்குப் பாடல்களை ஒப்பிட்டு ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது. மேலும் சைவ சமயப் பாடல்களும், வைணவ சமயப் பாடல் களும் தெலுங்கு மொழிப் பாடல்களோடு ஒப்பிட்டு ஆய்வு செய்யப்படுகிறது. சிறு தெய்வ வழிபாடு என்ற பகுதியில் கிராம தேவதைகளுக்குத் தமிழர் செய்யும் சடங்குகளும் தெலுங்கர் செய்யும் சடங்குகளும் ஒப்பிடப்படுகின்றன.

மேலும்,இம்மாவட்டத்தில் தமிழர்களால் நடத்தப்படும், விழாக்கள், தெலுங்கரால் நடத்தப்படும் விழாக்கள், தமிழ்—தெலுங்கு மக்களாய் சேர்ந்து நடத்தப்படும் விழாக் கள், உற்சவங்கள், தெய்வங்களுக்கு இம்மக்கள் மேற் கொள்ளும் சடங்குகள், பொருத்தனைகள், பூசைகள் ஆகிய நிகழ்ச்சிகள் இவ்வியலில் ஒப்பீட்டு ஆய்வு செய்யப்படு கின்றன.

## பக்திப் பாடல்களின் அமைப்பு :

நாட்டுப்புறங்களில் பாடப்பட்டு வரும் பக்திப் பாடல்கள் அனைத்தும், மக்கள் தங்களது இயலாமையையும், தேவையையும், சடங்குகளையும் வெளிப்படுத்துவனவாகவே அமைந்துள்ளன. மக்கள், இறைவனுக்கு மேற்கொள்ளப் படும் பூசைகள், விழாக்கள், படைத்தல், பொருத்தனை செய்தல் போன்றவற்றைப் பற்றிய குறிப்புகள் அப்பாடல் களில் ஒருங்கே அமையப்பெற்றுத் திகழ்கின்றன. மேலும் தேவதைகளைப் பற்றிய கதைகள் புராணச் செய்திகள் போன்றவையும் இப்பாடல்களில் அடக்கம் பெறுகின்றன. பக்தர்களின் மன நிலைக்குத் 'தகுந்தவாறும், மேற்கொள்ளப் படும் நிகழ்ச்சிகள், சடங்குகள் போன்றவற்றிற்குத் தகுந்த வாறும், இப்பாடல்கள் தமிழிலும், தெலுங்கிலும் குறுகியும் நீண்டும் செல்வதைக் காண முடிகின்றது. இப்பாடல்களைத் தனிமையில் ஓர் ஆள் மட்டும் பாடுவதுண்டு; குழுவாகச் சேர்ந்தும் பாடுவர்.

## பக்திப் பாடல்களின் தன்மை :

நாட்டுப்புறங்களில் பாடப்பெறும் பக்திப் பாடல்கள் நாட்டுப்புறத் தன்மையாக மட்டுமல்லாது இலக்கிய வடிவ மேற்றும் பாடப்படுகின்றதைக் காணலாம். இப்பாடல்கள் பாடுவதற்கு எளிமையாகவும் இனிமையாகவும், பக்தி உணர்வைப் புகட்டி மெய்சிலிர்க்க வைக்கும் தன்மைகளைக் கொண்டும் விளங்குகின்றன. இத்தகைய தன்மைகளைக் கொண்ட பாடங்களைத் தமிழ் பக்திப் பாடல்களிலும் காண லாம். இப்பாடல்கள் சொல்ல விரும்பும் கருத்துகளை எவ்விதமான ஒளிவு மறைவின்றி வெளிப்படுத்துகின்றன.

ஒவ்வொரு பாடலுக்கு முதலிலும் இறுதியிலும், கந்தா முருகா, கடம்பா, கார்த்திகேயா, வடிவேலா, விநாயகனே,

தொந்திக் கணபதியே, கடவுளே, சிவனே, அரகரா, ஓம்சக்தி பராசக்தியே, தாயே, மாரி, காளியே, தூளியே, வேலவா, சண்முகா, பெருமாளே போன்ற கடவுட் பெயர்களைக் கொண்டு தமிழில் பாடப்படுவது போன்று தெலுங்கிலும் எங்கடேசா, திருமலேசா, ஸ்ரீநிவாசா, மாதம்மா, ரேணுகா, திரௌபதியம்மா, கங்கம்மா, வினாயகா, பார்வதியம்மா, சிவுடா, ராமுடா, தேவுடா போன்ற கடவுட் பெயர்கள் பாடலுக்கு முதலிலும், இறுதியிலும் கையாளப்படுவதைக் காணலாம்.

## பக்திப் பாடல்களின் தனிச் சிறப்புகள் :

நாட்டுப்புற மக்களின் மனோதத்துவத்தையும், இறைவன் மேல் அவர்கள் கொண்டுள்ள பக்தியையும், அந்தந்த நாடுகளிலுள்ள மத சம்பந்தமான வளர்ச்சியினையும், சடங்குகளையும் பரலோகத்தின்மீது பூலோகத்தவர் கொண்டுள்ள நம்பிக்கையையும் வெளிப்படுத்தும் பக்திப் பாடல்கள் மற்ற நாட்டுப்புறப் பாடல்களைவிட தனித் தன்மைகளைப் பெற்றுத் திகழ்கின்றன.

1. பக்திப் பாடல்களை அனைவரும் உருவாக்க இயலாது. குடும்ப வாழ்க்கையில் இன்பத்தையும், துன்பத்தையும் அநுபவத்தின் மூலமாகத் தெரிந்து கொண்டு, இல்லற வாழ்க்கையில் வெறுப்படைந்துஇறைவனுடைய திருவருளை அடைய வேண்டுமென்ற விருப்பமுடையவனும், முற்றும் துறந்தவனுமான நாட்டுப்புறத்தான் தன்னுடைய மனக் கண் முன் நின்ற நன்மைகளையும், தீமைகளையும் வெளிப் படுத்துகிறான். இறைவன்பால் பக்தியில்லாத சாதாரண மனிதன் இப்பாடல்களை உருவாக்க இயலாது.

2. பக்திப் பாடல்களை உருவாக்குபவர்களுக்குச் சில தனிப்பட்ட தன்மைகள் இருக்கின்றன. பாவத்தின்மீது பயம், பரலோகத்தின்மீது நம்பிக்கை, வழிபாட்டின் மூலமாக பூலோகத்தில் நல்ல வாழ்க்கை அமைகிறது என்ற

நம்பிக்கையுடையவர்களும் மனிதனுக்கு அப்பாற்றபட்ட சக்திகளுக்குப் பயப்படுகிறவர்களும், வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்ட பிச்சைக்காரர்களும், முதியோர்களும் சிறுவயதில் நற்கிரியையைப் பெற்றவர்களும் அதிகமாகப் பக்திப் பாடல் களைப் பாடுவர்.

3. பக்திப் பாடல்கள் களைப்பைப் போக்கவும், உற்சாகத்தை ஏற்படுத்திக் கொள்ளவும் பாடப்பட்டவைகள் அல்ல. இப்பாடல்கள் ஆலோசனைக்கும் அறிவுக்கும் உட்பட்டவை. மனிதனின் ஆன்ம ஈடேற்றத்திற்குப் பாடப் படுபவை.

4. தனிப்பட்ட படைப்பாளி இல்லை என்பது நாட்டுப்புறப் பாடல்களின் தன்மைகளுள் ஒன்றாகும். இக்கருத்து பக்திப் பாடல் சிலவற்றிற்கு ஒவ்வாமல் போய் விடுகின்றன. வேதங்களிலும், உபநிடதங்களிலும், புராணங்களில் இருக்கும் விசேட செய்திகளை நாட்டுப்புற மக்களுக்குத் தெரிவிப்பதற்காகவும் மக்களை நீதிநெறிகளில் நடப்பித்து ஒழுக்கங்களைப் புகட்டவும், வட்டாரக்கிளை மொழியில்சிலர் வேதாந்தத் தத்துவங்களை எழுதினர். தேவ வரம்பெற்ற அந்தணர்கள் தம்முடைய உள்ளத்தில் ஏற்பட்ட இறைவனைக் குறித்த வெளிப்பாட்டினை மக்கள் பாடும் படியாகப் பாடல்கள் எழுதினார்கள். அப்பாடல்களை மத குருக்கள், மடாதிபதிகள், சீடர்கள் போன்றோர் மக்களிடையே விளம்பரப்படுத்தினார்கள் அப்பாடல்களுள் சிலவற்றை அச்சு வடிவமேற்றினர். அவையே இன்று நாட்டுப்புற மக்களிடையே பக்திப் பாடல்களாகப் பாடப் பெற்று வருகின்றன. இதன் மூலமாகச் சில பக்திப் பாடல் களுக்குத் தனிப்பட்ட கவிஞன் இருந்திருக்கலாம் என்பது உறுதியாகிறது.[2] இங்கே இயற்றியவரைவிட, அப்பாடல்கள் நாட்டுப்புறத்தில் எந்த அளவுக்குப் பரவியுள்ளது? நா. பு பாடல்களின் தன்மைகளைப் பெற்றுள்ளனவா? இல்லையா? என்பதே முதன்மையானதாகும்.

5. இறைவன்பால் பற்று உள்ளவர்களாலும், எழுத்தறிவுள்ளவர்களாலும், அக்காலத்திலே பாடப்பட்டு வந்த பக்திப் பாடல்களையும், வேதாந்தப் பாடல்களையும் பனை ஓலைகளில் எழுதி வைத்தனர். இப்படிப்பட்டவைகளைத் திருப்பதியிலும், சென்னையிலும், கீழ்த்திசைப்புல நூலகத்திலும் வைத்துள்ளனர். அவற்றில் இன்று கிராமங்களில் கிராம மக்களால் பாடப்படும் பாடல்களும் உள்ளன.

## வகைப்பாடுகள் :

பக்திப் பாடல்களை நாட்டுப்புறவியலறிஞர்கள் பலர் பல விதமாகப் பாகுபாடு செய்துள்ளனர். ஆனால் அவ்வறிஞர்கள் தாங்கள் சேகரித்த பாடல்களை மட்டுமே வைத்து வகைப்பாடு செய்துள்ளனர். சித்தூர் மாவட்டத்தில் கிடைத்துள்ள தமிழ்—தெலுங்குப் பக்திப் பாடல்களை மூன்று வகையாகப் பகுக்கலாம். அவை முறையே,

1. இயற்கையைப் பற்றிய பாடல்கள்
2. பெருந்தெய்வ வழிபாட்டுப் பாடல்கள்
3. சிறுதெய்வ வழிபாட்டுப் பாடல்கள் ஆகியவை.

அவ்வாறே தெலுங்கிலும்,

1. ப்ரக்குருதி பாட்டலு
2. சிஷ்டி தேவதலு குரிஞ்சின பாட்டலு
3. கிராம தேவதலுக்கு சம்பந்திஞ்சின பாட்டலு

என்ற மூன்று பிரிவுகளுக்குள் அடக்கலாம்.

# 7

## இயற்கையைப் பற்றிய பாடல்கள்

இயற்கையின் ஆற்றலைக் கண்டு அஞ்சிய மனிதன் அதனை வழிபடுவதன்மூலம் அதன் சீற்றத்திற்கு ஆளா காமல் இருக்கலாம் என்று நம்பினான். அதன் அடிப்படை யிலேயே இயற்கை வழிபாடுகளும் விழாக்களும் தோற்றம் பெற்றன. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மழை, நதிகள், நெருப்பு, காற்று, பிறப்பு, இறப்பு போன்றவை களைக் குறித்து ஆராய்ந்த மனிதர்கள் இவை அனைத்தும் காரணமின்றி ஏற்படும் பலம் வாய்ந்த சக்திகள் என்று நினைத்து அவற்றுக்குப் பயந்து வணங்க முற்பட் டான். அவற்றைத் திருப்திப்படுத்துவதற்காகக் கூட்டமாகக் கூடி பலவிதமான சடங்குகளை மேற்கொண்டான். அந்நேரம் பாடல்கள் முதன்மையான இடத்தைப் பிடித்தன. அந்தப் பாடல்களே இன்று நாட்டுப்புற மக்களினால் பாடப்பெறும் 'பக்திப் பாடல்கள்' என்பதாகும். மனித குலத்தின் உணர்ச்சி வெளிப்பாட்டிற்கு ஆதி மனிதர்கள் பாடல்களை ஒரு கருவி யாகப் பயன்படுத்தியுள்ளனர்[3] என்ற நாட்டுப்புறவிய லறிஞரின் கூற்று மேற் கூறப்பட்ட கருத்தினை அரண் செய் வதாக அமைகிறது.

மனிதன் தன்னில் விவேகமும் ஆய்வு மனப்பான்மையும் வளர்ந்த நிலையில் தனக்கு ஏற்படும் துன்பங்களுக்கெல்லாம் இயற்கையின் காரணமாய்ப் பிறக்கும் ஒருவித சக்தியே என்றும், அதன் விளைவாகவே மக்களுக்கு இன்பங்களும் துன்பங்களும் உண்டாகின்றன என்றும், முடிவான ஒரு நிலைக்கு வரலானான். தன்னுடைய பார்வைக்கும், அறிவுக்கும் அதிசயமானவைகளைத் தேவர்களாகப் பாவித்து அத்தெய்வங்களுக்கு முன் தன்னுடைய துன்பத்தையும், இயலாமையையும் கதை வடிவத்திலும், பாவாகவும் வெளிப் படுத்தினான். பண்டிகைகளும் பலிகளும் ஆற்றுவதன் மூலம் இயற்கையினை வசப்படுத்திவிடலாம் என்ற எண்ணத்தில் விழாக்களும், கொண்டாட்டங்களும் தோன்றின.[4] காலப்

போக்கில் இயற்கைக்கு உருவம் கொடுத்து வணங்கினர். மன வழிபாட்டிலும் உருவ வழிபாட்டிலும் புனிதமானவற்றைப் பூசை செய்து அவற்றைக் குறித்துப் பாடல்கள் இயற்றிப் பாடலானான்[5] என நாட்டுப்புறவியலர் கூறுவர்.

## சூரிய வழிபாடு :

இயற்கை வழிபாட்டில் முதலில் இடம் பெறுவது சூரிய வழிபாடும், சந்திரன் வழிபாடும் ஆகும். தெலுங்கில் 'சூர்ய நமஸ்காரம்', 'நெலவங்க' என்று வழியகுவர். நாட்டுப்புற மக்கள் இவ்வுலகத்தை இயக்குவது சூரியனே என நம்புகின்றனர். முழு முதற் கடவுளாகவும் எண்ணி, காலை எழுந்ததும், காலைக் கடனை முடித்துக் கொண்டு சூரியனை நோக்கி இருகரம் கூப்பி சூரியனுக்குத் துதி செலுத்துவதை இம்மாவட்டத்தில் வாழும் தமிழ் மக்களிடமும், தெலுங்கு மக்களிடமும் இன்றும் காணலாம். வயல்களில் வேலை செய்பவர்கள் தங்களுடைய வேலையைத் தொடங்கும் முன், சூரியனை நோக்கிக் கும்பிடுவதைக் காணலாம். மாசி மாதம் பௌர்ணமிக்கு முன் வரும் இரதசப்தமியன்று வீட்டைச் சுத்தம் செய்து வாசலில் பல வண்ணங்களில் கோலமிட்டு, கோலத்தின் நடுவில் சாணிப் பிள்ளையாரை வைத்து அவரது தலையில் பூசணிப் பூவை வைத்து, அப்பிள்ளையாரை மஞ்சளாலும், குங்குமத்தாலும் அலங்கரிப்பர்.

சூரியனுக்கு அன்று பால் பொங்கல் வைத்துப் படைப்பதுண்டு. பொன்னால் சூரியனைச் செய்தும், பித்தளையால் சந்திரனைச் செய்தும் கோயிலில் வைத்திருக்கும் விக்கிரகங்களுக்கு, ஆடை அலங்காரம் செய்தும் பலவிதமான அணிகலன்களை அணிவித்தும் பூசை செய்தும் சூரிய சந்திர தேவர்களுக்குத் தேன், வெல்லம், தேங்காய், பழம், பூ போன்றவைகளைப் படைத்தும் துதி செலுத்துவர். இந்நிகழ்ச்சிகளை சுமங்கலிகளும், பிள்ளைப் பேற்றை அடைந்தவர்களும்

முன்னின்று நடத்துதல் வேண்டும். மற்றவர்கள் அனுமதிக்கப் படமாட்டார்கள்.

இம்மாவட்டத்தில் இத்தகைய வழிபாட்டினைத் தமிழரைவிட தெலுங்கரே சிறப்பாகச் செய்கின்றனர். அவ்வமையம் சூரியனைப் பற்றியும், சந்திரனைப் பற்றியும் தமிழிலும், தெலுங்கிலும் பாடல்கள் பல பாடுகின்றனர். நல்ல விளைச்சலைப் பெற்றால்தான், நாட்டுப்புற மக்கள் நிம்மதியாக வாழ முடியும். நல்ல விளைச்சலைப் பெற வேண்டுமாயின் மழை இன்றியமையாதது. எனவே மழையைப் பொழிவிக்கும் தேவன் சூரியனே என நம்பு கின்றனர். மழையைப் பொழிவித்து 'எங்களுடைய இன்னலைப் போக்குக' என்று பாடுவர்.

''பஞ்ச குதர மேலே—சாமி
பறந்து வரார் பாரு
வெள்ள குதர மேல—சாமி
வேகம் வரார் பாரு

வெய்யிலும் கொளுத்துது
வேர்வையும் ஒழுகுது
வேடிக்க பாக்காத சாமி—எங்க
வேதனையை பாரு சாமி

மழையும் வரவில்லை—சாமி
மனக்கவல தீரவில்லை
குளமும் குட்டயும் நிரம்ப வேணும்—சாமி
குடி மக்கள் வாழ வேணும்—சாமி''

இது போன்ற தெலுங்குப் பாடல் ஒன்றும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

''சூரிடே சந்தருடே
சூர்யா தேமுடே
வினவய்யா நீ மீதா
பாட்டா பாடேனு

வானல்லு சூரி பிஞ்சு
வல்லா தேமுடா
பண்டல்லு பண்டிஞ்சு
பரம தேமுடா

பெல்லமு பொருகுலு
நீக்கு இச்சாமே
கஷ்டமுலு நஸ்டமுலு
கடகா தொலிகிஞ்சு

ஆவு நெய்யி கோவு நெய்யி
தீபம் பெட்டாமே—மாக்கு
ஆக்கலி லேகுண்டா
தீபம் பெட்டய்யா.''

என்று பாடுகின்றனர்.

'மழையைப்பொழிவிக்க வேண்டும். நல்ல விளைச்சலைப் பெறவேண்டும். வெல்லமும், பொரியும் படைத்துள்ளோம். எங்கள் துன்பத்தைத் தீரும். உம்முடைய ஆலயத்தில் பசு நெய்யால் விளக்கு ஏற்றியுள்ளோம். எனவே எங்களுடைய வீடுகளில் உள்ள பசி என்ற கொடிய நோய் நீக்கும் தீபத்தை வை' என்பது மேற்கண்ட தொலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும். தமிழ்—தெலுங்குப் பாடல்களில் உள்ள பொதுவான கருத்தை நோக்கும்போது மழையை வேண்டியே இரண்டு பாடல்களின் கருத்தும் அமைந்துள்ளமை தெரியவருகிறது.

சூரிய சந்திர வணக்கத்தில் இரு உள்ளங்களும் ஒன்றுபட்டிருப்பதைப் பாடல் வழி நன்கு உணர்ந்து கொள்ள முடிகிறது. தமிழருடைய சூரிய வழிபாட்டிலும், தெலுங்கருடைய சூரிய வழிபாட்டிலும் மேற்கொள்ளப் பெறும் சடங்குகள் இடத்திற்கிடம் சற்று வேறுபட்டுக் காணப்படுகின்றன. இதன் முக்கியக் காரணம் பொருளாதார

நிலைமையே என்று உணரலாம். சடங்குகள், வேறு பட்டாலும் அம்மக்களின் வேண்டுதல்கள் பொதுவாகவே உள்ளன என்பதை முடிவான ஒரு நிலையில் அறியலாம்.

## மர வழிபாடு :

நம் நாட்டில் எண்பது விழுக்காடு விருட்சப்பூசை(மரம், செடி, பூசை) செய்வோர் உள்ளனர். முக்கியமாக இம்மாவட்டத்தில் பெண்களே விருட்சப் பூசையை மேற் கொள்ளுகின்றனர். தேவாலயங்களுக்கு முன்பாகவும், நான்கு அல்லது மூன்று வழிகள் ஒன்று சேரும் இடத்திலும் உள்ள ஐம்மி மரம், அரச மரம், வேப்பமரம், ஆலமரம், வில்வ மரம் போன்ற மரங்களையும் துளசிச் செடியையும், பூசை செய்து வணங்குகின்றனர். தெலுங்கில், முறையே ஜம்மி மானு, ராகி மானு, வேப்பமானு, மரிமானு, மாரேடு மானு; துளசிமொக்கா என்று வழங்குகின்றனர். 'மானு' என்பது 'மரம்' என்ற சொல்லைக் குறிக்கும். தெலுங்கில் 'விருஷ பூஜ' என்பர். இப்பூசையை மேற்கொள்ள இம்மக்கள் தனிப்பட்ட நாளையோ, காலத்தையோ, ஏற்படுத்திக் கொள்ளவில்லை. அவரவர் விருப்பப்படி இம்மரங்களுக்குப் பூசையைச் செய்கின்றனர்.

## மர வழிபாடு தோன்றக் காரணம் :

வழிபாட்டின் அடிப்படை அச்சமும், அன்பும், ஆகும். அச்சம் எல்லா உயிர்களுக்கும் உரிய இயல்பு நிலை. அன்பு, நன்றி என்பன சிந்தனையின் வளர்நிலை. எனவே, ஆதி மனிதனின் முதல் உணர்வு நன்றி, அன்பு என்பதை விட 'அச்சம்' எனக் கொள்ளுதலே பொருத்தமுடையாதாகும். ஆகவே, ஆதி மனிதனின் ஆதி இயல்பு அச்சம், வழிபாட்டின் முதல் அடிப்படையும் அச்சமே. அடுத்த அடிப்படைகளே அன்பு, நன்றி ஆகியன.

அன்பு, அச்சம் ஆகிய பொதுக்காரணங்கள் மட்டுமின்றி வேறு சிறப்புக் காரணங்களும் மரவழிபாட்டின் அடிப்படைகளாக இருந்திருத்தல் வேண்டும்.

## மரத்தால் விளையும் நன்மைகள் :

### 1. மரம் உணவு தந்தமை :

மனித மனத்தில் மரம் பற்றிய மதிப்பும் நன்றியும் தோன்றியமைக்குத் தலைமைக் காரணம், மரம் மனிதனின் வயிற்றுப் பசிக்கு வழி செய்தமையாகும். மரத்துக் காய்கள், கனிகள், ஆகியன உணவு தேடும் மனிதனுக்கு உணவளித்து உதவின. ஏதேன் தோட்டத்தில் இருந்த ஞான மரப்பழம் ஆதாமையும், ஏவாளையும் உண்ணத் தூண்டிய ஆதிக்கத்தை இதனை உறுதி செய்கிறது. கானகத்தில் வாழ்ந்த ஆதி மனிதனுக்கு உணவளித்து உதவி செய்த மரங்கள், அவன் மனத்தைக் கவர்ந்து நிலைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

### 2. மனிதனின் ஆதி வீடு மரமாதல்

ஆதிமனிதனின் இருப்பிடம் முதலில் குகையாகவே இருந்தது. ஆனால் அனைத்துக் காலங்களிலும் குகையிலேயே வாழ்ந்து வந்தனர் என்பதிற்கில்லை. குறிப்பாக பூமத்திய ரேகைக்கு அருகாமையிலுள்ள இந்தியா, ஆப்பிரிக்கா போன்ற நாடுகளில் கொடுங்கோடையில் குகைகளில் வாழ முடியாது. மேலும், இம்மக்கள் இடம் விட்டு இடம் பெயர்ந்து வாழ்பவர்கள். செல்லும் இடமெல்லாம் 'குகைகள்' இருப்பதும் கடினமாகும். எனவே தட்பவெப்ப மாறுதல்களுக்கு, குகைகள் ஏற்றனவாக இல்லை. மேலும் நாடோடி வாழ்க்கையில் பாதிப்புக்குள்ளான பண்டைய மக்கள், ஆலமரம், அரச மரம் போன்ற பெரிய மரங்களில் பரண்போல் அமைத்து அதன் மீது வீடு அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர்.

3. மர இலைகளே உடை :

மனிதனின் மூன்றாவது இன்றியமையாமை உடை மான உணர்வுக்கு அடுத்த நிலையில் பயன்படுத்து. குளிரில் இருந்து தன்னைக் காத்துக் கொள்ளவும், பூச்சிக்கடியிலிருந்து தப்பித்துக் கொள்ளவும் பண்டைய மனிதன் உடையயை நாடி இருத்தல் வேண்டும். மனிதனின் ஆதி உடை இலை களாகவே இருந்தன. இன்றுகூட பெண்டிர் இலையுடை உடுத்தி வாழ்வதை ஆப்பிரிக்காவில் காணலாம். வேப் பிலையை மட்டும் ஆடையாக உடுத்தி நேத்திக் கடன் கழிக்கும் பழக்கத்தை இன்றும் சித்தூர் மாவட்டத்தில் நடைபெறும் 'கங்கையம்மன்' திருவிழாவின் போது காணலாம்.

4. மரமே மனிதனுக்குரிய கருவிகளை வழங்கும் மூலப்பொருள் :

மரம் பண்டைய மனிதனுக்கு வீடாக விளங்கியதுடன் வீடு கட்டும் பொருளாகவும் இருந்தது. வேட்டையாட உதவும் வில்லாகவும், அம்பாகவும், வேலாகவும் மரம் பயன்பட்டது. இன்றும் 'ஆங்கி' என்ற அந்தமான் பழங் குடியினர், பயன்படுத்தும் அம்பு, மரக்குச்சியாகவே இருப் பதைக் காணலாம். மேலும் காதுகளில் அணியும் ஓலையாக வும், வீட்டுத் தட்டு முட்டுச் சாமான்கள் ஆகியன செய்யும் மூலப் பொருளாகவும் இருந்தது.

5. மரமே தீ பெற உதவியது :

தீயை மனிதன் மிக வளர்ந்த நிலையிலேயே அறிந்து கொண்டான். மூங்கில் புதர்களில், மூங்கில்கள் ஒன்றுடன் ஒன்று உரசும் போது தீ பற்றி எரிவதை மனிதன் முதலில் கண்டிருக்க வேண்டும். இதன் காரணமாக காடுகள் முழுவதும் தீயால் அழிந்திருக்கும், வேறு வழியின்றித் தீயில் மாண்ட விலங்குகளின் மாமிசத்தையும்: காய்களையும்

தின்றிருக்க வேண்டும். அதுமுதல் அவன் நெருப்பில் வெந்த பொருளின் சுவையை அறிந்திருப்பான்; இன்றும் அந்தமான் பழங்குடிகள் தாம் செல்லும் இடமெல்லாம் நெருப்புக் கட்டையை அணையாமல் எடுத்துச் செல்வதைக் காணலாம்.

6. மரமே ஊர்ப் பொதுவிடம் :

ஊர்மக்கள் தம் சபைகளைக் கூட்டும் இடமாகவும், நீதி வழங்கும் நீதி மன்றமாகவும், திருவிழாக்கள் எடுக்கப்படும் பொதுவிடமாகவும் ஊர் மரத்தடிகள் விளங்கி வந்தன. இன்றும் புளியமரத்தடியில் ஊர்த் தகராறு பேசப்பட்டால் தகராறு திருவதில்லை என்ற பழக்கம் தமிழரிடையேயும், தெலுங்கரிடையேயும் காணப்படுகின்றன.

7. மரம்—நோய் தீர்க்கும் மருந்தாதல் :

சில மரங்களின் இலை, பூ, காய், பழம், பட்டை போன்றவைகள் பண்டை நாள் தொட்டு இன்றுவரை நோய் போக்கும் மருந்தாக பயன்படுகின்றன. நடுவூருள் நச்சுமரம் பழுக்கக்கூடாது எனவும் (குறள் 1008) பயன் மரமாகவும், மருந்து மரமாகவும், மாந்தன் வாழ வேண்டும். எனவும் (குறள் 216, 217) திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். வேப்பமரம் சங்க காலத்திலும் வழிபடப்பட்டது. அது கொற்றவை (காளி) மரமாகக் கருதப்படுகிறது. இன்றும் கோயிலைச் சார்ந்து வேப்பமரங்கள் வழிபடப் பெருகு கின்றன.

அரசமரப் பூசை :

விருட்சப்பூசையில் முதலில் இடம் பெறுவது 'அரசமரப் பூசை' ஆகும். இம்மரத்தைத் தெலுங்கர் 'ராவி மானு' என்றும், 'ராகி மானு' என்றும் அழைப்பர். இம்மரத்தை 'ஆணாக' நினைப்பர். இம்மரத்தின் அருகில் வேப்பமரம்

இருந்தால் ஆணும் பெண்ணும் கலந்திருப்பதாக நினைத்து ஒவ்வொரு வெள்ளிக்கிழமை தோறும் சுமங்கலிப் பெண்கள் பொங்கலிட்டு வழிபடுகின்றனர். அரசமரத்தை மகாவிஷ்ணு வின் மரமாக எண்ணுவர்.[6] அரச மரத்தை வெட்டுவது பிரம்மதேவனைக் கொலை செய்வது போன்றது எனக் கூறுவர்.[7] இம்மரத்தடியில் சற்று நேரம் உட்கார்ந்து இளைப் பாறினால் அறிவு வளரும் என்று நாட்டுப்புறவியலறிஞர் கூறுகின்றனர்.[8] அரச மரத்தைப் பூசை செய்து வணங்குவ தால் தங்களுடைய எண்ணமெல்லாம் நிறைவேறும் என்று நம்பிக்கை வைத்துள்ளனர். அரச மரத்தடியில் தனியாக இருக்கப் பயப்படுவர்.

காற்று பலமாக வீசும்போது அரசமரத்தில் பட பட என இலைகளின் ஓசை ஏற்படும் போது, அந்நேரம் மக்கள் அந்த அரச மரத்தைப் பார்த்துக் கைகூப்பி வணங்குகின்றனர். அரச மரத்தின் அடிப்பகுதியை நன்கு கழுவி மஞ்சள் பூசி, குங்குமப் பொட்டு வைத்து, தாழம்பூ மலர்களால் அலங்கரிப்பர். தேங்காய், பழம், பூ, பொறி, கடலை, பொங்கல் சோறு போன்றவற்றைப் படைத்து வணங்கு கின்றனர். பெண்கள் 7 மாதக் கர்ப்பிணியாக இருக்கும் போது தலைப்பிரவசமானபடியால் குழந்தை நலமுடன் பிறக்க இத்தகைய பொருத்தனைகளைச் செய்வர்.

அரச மரத்திற்குப் பூசை செய்து பொங்கலிட்டு, ஏழு மாதக் கர்ப்பிணிப் பெண்ணை மணப்பெண் போல் அலங் கரித்துப் புத்தாடைகளை அணிவித்து, அந்த மரத்திற்கு எதிரில் உட்கார வைத்துக்கற்பூரம் கொளுத்தி ஆரத்தி எடுக் கின்றனர். இச்சடங்குகளை இம்மாவட்டத்தில் தெலுங்க ரைக் காட்டிலும் தமிழர்களே மிகவும் சிறப்பாகச் செய் கின்றனர். பூசை முடிந்த பின்னர் கருப்பு சேவல், கருப்பு ஆட்டுக்கிடா, கருப்புப் பன்றி முதலியவைகளைப் பலி யிடுவர். இம் மூன்றிலும் எவ்விடத்திலாவது வெண் புள்ளியோ மற்றும் எதுவும் இருத்தல் கூடாது. முழுக்க

கருப்பு நிறமுள்ளதையே தேடிப்பிடித்து பலி செலுத்துவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

இந்நிகழ்ச்சிகளைத் தெலுங்கர் மேற்கொள்ளும் போதும் பலி செலுத்துகின்றனர். இப்பூசைக்கு நாதஸ்வரம், பம்பை போன்ற இசைக் கருவிகளைக் கொண்டு இனிய நாதம் வாசிப்பதுண்டு. ஆங்காங்கே தமிழர்கள் வானொலிப் பெட்டியையும் மரத்தில் கட்டி பாட்டுப் பாடச் செய்கின்றனர். தெலுங்கர் வானொலியைவிட பம்பைக்கும் நாதஸ்வரத்திற்கும் முதலிடம் தருகின்றனர்.

அவ்வாறு பூசை செய்யும் போது தமிழிலும், தெலுங்கிலும் பாடல்கள் பாடப் பெறுகின்றன. (எ-டு)

அரச மரத்தில் ஏன கட்டி
ஆண்டவர கும்பிடும் போது
அஞ்சாறு தேசத்துக்கு
அரச(ன்) ஆனான் எந்தன் மக(ன்)
பஞ்சம் பசி வந்ததுங்கே
பஞ்சப் படி போட்டானுங்கோ[7]

ஒரு காலத்தில் வயலில் வேலை செய்து கொண்டிருக்கும் ஏழைப் பெண்மணி தன்னுடைய குழந்தையை அருகிலுள்ள அரசமரத்தில் 'ஏணை' கட்டித் தூங்கச் செய்தாளாம். அவள் வயலுக்குப் போன பின்னர் மகா விஷ்ணு வானுலகிலிருந்து பூவுலகிற்கு இறங்கி வந்து குழந்தைக்கு ஆசீர்வதித்துச் சென்று விட்டாராம்; குழந்தை வளர்ந்து பெரியவனாகிபுத்திசாலியாய்மாறி ஒருநாட்டிற்கே அரசனானாம். இந் நிகழ்ச்சியைப் பாடல் மூலமாக கர்ப்பவதிப் பெண்ணை மரத்திற்கு எதிரில் உட்கார வைத்துப் பாடுகின்றனர். அவளுடைய வயிற்றில் வளரும் குழந்தை பெரிய அரசனாகவும், அறிவாளியாகவும் மாற வேண்டும் என்ற எண்ணத்தால் இம்மக்கள் இச்சடங்குகளை மேற்கொண்டிருக்கலாம். தெலுங்கு மொழியிலும் இது போன்ற பொருளுடைய பாடலொன்று கிடைத்துள்ளது.

ராகி செட்டுக் காடா—ஸாசாமி
ராஜு நித்ரா போயேனு
துஷ்கலம் புலன்னி சாமி
புஷ்கலிஞ்சு மன்னா
மா தல்லி கடுப்பானா
மஹா ராஜு புட்டாலி
மா தண்ட்ரி தய சூச்சி
மம்மலனு காப்பாட வைய்யா.[10]

"அரச மரத்தடியில் குழந்தை (வயிற்றில்) தூங்கிக் கொண்டிருக்கிறான். அவனுடைய தோஷங்களையெல்லாம் போக்கி, பெரிய ராஜாவாக இப்பூவுலகில் அவன் பிறக்க வேண்டும். கருணை வைத்து எங்களுடைய வேண்டுதலை ஏற்க" என்பது மேற்கண்ட தெலுங்குப் பாடலின் பொருளாகும். இரண்டு பாடல்களிலும் அரச மரத்தைப் பற்றிய குறிப்புகாணப்படுகிறது. நல்ல அறிவுள்ள குழந்தை பெற வேண்டும் என்பதே இவ்விரண்டு பாடல்களின் பொதுவானக் கரு. இவ் இரண்டு பாடல்களும் இசையில் வேறுபடுகின்றன.

பொதுவாக் அரச மர வழிபாடு இம்மாவட்டத்தில் தமிழர்களிடையேயும், தெலுங்கரிடையேயும் காணப்படுகின்றது. தமிழ் மக்கள் ஊர் பஞ்சாயத்தை அரச மரத்தடியில் கூட்டி விவரம் விசாரித்துத் தீர்ப்பு வழங்குவது போன்று தெலுங்கு மக்களும் தங்களது ஊர்ப்பஞ்சாயித்தை அரச மரத்தடியிலே கூட்டி விவகாரங்களை விசாரிக்கின்றனர். இந்த முறை இம்மாவட்டத்தின் வடமேற்கு வட்டங்களான புங்கனூர், மதனப்பள்ளி, வாயல்பாடு போன்ற வட்டங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றது.

## வேப்ப மரப் பூசை :

வேப்ப மரத்துக்குப் பூசை செய்து வழிபடுவதையே வேப்ப மரப்பூசை என்பர். தெலுங்கில் 'வேபமானு பூஜா' என்பர். இம்மரத்தைப் பெண்ணாகப் பாவித்து வணங்கு

கின்றனர். வேப்பமரமும், அரச மரமும் ஒரே இடத்தில் பிணைந்து வளர்ந்திருந்தால் அங்கே சிறு கோயில் கட்டி வழிபடுகின்றனர். அம்மரங்களுக்கு அருகில் 'புற்று' இருந்தால் இன்னும் சிறப்பாக வழிபாடு செய்வர். இந்த மரச் சடங்குகள் ஒவ்வொன்றுக்கும் வேப்பிலையைப் பயன் படுத்துகின்றனர்.

முக்கியமாக கங்கையம்மன் திருவிழாவின் போது 'கூழ்' ஊற்றுவார்கள். அந்நேரம் கங்கையம்மனுக்குக் கூழைப் படைக்கும்போது வேப்பிலையைத் தரையில் வைத்து அதன்மீது கூழை வைத்துப் படைப்பதுண்டு. கூழைப் படைக்கும் நபர், கூழ்எடுத்துச் செல்லும் பாத்திரம், உடன் செல்லும் மற்ற உறவினர்கள் போன்றோர் இந்த நிக்ழ்ச்சி யின்போது வேப்பிலையால் உடல் முழுவதும் மறைத்துக் கொண்டிருப்பர். கங்கையம்மன் திருவிழாவின் அடையாள மாக, விழாவன்று அவ்வூர் வண்ணான் ஒவ்வொரு விட்டுக் கூரையிலும் வேப்பிலைக் ]கொத்தைச் சொருகி வைப்பான். வீதிகளிலும் வேப்பிலைத் தோரணங்கள் கட்டப்பட் டிருக்கும். இந்நிகழ்ச்சியைத் தமிழர்களும் தெலுங்கரும் செய்கின்றனர்.

இம்மாவட்டத்தில் ஒவ்வொரு கிராமங்களிலும் ஒரு வேப்பமரமும், அற்கடியில் காளியும்மன், சத்தியம்மன், கங்கையம்மன் போன்ற தேவதைகளின் கோயில் இருப்ப தையும் காணலாம். வேப்பமரப் பூசையைத்தமிழர் தாங்கள் நினைத்தபோது செய்வது போலவே தெலுங்கரும் செய்கின்றனர். இப்பூசையில் வேப்ப மரத்தைவிட அம்மரத் தினடியில் இருக்கும் தேவதைக்கே முதலிடம் தருகின்றனர். கிராமத்தில் விழா எடுக்கும்போது வேப்பமரத்திற்குப் பூசை செய்வதுண்டு.

வேப்பமரத்திற்குத் தமிழர்கள் ஆடு, கோழி, எருமைக் கடா போன்றவற்றைப் பலியிடுவதைப் போலவே, தெலுங் கரும் பலியிடுகின்றனர். வேப்ப மரத்திற்குப் பழம்,

பூ, பொறிகடலை, வெற்றிலைப்பாக்கு, தேங்காய், நிணச் சோறு போன்றவற்றைப் படையலாகப் படைப்பர். இதனைத் தெலுங்கில் பண்டு (பழம்) பூலு (பூ) பொருகுலு செனகலு (பொறிகடலை) ஆக்கு (வெற்றிலை) ஒக்கா (பாக்கு) டெங்காய (தேங்காய்) இரக்தகூடு (நிணச்சோறு) என்று வழங்குவர்.

இம்மாவட்டத்தில் வாழ்கின்ற தமிழர்களும், தெலுங்கரும் வேப்பமரத்தில் சக்தி வாய்ந்த 'தேவதை' குடிகொண்டுள்ளாள் என நம்புகின்றனர். ஆனால் அரசமரத்தை வெட்டப் பயப்படுவதைப்போல் இம்மரத்தை வெட்ட யாரும் தயக்கம் காட்டுவதில்லை. வேப்பமரப்பூசையில் 'பம்பை' கொண்டு இசை எழுப்புவர். பூசை நடைபெற்றுக் கொண்டிருக்கையில் தமிழர்கள் சிலம்பாட்டம், கரகாட்டம் நெருப்புச்சட்டியைக் கையில் ஏந்தியும், தலையில் வைத்தும் கூத்தாடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

ஆனால் தெலுங்கு மக்கள் வேப்பமரப் பூசையின்போது கோலாட்டம், கும்மி, ஜக்கி போன்ற கேளிக்கைகளை மேற்கொள்ளுகின்றனர். சில இடங்களில் திரைப்படப் பாடல்களைப் பாடுவித்து நடனம் புரிவாருமுண்டு. வேப்பமரப் பூசையை தமிழர்கள் ஆண்களைக் கொண்டே செய்யப் படுவதுபோலவே தெலுங்கரும் செய்கின்றனர். சுமங்கிலிகள் தான் பூசை செய்ய வேண்டும் என்ற நியதி இருசாரார்க்கும் இல்லை என்றே கூறலாம்.

பூசை நடந்துகொண்டிருக்கையில் அக்கிராமத்திலுள்ள பூசாரிக்கோ அல்லது பக்தருக்கோ சக்தியின் ஆவி வரும். அந்த ஆவி பரம்பரையாகத் தந்தை வழி மகனுக்கு என்ற முறையில் வரும். அந்த ஆவி வந்ததும் கிராமத்திலுள்ள வியாதிகளையும், மழைபற்றியும், அம்மக்கள் பூசை செய்தலில் ஏற்பட்ட குற்றங்களையும் எடுத்துச் சொல்லும். அந்த ஆவி வந்ததும் கற்பூரத்தை அவரது உள்ளங்கையில் வைத்துக் கொளுத்துவார்கள். ஆவி அதை உடனே வாயில்

போட்டுக் கொள்ளும். வேப்பிலையையும் எடுத்து வாயில் போட்டுத் தின்றுவிடும். பலி தேவைப்பட்டால் உடனே கட்டளையிடும்.

அந்த ஆவி என்ன கட்டளையிடுகின்றதோ அதன்படி செய்வர். இச்சமயங்களில் பம்பையைக் கொண்டு இசை முழக்கியவாறு கிராமத்தைக் குறித்தும், கிராமமக்களைக் குறித்தும், தங்களது ஆடு மாடுகளைக் குறித்தும் அந்த ஆவியினிடத்தில் கேட்பர். அந்த ஆவி அக்கேள்விகளுக்குப் பதில் சொல்லும். இந்த ஆவியைத் தமிழில் 'அம்மா' என்பர். தெலுங்கில் 'அம்மவாரு, 'அம்மோரு' என்றழைப்பர். இந்நிகழ்ச்சியைச் செய்யும் பொழுது தமிழிலும், தெலுங்கிலும் பாடல்கள் பாடப்படுகின்றன.

காளி தேவியே
கூளி தேவியே—எம்மை
காப்பாற்ற வந்த
தூளி தேவியே
வெள்ள மனம் கொண்டவளே
வேப்ப மரம் கொண்டவளே
கள்ளர் பயம் இல்லாமே
கடசி மட்டும் காப்பாத்தம்மா[11]

வேப்பம்மரப் பூசையின்போது தமிழில் பாடப்படுவதைப் போலவே தெலுங்கிலும் பாடல்கள் பாடப்படுகின்றன.

ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தியே
ஓங்கார நாதா ஓம்சக்தியே
காளி ரகுதூளி ராவே ராவே—மா
கஷ்டாலு ஜூடே ரகுதூளி நூவே

ரத்த கூடு கும்பம் பெட்டிங்தாமே
வேப்பாக்கு அம்மிலி போயிஸ்தாமே
அப்பரானி துன்னபோது நீக்கிஸ்தாமே
தப்புலன்னி ஜூஉ ராதே ரகுதூளி[12]

"காளியே, எங்களது துன்பத்தைப் போக்குக; நிணச்சோறு படைக்கின்றோம். அதோடு மட்டுமல்லாது வேப்பிலையில் கூழ் படைத்து, பெரிய எருமையை உமக்குப் பலியிடுகின்றோம். எனவே, எங்களுடைய குற்றங்களைப் பார்த்துக் கைவிடாமல், எங்களை நோய்களிலிருந்து காப்பாற்ற வேண்டும், தாயே'' என்பது மேற்கண்ட தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

பொதுவாக வேப்பமரப்பூசையைத் தமிழர்களைப் போலவே தெலுங்கரும் செய்கின்றனர். சற்று வசதியுள்ளவர்கள் ஆடு, கோழி முதலியவற்றைப் பலியிடுவர். வசதியற்றவர்கள் 'எருமை'யைப் பலியிடுகின்றனர். அவர்களது சடங்குகள், நிகழ்ச்சிகள், பொருத்தனைகள், பூசைகள் சில இடங்களில் வேறுபட்டுக் காணப்பட்டாலும் அம்மக்களது, கோரிக்கைகள், விருப்பங்கள் பல இடங்களில் ஒன்றாகவே காணப்படுகின்றன.

இந்நிகழ்ச்சியின் போது வேப்பிலை கலந்த மஞ்சள்நீரை மாமன்முறையில் உள்ளவர்கள் ஒருவருக்கொருவர் மாறி, மாறி இரைத்துக் கொள்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். தமிழர்கள் இந்நிகழ்ச்சியின் போது கரகாட்டத்தைச் சிறப்பாகச் செய்கின்றனர். தெலுங்கரிடம் இக்கலை இல்லை என்றே சொல்லலாம். தெலுங்கர் இந்நிகழ்ச்சியன்று மஞ்சள் அல்லது சிவப்பு உடையை உடுத்திக் கையில் 'ஜக்கி' என்ற ஒரு வகை இசைக்கருவியைப் பிடித்துக் கொண்டு இசை எழுப்பிய வண்ணம் நடனம் ஆடுவர். இதனை 'ஜக்கி பாட்டலு' என்பவர். ஜக்கி நடனம் ஆடுதல் தமிழர்களிடம் வழக்கிலில்லை.

**'துளசி பூசை' :**

வில்வ மரம் சிவனுக்குரியது என்றால் துளசிச் செடி விஷ்ணுவுக்குரியது. பக்தியின் மூலமாக துளசிச் செடியைக் கிருஷ்ண துளசி, வெள்ளை துளசி, இலட்சுமி துளசி என்றழைப்பர். தெலுங்கிலும் கிருஷ்ண துலசி, தெல்ல துலசி,

லக்ஷ்மி துலசி என்ற பெயருமுண்டு. தமிழில் 'நாய் துளசி' என்ற மற்றொருவகையும் உண்டு. துளசிச் செடி விரதமும் பெண்களுக்கே உரிதாகும்.

தமிழ்ப் பெண்மணிகள் துளசிச் செடிக்கு விரதம் இருந்து பூசை செய்வது போன்றே தெலுங்குப் பெண்மணிகளும் விரதம் இருந்துபூசை செய்கின்றனர். துளசிச் செடி அமிழகத்திலிருந்து பிறந்தது என்று கூறுவர்,13 சுமங்கலிப் பெண்கள் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் விரதம் இருந்து துளசிச் செடிக்குப் பூசை செய்து வழிபடுகின்றனர். தங்களுடைய மாங்கல்யம் நிலைத்து நிற்கவே இவ்வழிப்பாட்டினை மேற்கொள்ளுகின்றனர்.

இம்மாவட்டத்தில் தமிழர்களைப்போலவே தெலுங்குப் பெண்மணிகளும் 'துளசிப் பூசை' செய்கின்றனர். துளசிச் செடியைச் சற்று உயரமான இடத்தில் வைத்து வழிபடுகின்றனர். தெலுங்கில் "துளசித் தளமு" என்றழைப்பர்.

துளசிப்பூசைக்கு பழம், தேங்காய், பூ போன்றவற்றைப் படைப்பர். தமிழர்களும், தெலுங்கரும் துளசிப் பூசையைப்புனிதமாக அனுசரித்து வழிபடுகின்றனர். துளசிப் பூசைக்குத் தமிழர்களானாலும், தெலுங்கரானாலும்உயிர்ப் பலி கொடுப்பதில்லை. உயிர்ப்பலிக்குப் பதிலாக எலுமிச்சை பழம் பெரிய பூசணிக்காய் போன்றவற்றை வெட்டுவதுண்டு. துளசிச் செடிப் பூசையைப் பெண்கள் மட்டுமே முன்னின்று நடத்தி வைக்கின்றனர்.

தேங்காய் உடைப்பதற்கும், பெரிய பூசணிக்காயை வெட்டுவதற்கும் உதவி தேவைப்பட்டால் ஆண்களை அழைத்துச் செய்விப்பர். இப்பூசை ஒழுக்கப் பெண்களாலேயே அனுசரிக்கப்படுகிறது. விதவைகள், திருமணமாகாத இளம் பெண்கள் இப்பூசையில் கலந்து கொள்வதில்லை. துளசித் தளத்திற்கும் துளசிச் செடிக்கும் பூசை செய்து

விட்டுக் கர்ப்பூரம் பொருத்தி ஆரத்தி எடுப்பர். துளசியை வணங்குபவர்களுக்குக் 'கலிதோஷம்' பிடிக்காது என்பர்.[14] துளசி இலைகளால் அலங்கரிக்கப்பட்ட வீடுகளில் எமனும் நுழையமாட்டான் என்று நாட்டுப் புறமக்கள் நம்புகின்றனர்.[15] இக்கருத்தினை எடுத்துச் சொல்லும்வகையில் தமிழிலும், தெலுங்கிலும் பாடல்கள் கிடைத்துள்ளன.

தொலசி மாடம் கட்டி வெச்சி
தொலசி பூஜ செய்து வந்தா
தொலஞ்சி போகும் தோஷம்—அரகரா
தொண வருவா லச்சிமி

ஏறவாணத்துல எலய கட்டினா
எமனும் வந்து நொய மாட்டான்
துளசி பூச செய்தாக்க
தொலஞ்சி போகும் தோஷமெல்லாம்—அரகரா[16]

இதுபோன்ற பொருளுடைய தெலுங்குப் பாடலொன்றும் மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

துலசி இண்ட் னுஞ்சு வார்னி
துலசி பூஜ சேயு வார்னி
கலி தோஷம் அண்டடது
துலசி ஜு சிமாக்கு வார்னி
துலசி அனுபஙிஞ்சு வார்னி
துலசி தோர் ணமு உஞ்சு வார்னி
துன்ன போத்து மகாராஜா அண்டட ராது''[17]

''துளசிச் செடியை வீட்டில் வைத்திருப்பவர்களையும் துளசிப் பூசை செய்பவர்களையும் கலிதோஷம் பிடிக்காது. துளசியை வணங்குபவர்களையும், துளசி செடியைத் தோரணம் கட்டி வைப்பவர்களது வீட்டிலும் 'எருமை'யை வாகனமாகக் கொண்ட எமனும் நுழைய மாட்டான்'' என்பது மேற்கண்ட தெலுங்குப் பாடலுக்குரிய பொருள் ஆகும்.

துளசிப்பூசை செய்பவரது வீட்டில் உயிரைப் பறித்துச் செல்லும் 'எமன்' வரமாட்டான் என்று தமிழ்ப்பாடலில் குறிப்பிட்டிருப்பது போன்று தெலுங்குப் பாடலிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. தோஷம்பற்றிய குறிப்பு இரண்டு பாடல்களிலும் காணப்படுகிறது. இரண்டு பாடல்களும் இசையில் வேறுபடுகின்றன.

கார்த்திகைத் தீபத்தில் மாலை வேளையில் துளசிக் கோட்டையை மலர்களால் அலங்கரித்து, அம்மேடைக்கு அருகில் நூற்றுக்கணக்கான தீபங்களை வைத்து, வண்ண மாவுகளைக்கொண்டு கோலமிட்டுப் பூசைசெய்வர். தமிழர்களுடைய வீட்டிலும், தெலுங்களுடைய வீட்டிலும் இறப்பு நேரிட்டால் அவர் அடக்கம் பண்ணப்பட்ட மூன்றாவது நாளில் அந்தக் குழியின்மீது துளசிச் செடியை நட்டுவித்து அதற்குப் பால் ஊற்றுவதை இன்றும் நாட்டுப் புறமக்களிடம் வழக்கிலுள்ளது.

ஒருவேளை அச்சமயத்திற்குத் துளசிச் செடி சுடுகாட்டின் அருகில் கிடைக்காவிட்டால் தும்பைச் செடியைப் பிடுங்கிக் கொண்டு வந்து நட்டுவித்துச் சடங்கைச் செய்வதுண்டு. தமிழர்களும், தெலுங்கரும் இறந்தவர்களுக்குச் சமாதி கட்டினால் சமாதியின் மீது துளசிச் செடிவைப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். விநாயகச் சதுர்த்தியன்றும், புரட்டாசிச் சனியன்றும் தமிழர்களும் தெலுங்கரும் துளசி இலையை புனிதமாகக் கருதி அனைத்து நிகழ்ச்சிகளிலும் பயன்படுத்துகின்றனர்.

**உயிரின வழிபாடு :**

''கோமாதா எங்கள் குலமாதா'' என்றபாடல் இன்னும் நாட்டுப்புற மக்களிடையே பாடப்பட்டு வருவதைக் காணலாம். நாட்டுப்புற மக்கள் 'பசு' வைப் புனிதமான விலங்காகக் கருதி வழிபடுகின்றனர். தாய்க்குப் பின்னர் தாய் போன்று 'கோமாதா' விளங்குகிறது. மனிதர்களைச்

சுமப்பது பூமி மாதா என்றால், அம்மனிதர்களை வளர்ப்பது 'கோமாதா' ஆகும்.

ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கும், பசுக்களுக்கும், மிகவும் நெருங்கியத் தொடர்பு உண்டு. அவர் கோபாலன் என்று அழைக்கப்படுகிறான். எனவே ஸ்ரீகிருஷ்ண ஜயந்தியைக் கோகுலாஷ்டமி என்று அழைப்பர். தெலுங்கிலும், தமிழிலும் பசுவின் அவயவங்களனைத்தையும் பசுவின் கழிவுப் பொருளான சாணம் சிறுநீர் போன்றவற்றையும் புனிதமாகக் கருதுகின்றனர். பசுவின் சிறுநீரைத் தமிழில் 'கொயிம்மு', 'கோமியம்' என்றழைப்பதைப் போலவே தெலுங்கிலும் 'கஞ்ஜரமு' 'கொயுமு' என்று அழைக்கின்றனர்.

ஒவ்வோர் ஆண்டும் பொங்கல் திருநாளில் 'காணும் பொங்கல்' அன்று பசுவைச் சுத்தமாகக் கழுவி அதன் கொம்புகளுக்கு வர்ணம் பூசி மலர்களால் அலங்கரிப்பர். தெலுங்கர் இப்பண்டிகையை 'சங்கராந்தி' என்பர். அன்று 'பசு'வுக்கும் பொங்கலிட்டு, பூசை செய்து வழிபடுவர். பொங்கலிட்ட சாதத்தை இலையில் வைத்து 'பசு'வுகளு ஊட்டுவர் இந்நிகழ்ச்சியின்போது தமிழர்களும் தெலுங்கரும் பல பாடல்களைப் பாடுகின்றனர்.

**கோமாதா எங்கள் குலமாதா**
**கர்ப்பூர ஆரத்தியும்**
**காணிக்கையும் ஏத்துக்கம்மா**
**பழம் தருகிறோம் பால் கொடம்மா**
**மொறம் தவுடு தருகிறோம் மோர் கொடம்மா**
**இலவுக்கு கழுவி பூச செய்கிறோம்**
**நெய் கொடம்மா**
**கோமாதா எங்கள் குலமாதா**[18]

இதுபோன்ற பொருளுடைய தெலுங்குப் பாடலும் இம்மாட்டத்தில் பாடப்படுகின்றது. பாடல்களில் ஓரளவு பொருள் மாற்றம் காணப்பட்டாலும், அம்மக்களின் முக்கிய நோக்கங்கள் ஒன்றுபட்டுக் காணப்படுகின்றன.

ஜெய மங்களம் நித்ய சுபமங்களம்
ஜெயா ஜெய மங்களம்
மகோதஸவ மங்களம்
பசுபு குங்குப பூலு பக்தினுஞ்சி
தீப ஆரத்துலிச்சி தூடத்தோ நீ பூஜா
மமத்தோ ஜேத்துமு கோமாதா கை கொனுமு
பாலிச்சி பசி வாட்னி காபாடு கோமாதா
பெருகிச்சி பேதவாட்னி காபாடு கோமாதா
நெய்யிச்சி யாகானி காபாடு கோமாடு।

என்று பெண்கள் கூட்டமாகக் கூடிஆரத்தி எடுத்த வண்ணம் பாடலைப் பாடுவர். பூசைகளில் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுவது 'கோமாதா' பூசையாகும்.

''மஞ்சள் பூசி,குங்குமம் வைத்து ஆரத்தி எடுக்கிறோம். பால் கொடுத்துப் பச்சிளங் குழந்தையைக் காப்பாற்றுக. மோர் கொடுத்து ஏழையைக் காப்பாற்றுக. நெய் கொடுத்து யாகத்தை நிறுத்தாமல் நடத்துக'' என்பது மேற்கண்ட தெலுங்குப் பாடலின் பொருளாகும்.

தமிழ்ப் பாடலிலும், தெலுங்குப் பாடலிலும் பசுவை 'கோமாதா' என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. தரும் அனைத்துப் பொருட்களும் இப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன. தமிழ்ப் பாடலில் 'குலமாதா' வாகக் கருதப்படுகிறாள். தெலுங்கில் அவ்வாறில்லை. தெலுங்குப் பாடலில் யாகத்தைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இரண்டு பாடல்களும் இசையில் வேறுபடுகின்றன.

**நாகப்பூசை:**

''பாம்பைக் கண்டால் படையே நடுங்கும்'' என்பது பழமொழி. இப்பழமொழி இக்கால மக்களுக்கும் பொருத்த முடைத்து எனலாம். பாம்பைக்கண்ட மனிதன் ஆதிகாலத்தி லிருந்தே பயந்து அதனை வழிபட்டு வந்திருக்கிறான். இம்மாவட்டத்தில் பாம்பு வழிபாடு தமிழர்களிடத்திலும் தெலுங்கரிடத்திலும் உள்ளது. தமிழரைவிடத் தெலுங்கரே பாம்பு வழிபாட்டுக்கு முதன்மையான இடத்தை அளித்து வழிபடுகின்றனர். நாகப் பாம்பை வழிபடுவதையே நாகப் பூசை என்பர்.

தெலுங்கில் 'நாக பூஜா' என்பர். தமிழில் 'பாம்பு' என்பதை தெலுங்கர் பாமு என்றழைப்பர். இதனைப் புற்று வழிபாடு என்று கூட சொல்லலாம். ஏனெனில், இவர்கள் நேரடியாகப் பாம்புகளுக்குப் பூசை வைப்பதில்லை. பாம்பு புற்றுக்குள் இருக்கும். ஆனால் இம்மக்கள் புற்றின் மீது மஞ்சளும், குங்குமமும் தூவி கர்ப்பூரம் கொளுத்தி, பழம், தேங்காய், பூ, அவித்த பயறு வகைகள் போன்ற வற்றைப்படைத்து வழிபடுபாம்புக்குப் படையலாக, பாலும் முட்டையும் புற்றின்மீது வைத்து வந்து விடுகின்றனர். ஆட்கள் நடமாட்டம் இல்லாத நேரத்தில் பாம்பு வெளியே வந்து பாலையும் முட்டையையும் உண்பதாகச் சொல் கின்றனர்.

இந்நிகழ்ச்சிக்குத் தமிழர்கள் பம்பை நாதஸ்வரம் கொண்டு இசை முழக்குவது போன்று தெலுங்கரும் மேற்கொள்கின்றனர். பிள்ளைப்பேறுஅற்றவர்கள் நாற்பது நாட்கள் விரதம் இருந்து புற்றைச் சுற்றி வந்தால் பிள்ளை பிறக்கிறது என்று நம்புவர். அவ்வாறு அவர்களின் நம்பிக்கையின்பேரில் குழந்தை பிறந்தால், ஆணாக இருப்பின் நாகன் என்றும், பெண்ணாக பிறந்தால்; நாகம்மா என்றும் பெயர் சூட்டுகின்றனர்.

சுமங்லிகள் தாம் நாகப்பூசை செய்ய வேண்டும் என்ற நியதி தமிழர்களிடமும் தெலுங்கரிடமும் காணப்படவில்லை புற்று இல்லாகிராமங்களில் நாகப்பாம்பு போன்ற சிலை செய்துசிறுகோயில் கட்டி வழிபடுகின்றனர். இம்மாவட்டத்தின் பெரும்பாலான இடங்களில் நாகப் பூசை கிராமங்களுக்கு வெளிலேயே மேற்கொள்ளப்படுகின்றது. ஆண்கள் இவ்வழிப்பாட்டில் பங்கு பெறுவதில்லை. பெண்களுக்குத் துணையாகச் சென்று பூசை செய்யும்போது உதவுவர்.

நாட்டுப்புற மக்களால் பாடப்பட்டு வரும் நாகப்பூசைக்குச் சம்பந்தப்பட்டப் பாடல்களை நோக்கும்போது பயத்தோடே நாகாரதனை செய்வதாகத் தெரிகின்றது. நாக தெய்வமாக இருப்பினும் அவை விஷத்தன்மை பெற்றவை என்பது பாடல் வழி உணரலாம்

''நாகேந்திரே வாரும்
நல்லவரம் தாரும்
படம் எடுக்க வேணாம்—நாங்க
பகையாளி இல்லே
சின்ன நாகரே வாரும்
சிம்மிலி படைக்கிறோம்
நாக்க நீட்டாதே நாகரே
நல்ல வங்கோ நாங்கோ
நாகால சவித்திக்கி
நல்ல பூஜ செய்கிறோம்
பூ படக நாகன்னா
பூ பழம் படைக்கிறோம்
தேன் படக நாகன்னா
தேனும் பாலும் படைக்கிறோம்''[20]

என்று தமிழர்கள் பாடுவர். இதுபோன்ற பொருளையுடைய தெலுங்குப் பாடலும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

"நானுகல நாயகே—
நீ வாரமு நாகு
மஞ்சி நாகுலையதே
பஞ்செ லெட்டேமு
படக லெத்தகு நாகு
பகவாரமு காது
மா சேனு பண்டிதே
சலி மிடிச் சேமு
நாகால சவித்திக்கி நாகன்னா
ஸ்நானம் சந்தியாலு நாகன்னா
பூலு படகல நாகன்னா
மடிப்பட்டுவதோ நாகன்னா
சிமிலி சலிமிடி நாகன்னா
பாலு பண்டு நாகன்னா
உபனிஞ்சி நாகன்னா
ஊரேகிஸ்தாம் நாகன்னா
புட்டக்கு வஸ்தரம் நாகன்னா
பூஜெலு கொனரா நாகன்னா"[21]

என்று தெலுங்கர் வழிபாட்டின்போது பாடுவர்.

"நாக்கை நீட்டாதே, நாங்கள் உம்முடையவர்கள், 'படை எடுக்காதே, நாங்கள் பகையாளிகள் அல்வோம் பாலும் பழமும் படைத்து வழிபடுகிறோம். ஊர்வலம் வருகிறோம். புற்றுப் பக்கம் வந்து பூசைப் பொருத்தனைகளை நிறைவேற்றுகிறோம். எனவே, எங்களுடைய பயிர்களைக் காப்பாற்றுக. எங்களது வாழ்நாளில் துணையிருக்க என்று" வேண்டுவதாகப் பாடலின் பொருள் அமைந்துள்ளது. நாகப் பூசையை இம்மாவட்டத்தில் தமிழர்களும் தெலுங்கரும் மாசி மாதம் பஞ்சமியன்று செய்வர். தமிழர்களும் தெலுங்கரும் நாகப்பாம்பைக் குலதெய்வமாகக் கொண்டுள்ளனர். நாகப்பூசை செய்யும்போது உயிர்ப்பலி செலுத்துவதில்லை. தமிழர்களும் தெலுங்கரும் சைவமுறையையே அனுசரிக்

கின்றனர். இம்மாவடடத்தில் வட மேற்கு வட்டங்களில் நாகப்பூசையைச் சிறப்பாகவும் பெரும்பான்மையாகவும் நடத்துகின்றனர்.

இப்பகுதிகளில், ஒருவருடைய நிலத்தில் வளர்ந்த புற்று இருந்தால் உடனே அங்கு பந்தல் போன்று அமைத்துவிட்டு வழிபடுகின்றனர். சிலருடைய வீடுகளிலேயே புற்று வளர்ந்திருக்கும். அங்கே வெள்ளிக்கிழமை தோறும் தவறாது பூசை செய்து வணங்குவர்.

பொதுவாக இயற்கை வழிபாட்டில் இம்மாவட்டத்தில் வாழும் நாட்டுப் புறமக்கள் நாட்டம் செலுத்துகின்றனர். வில்வ மரம், ஆலமரம் போன்றவற்றிற்கே தை பூசை செய்கின்றனர். பலத்த இடியுடன் கூடிய மழை வரும் போது 'இடி' சத்தம் கேட்டதும், 'அர்ச்சுனா, நகுலா, பீமா, சகாதேவா' என்பர். இவ்வழக்கம் தற்போதும் தமிழர்களிலும் தெலுங்கரிலும் காணப்படுகின்றது.

மழைக் காலங்களில் ஏரி, குளங்கள் நிரம்பி வழிந்தோடும் ஆற்றில் பெருவெள்ளம் ஏற்படும். அந்நேரம் இம்மக்கள் ஆற்றங்கரைக்கும், ஏரிக்கரைக்கும் சென்று மூன்று செங்கலை எடுத்து புதிய மழை தண்ணீரில் கழுவி சுத்தம் செய்து மஞ்சள் குங்குமம் கொண்டு அலங்கரித்து கர்ப்பூரம் ஆரத்தி எடுத்து தேங்காய் உடைத்து வழிபடுவர். இத்தகைய வழிபாட்டைத் தமிழரைக் காட்டிலும், தெலுங்கரே பெரு முயற்சி எடுத்துச் செய்கின்றனர். ஆடு, கோழி முதலியவற்றை அந்நேரம் பலியிடுவதும் உண்டு.

## பெருந்தெய்வ வழிபாட்டுப் பாடல்கள்:

இப்பகுப்பில் இரண்டு வகைப்பட் பாடல்களையும், வழிபாடுகளையும் குறிப்பிடலாம். 1. சைவம் 2. வைணவம்.

**சைவ சமய பக்திப்பாடல்கள் :**

*சைவ சமய பக்திப்பாடல்களில் விநாயகரைப் பற்றிய பாடல்கள் தமிழில் முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளதைப் போல தெலுங்கிலும் கணநாதுனிபாட்டா (விநாயகர் பாடல்) முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளது. முதன் முதலில் இவ்வழிபாடு ஆரியர் மூலமாகவே திராவிட மக்களிடம் வந்தது என்றே சொல்லலாம். நாட்டுப்புற மக்கள் மேற்கொள்ளும் ஒவ்வொரு செயலிலும் விநாயகர் துதியைக் காண முடிகிறது.*

**விநாயகரே வாருமையா**
**வினை தீர்த்து போகுமையா**

*என்று தமிழிலும்,*

**கணநாதா விக்குணநாதா**
**கருணிம்பு கணநாதா**

*என்று தெலுங்கிலும் பாடுவதை மாவட்டம் முழுவதும் காண முடிகிறது. தமிழர்களாலும் தெலுங்கராலும் நடத்தப்படும் நாடகங்களிலும், 'விநாயகர் துதி முதலில் இடம் பெறுகின்றது. சாதி மதம் பேதமின்றி, பிராமணர்களும், 'காபு'என்ற இனத்தவர்களும் விநாயகரை வணங்கி யதாகக் கூறுவர்.*[34]

*பண்டைய தமிழர் வரலாற்றில் விநாயகர் துதி காணப்படுகின்றது. கி. பி. 700 ஆம் ஆண்டு பல்லவர்கள் வாதடுபியை வென்ற பிறகே தமிழ்நாட்டில் விநாயகவழிபாடு தோன்றிற்று என்பர். இம்மாவட்டத்தில் வாழ்கின்ற தமிழ்ச் சிறார்கள் இளம் வயதிலிருந்தே பிள்ளையார் வணக்கத்தைத் தெரிந்து வைத்துள்ளனர். அவர்கள் விநாயகரின் உருவத்தை யாங்ஙனம் விவாரிக்கின்றனர் என்பதைக் கீழ்வரும் பாடல் காட்டுகிறது.*

குள்ள விநாயகரே வாரும்
குண்டு விநாயகரே வாரும்
செல்லப் பிள்ளையாரே வாரும்
திருவடியே சரணம் சரணம்[3]

என்று பிஞ்சு உள்ளங்கள் பாடுவதைக் கேட்கும்போது கேட்க இனிமையாக இருக்கும். 'தமிழ்ச் சிறுவர்கள் மட்டு மின்றி தெலுங்குச் சிறுவர்களும் விநாயகரை மறவாது, அவருடைய உருவத்தைப் பார்த்து வேடிக்கைக் கொண்ட வர்களாய் பாட்டுப்பாடி வழிபடுவதைக் காணலாம்.

பொத்து கணநாதா ராவே
பொட்டி கணநாதா ராவே
கன்னெத்து ஜூடுமு
கான லேனி மகிமனு[4]

"குண்டு விநாயகரே, குள்ள விநாயகரே கண் திறந்து பார் காணமுடியாத காட்சியை" என்பது பாடலுக்குரிய பொருளாகும்.

இம்மாவட்டத்தில் தமிழர்களும், தெலுங் கரும் விநாயக சதுர்த்தியன்று, இப்பெருமானுக்குச் சிறப்பகா விழா எடுக்கின்றனர். இம்மாவட்டத்தின் முக்கிய பண்டிகை களுள் விநாயகச்சதுர்த்தியும் ஒன்றாகக் கருதப்படுகின்றது. விநாயகச்சதுர்த்தியன்று. களிமண்ணால் செய்யப்பட்ட விநாயகர் சிலைக்கு வண்ணம் பூசி, மலர்களால் அலங் கரித்து, பூ, பழம், தேங்காய், வெல்லம், பொரிகடலை, கரும்பு, மஞ்சள் (செடியுடன்) எருக்கன் இலை, பூ, துளசி இலை, ஊமத்தங்காய், அருகம்புல் போன்ற வற்றைப் படைத்து வணங்குகின்றனர்.

விநாயக வணக்கம் தமிழர்களிடமும், தெலுங்கரிடமும் வேறுபாடின்றி ஒன்று போலவே காணப்படுகிறது. வழிபாட் டிற்குப் பின்னர் அங்குக் கூடியிருக்கும் மக்களுக்கு சுண்டல், காராமணி, மொச்சை போன்றவற்றில் வெல்லம், அல்லது

சர்க்கரைக் கலந்து கொடுப்பதுண்டு. சில இடங்களில் தமிழர்களும், தெலுங்கரும் சேர்ந்து இவ்வழாவினை நடத்துவிக்கின்றனர். இவ்விழாவின்போது உயிர்ப் பலி கொடுப்பதில்லை. சைவ முறையே அனுசரிக்கப்படுகிறது.

## சிவ பக்தி :

சைவ மதத்தில் சிவனை முதன்மையான தெய்வமாகக் கருதி வழிபடுகின்றனர். என்றாலும் நாட்டுப்புற மக்கள் விநாயகருக்கடுத்த நிலையில் சிவனை வைத்து வணங்குவர். சிவனை வழிபடுவோர் சைவர். தெலுங்கில் 'சைவுலு' என்பர். சர்வ தேவர்களும் சிவனை வணங்கியதாகப் புராணங்கள் கூறுகின்றன. எனவே தான் சிவனுக்கு 'ஈசுவரன்' என்ற பெயருமுண்டு. சிவன் எல்லா உயிர்களுக்கும் தலைவன் என்றும், மோட்சத்திற்கு அதிபதி சிவனே என்றும் தமிழ் மக்கள் நம்புவதைப் போன்று தெலுங்கு மக்களும் நம்பிக்கை வைத்துள்ளனர். திருமணத்தின்போது மணமக்கள் சிவனுக்குமுன்பு நின்றுக் கொண்டு, வேண்டுவதாகத் தமிழிலும், தெலுங்கிலும் பாடல்கள் பாடப்பெறுகின்றன.

மங்கள மேளம் கொட்ட
மணமகன் தாலி கட்ட
சிவனே வரம் தரணும்
சிவனே துணை வரணும்

என்று தமிழிலும்,

சரணம் மல்லேஷா
சரணம் மல்லேஷா—மா
பெள்ளி ஜரிபிஞ்சி—ஈ
பேத வாட்னி காப்பாடு
ஸ்ரீசைல மல்லேஷா
சரணம் மல்லேஷா[25]

என்றுதெலுங்கிலும் பாடுகின்றனர். ஸ்ரீ சைலத்தில் வீற்றிருக்கும் சிவனே இந்த ஏழையைக் காப்பாற்றித் திருமணத்தை நடத்துவாயாக' என்பது தெலுக்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

சிவபெருமானின் இருப்பிடம் கைலாசம், அவருடைய வாகனம் நந்தி. நெற்றிக் கண்ணை உடையவர். பிறைச் சந்திரனைத் தலையில் அணிந்ததன் காரணமாக இவரைச் சந்திரசேகர் என்றும் அழைப்பர். சிவனுக்குப் 'பசவன்னா' என்ற பெயரும் உண்டு. ஒரு சிவ பக்தன் தன்னுடைய பாவங்களினின்று மீட்குமாறு வேண்டுவதாகப் பாடல் ஒன்று இம்மாவட்டத்தில் தமிழிலும் தெலுங்கிலும் கிடைத்துள்ளது.

சிவனே சிவனே நந்தி வாகனனே
நெத்திக் கண்ணை பெற்றவரே
பாவங்கள் பறந்து ஓட எங்கள
பத்திரமா காப்பாத்துமய்யா[26]

என்று பாடிச் சிவனை வழிபடுகிறார். இதுபோன்ற தெலுங்குப் பாடலொன்றையும் காணலாம்.

திருமணத்தம்பதிகள் சிவனை வேண்டுவதாகவே தமிழ்ப் பாடலிலும், தெலுங்குப் பாடலிலும் குறிக்கப்பட்டுள்ளது. ஆந்திரத்தில் ஸ்ரீசைலத்தில் புகழ்வாய்ந்த சிவன் கோவில் உள்ளது. இதனைப் பற்றிய குறிப்பு தெலுங்குப் பாடலில் காணப்படுகிறது. பாவத்தைப் போக்குகின்றவராகவே இரண்டு பாடல்களிலும் சிவன் கருதப்படுகிறார். நெற்றிக் கண்பற்றித் தமிழ்ப் பாடலில் குறிப்பிட்டுள்ளது. நான்குப் பாடல்களும் இசையில் வேறுபடுகின்றன.

அரகரா மகாதேவா சங்கரா
நன்னத்துகோரா பார்வதீஸ்வரா
அனுதினமு நின்னு வேடு கூண்டுரா
அன்னி பாபமுலனு தொலிகிஞ்சு[27]

எனப் பாடுவர், ''சிவனே அனுதினமும் உன்னை வேண்டி கொள்கிறேன்; என் பாவத்தைப் போக்குக்'' என்பது பாடலுக்குரியப் பொருளாகும்.

## மகா சிவராத்திரி விரதம் :

சிவனுக்கு அனுசரிக்கப்படும் பூசைகளுள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது மகா சிவராத்திரி. இம் மாவட்டத்தில் வாழும் தமிழர்கள் 'ஏக்காதசி' 'கொள்ளுபண்டிகை' என்றும், தெலுங்கர் சிவராத்திரி 'உலவலபண்டகா' என்றும் அழைக்கின்றனர். சுகத்தை அளிப்பவன் சிவன் என மக்கள் நம்புகின்றனர். இறப்புக்கு முதன்மையான கடவுள் சிவனே. இவ்வுலகில் பிறந்ததும் தீய செயல்களின் காரணமாக எதிர்பாராத விதத்தில் மரணம் ஏற்படுகின்றது. எனவே, சிவனைத் தொழுது கொண்டால் திடீர் மரணம் ஏற்படாது என நம்புகின்றனர். தினமும் உண்கிறோம், உறங்குகிறோம். ஒரு நாளாவது உண்ணுவதையும், உறக்கத்தயும் நிறுத்திவிட்டு சிவனுக்கு ஆராதனை செய்யும்படி மகரிஷிகள் கூறுவர்.[23] இதன் அடிப்படையில் வந்ததே மகா சிவராத்திரி ஆகும்.

சிவராத்திரி ஒவ்வொரு ஆண்டும் மாசி மாதம் அமாவாசையன்று வருகின்றது, தமிழர்கள் அன்று பகல் முழுவதும் உண்ணாமல் விரதத்தை அனுசரித்து அன்று இரவு முழுவதும் தூங்காமல் விழித்திருப்பதுபோல, தெலுங்கரும் அந்த நாளில் உண்ணாமையையும். உறங்காமையையும் கடைப்பிடிக்கின்றனர். சிவராத்திரியன்று இரவு கண் விழித்திருந்தவர்களுக்கு எத்தகைய துன்பமும் ஏற்படுத்தாமல் சிவன் காப்பார் என்ற நம்பிக்கை இம்மக்களிடையே காணப்படுகின்றது. இதனை வெளிப்படுத்தும் பாடல்கள் தமிழிலும் தெலுங்கிலும் காணப்படுகின்றன.

சிவ பூஜெ செய்ய வேணுமே—நம்ப
சிக்கலெல்லம் தீந்து போகுமே
சிவராத்திரி பூஜெ செய்தால் நாளெல்லாம்
சுபராத்ரி உண்டாகுமே[29]

இதுபோன்ற பொருளையுடைய தெலுங்குப் பாடலொன்றும் இம்மாவட்டத்தில் பாடப் பெறுகின்றது.

சரணம் மல்லேசா சரணம் மல்லேசா
சரணம் சிவ குரு நாதா
சிவராத்ரி ஜாகார முன்ன வாரிக்கி
சிந்தலன்னி மிடபாயு மல்லேசா[30]

என்று பாடுவர். ''சிவராத்திரியன்று இரவு முழுவதும் உண்ணாமலும், உறங்காமலும் சிவனுக்குப் பூசை செய்து ஆராதித்தால் கவலைகள் கஷ்டங்களெல்லாம் விலகி ஓடும்'' என்பது மேற்கண்ட தெலுங்குப் பாடலுக்குரிய பொருள் ஆகும். இம்மாவட்டத்தில் வாழ்கின்ற தமிழர்கள் சிவராத்திரி இரவு உறங்காமல் இருப்பதற்காக சிவன் கோயிலில் சிவபூசை செய்து கொண்டும், சிவனுடைய லீலைகளை வருணித்துக் கொண்டு பாடியும், சிலர் இல்லங்களில் 'தாயம்' விளையாடிக் கொண்டும், காலத்தைக் கழிப்பது போலவே தெலுங்கு மக்களும் மேற்கண்ட முறைகளைக் கையாளுகின்றனர். சிவராத்திரியன்று பூசை செய்யும் போது சிவனைக்குறித்துப் பாடும் பாடல் ஒன்று இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

ஆதியும் சிவனே
அந்தமும்சிவனே
அண்டமும் சிவனே
பிண்டமும் சிவனே
சிவனே இல்லாம
நீயும் இல்ல
நானும் இல்ல— இந்த
உலகம் இல்ல
உயிரும் இல்ல[31]

இது போன்ற பொருளையுடைய தெலுங்குப் பாடலொன்றும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

அந்த்தா சிவமயமுரா*
ஐக்மந்த்தா சிவுடெரா
அண்டமு சிவுடே பிண்டமு சிவுடே
சிவுடு லேனிதி ஜிவமு லேதுரா
நீலோ நாலோ நகிலி ப்ராணுலலோ
நிலிச்சி வெலுகுனதி சிவுடேரா
சிவுடு லேனிதி ஜீவமு லேதுரா
ஜீவன் ஜோதியு சிவுவடரா[12]

என்று பாடுவர். "இவ்வுலகிலுள்ள உயிர்கள் அனைத்தும் சிவமயமே. சிவன் இல்லாவிடில் உயிர்கள் இல்லை. உன்னிலும், என்னுலும் இருக்கும் நிலை பெறா உயிர் சிவனுடைய கட்டளையின் பேரிலேதான் இயங்குகின்றது" என்பது மேற்கண்ட தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும். மாசிமாதம் அமாவாசையன்று சிவராத்திரியை அனுசரிப்பதற்குப் பலர் பலவிதமான விளக்கங்களை அளிக்கின்றனர். சாதாரணமாக குளிர்காலத்தில் மரணமடைபவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கும். குளிர்காலமானது சிவராத்திரியோடு முடிவடைகின்றது. "சிவராத்திரியன்று சிவ...சிவ ..என்று சொல்லிக் கொண்டே குளிர் போய்விடும்" என்ற பழமொழி தமிழர்களிடம் காணப்பட்டு வருவதைப் போன்று "சிவராத்ரிநாடு சிவ...ரின்னி சலி போவுனு!" என்ற பழமொழி தெலுங்கரிடையேயும் காணப்படுகின்றது. கடந்து போன குளிர் காலத்தில் மரணம் ஏற்படாமல் காப்பாற்றியதற்காக சிவனுக்கு நன்றி சொல்லும் வகையில் சிவராத்திரி விசேடத்தை மக்கள் ஏற்படுத்திக் கொண்டிருப்பர்[13] என்று அறிஞர்கள் கூறுவர்.

சித்தூர் மாவட்டத்தில் சிவராத்திரி விரதத்தைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். புத்தூர் வட்டத்திலுள்ள 'நாராயண வனம்' என்ற கிராமத்துக்கருகில் "கைலாச

நாதர் கோனை' என்ற மலை உள்ளது. அங்குசிவ வாலயம் கட்டப்பட்டுள்ளது. சிவராத்திரியன்று அங்கு விசேஷித்த பூசைகள் நடத்தப் பெறுகின்றன. இயற்கையன்னை எழில் நடம்புரியும் இந்த மலையைக் காணத் தமிழர்களும், தெலுங்கரும் சிவராத்திரியன்று திரளாகக் கூடி இறைவனைத் தொழுது மகிழ்கின்றனர். இந்த இடம் ஆந்திராவின் சுற்றுலா மையங்களுள் ஒன்றாகத் திகழ்கின்றது என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் சிவராத்திரிப்பூசை, சின்ன கல்லு வட்டத்திலுள்ள 'தலகோனா' என்ற இடத்தில் சிறப்பாக நடைபெறுகின்றது. மலை உச்சியில் இங்கு கோயில் அமைக்கப்பட்டுள்ளது. வானளாவிய மரங்களும், அருவிகளும், இம்மலையில் உள்ளன. அன்று இரவு நாடகம், நடனங்கள், வாண வேடிக்கைகள் போன்ற நிகழ்ச்சிகளின் மூலம் கூடியிருக்கும் மக்களை மகிழ்விக்கின்றனர். இவ்விடமும் சுற்றுலா மையமாகத் திகழ்கின்றது. தமிழர்களின் கூட்டம் கைலாச நாதர் கோனையில் திரண்டிருப்பது போன்று, தெலுங்கர் 'தலைகோனா' விற்குத் திரளாக வந்து சிவனை வழிபட்டுச் செல்வர்.

## கௌரி விரதம் :

இம்மாவட்டத்தில் தமிழர்கள் கௌரி விரதத்தைப் புனிதமாகக் கருதுவது போன்று தெலுங்கரும் கௌரி விரதத்தைப் புனிதமாக அனுசரிக்கின்றனர். தெலுங்கில் இதனை 'கேதார கவ்ரிவிரதமு' என்பர். கேதாரமு என்றால் 'விளைச்சல்', 'கழனி' என்ற பொருளும் உண்டு.34 சிவபெருமானுக்கு விளைச்சல்காரன் என்ற பெயரும் உண்டு. தீபாவளிக்குப் மறுநாள் கௌரி விரதத்தை அனுசரிக்கின்றனர். அந்நாளில் தமிழர்கள் உண்ணாவிரதம் இருந்து கௌரிக்கு பூசை செய்வது போலவே தெலுங்கரும் விரதத்தை அனுசரித்துப் பூசையை மேற்கொள்கின்றனர். தெலுங்கில் 'சக்திதீரய் பூஜா' என்றும் அழைப்பதுண்டு. பெரும்பான்மையாக விவசாயிகள் இப்பண்டிகையைச் சிறப்

பாடிக் கொண்டாடுவர். கௌரி பொம்மையை நிற்க வைத்து மஞ்சள் பூசி, குங்குமப் பொட்டு வைத்து, மலர்களால் அலங்கரித்துப் பெண்கள் குழுவாகக் கூடி இவ்வாறாகப் பாடுவர்.

''முக்கோட்டி தேவர்களும்
மண்டியிட்டுக் கேட்டாலும்—அந்த
நாகலோக கன்னி மாரு
நரபலி இட்டாலும்
உந்தன் வரம் இல்லெயம்மா—கவ்ரி
நோமு கவுறு கட்டி
நாமத்த சொன்னாலும்
வரம் வந்து சேருமம்மா
வந்த துன்பம் போகுமம்மா'' 35

இதுபோன்ற பொருளுடைய தெலுங்குப் பாடலும் இம் மாவட்டத்தில் களப்பணியின்போது ஆய்வாளரால் சேகரிக் கப் பெற்றது.

''முக்கோட்டி தேவதனு
சக்கனி காந்தனு
எக்குவகா நினு கூர்ச்சி
பெக்கு நோமுனு நோமி
எக்குவா ரைரீ வெரம்மா
இஹ லோகமுல யந்துனு...'' 36

என்று பாடுவர். ''மூன்று கோடி தேவர்களையும் செவ்வனே வணங்கி அவர்கள்பால் பாசம் வைத்து நோன்பு இருந்து பூசை செய்பவசகளைக் காக்கும் கௌரியே! இவ்வுலகிலே நீங்கள் வாசம் செய்ய இயலாதா?'' என்பது மேற்கண்ட தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

கௌரிக்கு விரதம் இருக்கும் போது 'பாய்' போட்டுப் படுத்தலும், தலையணை வைத்து உறங்குதலையும், தமிழர் கள் புறக்கணிப்பது போலவே தெலுங்கரும் செய்கின்றனர்.

கௌரிக்கு அதிரசம் என்ற பலகாரம் மிகவும் பிடித்தமான தாகக் கூறுவர். கௌரிக்கு 21 பணியாரம், 21 வெற்றிலை, 21 பாக்கு, 21 பழம், 21 மஞ்சள், 21 தாலிகயிறு போன்ற வற்றைத் தமிழர்கள் வழக்கமாகக் கொண்டுள்ளதைப் போன்று தெலுங்கரும் ஒரே எண்ணிக்கையில் படையல் களைப் படைக்கும் வழக்கத்தைக் கொண்டுள்ளனர்.

இம்மாவட்டத்தில் மார்கழி மாதம் முழுவதும் கௌரி பொம்மையை மலர்கள் நிரப்பியக் கடையில் வைத்து சிறுமி கள் வீடுதோறும் கும்மியடித்துப் பணம் சேகரிப்பர். இத்தகைய வழக்கம் தமிழ்ச்சிறுமிகளிடத்திலும், தெலுங்குச் சிறுமிகளிடத்திலும் காணப்படுகின்றது.

### வரலட்சுமி விரதம் :

இவ்விரதத்தைத் தமிழர்கள் சிறப்பாக அனுசரிப்பதைப் போன்று தெலுங்கரும் சிறப்பாகவும் புனிதமாகவும் அனுசரிக்கின்றனர். வரலட்சுமி விரதத்தில் சுமங்கலிகள் மட்டுமே பங்கேற்க வேண்டும் என்ற நியதி இன்றும் இம்மாவட்டத்தில் வாழும் தமிழர்களிடத்தில் இருந்து வருவதைப் போல தெலுங்கரிடையேயும் காணப் படுகின்றது. அனைத்துச் சுமங்கலிகளும் வரலட்சுமி விரதம் இருக்கலாம். ஆனால் அனைவருடைய வீடுகளிலும் வரலட்சுமிக்குப் பூசை செய்வதில்லை. செய்யவும் கூடாது. பரம்பரையாக ஒருவருடையவீட்டில் பூசை நடத்துவார்கள். அனைவரும் அந்நேரம் பூசையில் பங்கேற்க வேண்டும். ‘மாதவிலக்கு’ நாட்களில் சுமங்கலிப் பெண்கள் வரலட்சுமி விரதத்தை அனுசரிக்க மாட்டார்கள். பூசை நடத்தப் பெறும் வீட்டிற்குள்ளும் அனுமதிக்கப் படுவதில்லை. விரதம் இருக்கும் நாளில் பாய் போட்டுப் படுத்தலையும் தலையணை வைத்து உறங்கலையும் புறக்கணிப்பர். இத்தகைய பழக்க வழக்கங்கள் தமிழர்களிடையே காணப்படுவது போன்று தெலுங்கரிடையேயும் காணப்படுகின்றன. மார்கழி மாதம் பவுர்ணமிக்கு முன்பு வரும் வெள்ளிக்கிழமை ‘வரலட்சுமி

விரதம்' அனுசரிக்கப்படுகின்றது. வரலட்சுமிக்கு மிகவும் பிடித்தமான பலகாரம் 'எள்ளுருண்டை' ஆகும். இதனைத் தெலுங்கில் 'ஜில்லெடக்காயிலு' என்பர். அரிசிமாவு, வெல்லம், தேங்காய், எள் போன்றவைகளைக் கொண்டு இப்பலகாரத்தைத் தயார் செய்து படைப்பர். வரலட்சுமி விரதத்தன்று பெரியதேங்காய் ஒன்றை எடுத்து அதற்கு மஞ்சள் பூசி, பொட்டு வைத்து, மலர்களால் அலங்கரித்துச் சொம்பில் வைப்பர். இதனைக் 'கலசம்' என்பர். சுமங்கலிப் பெண்கள் ஒன்று சேர்ந்து பூசை செய்யும்போது தமிழிலும் தெலுங்கிலும் பாடல்கள் பாடப் பெறுகின்றன.

''பத்தூட்டு பொங்கலும் கூடிக்குது
பத்தி விரதம் இருந்து
வெள்ளிக் கெழம வெடிகாலம்
வாசலில கோலம் போட்டு
வாசமுள்ள கலசம் வெச்சி
கும்படறோம் வரலட்சுமி
குணமுள்ள குல வௌக்கே
கொண்டவர காரும்மமா. 37

இது போன்ற தெலுங்குப் பாடலும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

''மொக்கேனு நா பாலி சுக்ரவாரபு லக்ஷ்மி
ஒக்க சித்தம்புன ஹ்ருதயமுனந்து
சக்ககதா கூர்ச்சோனி
சௌபாக்யமுல நொசகு
அக்கரக்கு ராவம்மா
ஆதிலட்சுமி''38

''வெள்ளிக்கிழமை தோறும் வரலட்சுமியை வணங்கினேன். ஒரே எண்ணமுடன் உள்ளத்தில் அமர்ந்து நன்மைகளைச் செய்வாயாக; தேவைப்படும் போது துணை புரிக ஆதிலட்சுமியே'' என்பது தெலுங்குப் பாடலுக்குரிய

பொருளாகும். அன்று விரதம் இருக்கின்றவர்களின் வீட்டில் சாப்பாடு செய்வதில்லை. பலகாரங்களைப் புசித்து அந்த நாளைக் கழிப்பர்.

பொதுவாக வரலட்சுமி விரதத்தைத் தமிழரைக் காட்டிலும் தெலுங்கர் மிகவும் சிறப்பாகச் செய்கின்றனர். வழிபாட்டில் மேற்கொள்ளப்பெறும் சடங்குகளில் தமிழர்களும் தெலுங்கரும் ஒன்றுபட்டுக் காணப்படுகின்றனர். பெண்கள் தங்களுடைய மாங்கல்யம் நிலைத்து நிற்கவே இத்தகைய விரதத்தை மேற்கொள்கின்றனர். வரலட்சுமிக்குப் பூசை செய்துவிட்டுப் படையல்களை வைத்து விட்டு, தங்களது பொருத்தனைகளை ஏற்றுக் கொள்ளுமாறு பாடல்கள் பாடுவதுண்டு. பூசை முடிந்த பின்னர் அங்குக் கூடியிருக்கும் சுமங்கலிப் பெண்கள் அனைவருக்கும், மஞ்சளும், குங்குமமும் சிறிதுப் பூவும் கொடுப்பர். குங்குமத்தையும் மஞ்சளையும் பெற்றுக் கொண்ட பெண்கள் தங்கள்தாலியில் மஞ்சளைப் பூசிவிட்டு குங்குமப் பொட்டு வைத்துக்கொள்வர். இத்தகைய சடங்குகள் இம்மாவட்டத்கூல் வாழ்கின்ற தமிழர்களிடத்திலும், தெலுங்கரிடத்திலும் காணப்படுகின்றன. பூசை முடிந்து வீட்டை விட்டு வெளியேறும் போது மஞ்சள் நீரை வேப்பிலையால் தொட்டு அனைவர் மேலும் தெளிப்பர். வரலட்சுமி விரதத்தன்று 'நோன்புக் கயிறு' கட்டும் பழக்கம் பெண்களிடையே இருந்து வருகின்றது. இக்கயிற்றைக் கழுத்தில் போட்டுக் கொள்வர். இதனைத் தமிழில் 'நோமுக்கயிறு' என்றும், தெலுங்கில் 'நோமுத்தாடு' என்றும் அழைக்கின்றனர். இக்கயிற்றினை மூன்றாம் நாளில் கழற்றிப் பாலில் வைத்துப் பாலுடன் கயிற்றை ஏதாவது ஒரு கிணற்றில் நீரில் கலந்து விடுவர். இப்பழக்கம் தமிழர்களிடத்திலும் தெலுங்கரிடத்திலும் காணப்படுகின்றது.

**முருகன் :**

இம்மாவட்டத்தில் மக்கள் முக்கிய கடவுளாக வழிபடுவது முருகனையே ஆகும். சிறப்பாக தமிழர்களின் குல தெய்வமாகவும், குழந்தை தெய்வமாகவும் முருகக் கடவுள் திகழ்கின்றார். ஆனால் இம்மாவட்டத்தில் வாழும் தெலுங்கரிடையே 'முருகன் வழிபாடு' மிகவும் குறைவு என்று கூறலாம். இதற்கு காரணம் முருகன் கோயில் அந்நிய மாநிலத்தில் அமையப்பெற்றதே ஆகும். தமிழகத்தை ஒட்டியுள்ள வட்டங்களில் முருகனைச் சிறப்புடன் வழிபடுகின்றனர். ஆடிக்கிருத்திகையன்று முருகனுக்குத் தமிழர்கள் காவடி எடுப்பது போலவே தெலுங்கரும் காவடி எடுக்கின்றனர். முருகனுக்கு, பழம், வெற்றிலைப் பாக்கு, நெய், பால், பூ போன்றவற்றைப் படைப்பர். தெலுங்கர் ஆடிக்கிருத்திகையன்று 'காவடி' எடுத்துக்கொண்டு திருத்தணி மலைக்குச் சென்று வருவதோடு சரி. அதன் பின்னர் ஒவ்வொரு நாளும் அவர்களுடைய வாயில் உச்சரிப்பது 'கோவிந்தா' 'ஏடுகொண்டல வாடா' 'எங்கடேசா' என்பதேயாகும். இம்மூன்று பெயர்களும் திருப்பதி திருமலையில் வீற்றிருக்கும் திருமாலைக் குறிக்கும் சொல்லாகும். முருகனுடைய வழிபாட்டில் முக்கிய இடம் பெறுவது 'காவடி' எடுத்தலே ஆகும். இம்மாவட்டத்தில் வாழும் தமிழர்களும் தெலுங்கரும் 'காவடி' எடுத்தலைச் சிறப்பாகச் செய்கின்றனர். காவடி எடுக்கும் போது பம்பை ஒலிக்கப்படுகிறது. சிலம்பாட்டமும் இடம்பெறுவதுண்டு. காவடி எடுக்கும்போது தமிழர்களும் தெலுங்கரும் மஞ்சள் அல்லது சிவப்பு ஆடையையே அணிகின்றனர். முருகனுக்கு பூ, பழம், தேங்காய்; பணம் போன்றவற்றைக் காணிக்கையாய் படைக்கின்றனர். ஆடிக்கிருத்திகையன்று காவடி எடுத்துச் செல்லும்போது தமிழர்களும், தெலுங்கரும் முருகன் பாடல்களைப் பாடுகின்றனர்.

''அரகரனே முருகய்யா
என்ற சப்தம்—அரோகரா
என்ற சப்தம்—
ஆறுமுகம் முருகய்யா காவடிகள்

ஓதி வச்ச முருகய்யா—என் குருவே
ஒரு நாளும் முருகய்யா
நான் மறவேன்''[9]

என்று தமிழில் காவடிப் பாட்டுப் பாடுவர். தெலுங்கிலும் இதுபோன்ற பாடல் கிடைத்துள்ளது.

அரோகரா முருகா
எம் குருவே அரோகரா
அந்துரு கலிச்சி ஒச்சாமே
அந்தாலா முருகா—அரோகரா

வேலாயுதா சண்முகா
வேதனலோ—அரோகரா
மேமொச்சி நீலிச்சாமே
தயகலிகிஞ்சு—அரோகரா
ஜில்லேடு பூல தண்டா—அரோகரா
சல்லங்கா தெச்சாமெ—அரோகரா
மெல்லங்கா திகிரண்டி—அரோகரா
மொக்கும்படி சேயண்டி—அரோகரா

''அழகான முருகனே அனைவரும் ஒன்றுகூடி வந்தோம்; வேலாயுதா வேதனையில் நாங்கள் வந்து நின்றுள்ளோம்; எம்மீது இரக்கம் காட்டுக; எருக்கன் மாலையுடன் வந்துள்ளோம். தங்கள் இருப்பிடமான மலையைவிட்டு இறங்கி வந்து, எங்களுடைய பொருத்தனைகளை ஏற்பாயாக'' என்பது பாடலுக்குரிய பொருளாகும்.

தமிழ்ப் பாடலில் முருகனைப் பற்றிய குறிப்புகாணப் படுவது போன்று தெலுங்குப் பாடலிலும் காணப்படுகிறது. ஒவ்வொரு பாடல் வரிக்கும் ''அரோகரா'' என்ற சொல்

இரண்டு பாடல்களிலும் கையாளப்படுகின்றது. இரண்டு) பாடல்களும் இசையில் ஒன்படுவதைக் காணமுடிகின்றது.

ஆய்வுக்களமாக விளங்கும் சித்தூர் மாவட்டத்தில் வாழும் தெலுங்கர் தமிழில் பாடப்படும் காவடிப்பாடல் களை மொழிப்பெயர்த்துப் பாடுவதை அறியமுடிகிறது. தமிழகத்தை யொட்டியுள்ள தெலுங்கு மக்களுள் பெரும் பாலோர் தமிழிலேயே காவடிப்பாட்டுப் பாடிவிடுகின்றனர். இதற்கு முக்கியக்காரணம் திருத்தணி முருகன் கோயில், வள்ளியம்மை வீற்றிருக்கும் வள்ளிமலை போன்ற புண்ணிய ஸ்தலங்கள் தமிழகத்தில் இருப்பதே காரணமாகும். தமிழகத் திற்குக் 'காவடி' எடுத்துச் செல்லும்போது தமிழிலேயே பாடி ஆடினால் நன்றாக இருக்கும் என்ற மனப்பான்மை இம்மக்களின் மனதில் இயல்பாகவே தோன்றிவிடுகிறது எனக் கொள்ளலாம். மொழிப் பற்று உள்ள சில கலை ஞர்கள் தமிழ் பாடல்களைத் தெலுங்கில் மொழி பெயர்த்து முருகனுடைய பக்தர்களுக்கு உதவுவதையும் இம்மா வட்டத்தில் காணமுடிகிறது. பொதுவாகத்தெலுங்கு மக்கள் தமிழ்ப்பாடல்களைப் பெரிதும் விரும்பிப்பாடுகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## வைணவப் பக்திப் பாடல்கள் :

பெருந்தெய்வ வழிபாடுகளுள் வைணவ பக்திப் பாடல் களைப் பாடுவதும் ஒன்றாகும். ஸ்ரீ மகாவிஷ்ணு மும்மூர்த்தி களில் மூன்றாம் இடத்தைப் பெறுகின்றார். விஷ்ணுவை முதன்மையான கடவுளாக வைத்துச்சேவிப்பவர்களை வைணவர்கள் என்பர். தெலுங்கில் 'வைணவுலு' என்பர். இதனைத்தெலுங்கில் 'பாகவத்த மதம்' என்றும் அழைப்பர். வைணவ பக்தி ஆச்சாரங்களைப் பரப்பியவர்கள் ஆழ்வார் களேயாவர். முதன்முதலில் ஆந்திரச தவாகர்களின் காலத் தில்இந்த பாகவத மதம் வடக்கோ இந்துஸ்தானத்திலிருந்து தெற்கு நோக்கி வந்ததாகக் கூறப்படுகிறது.[41] துன்மார்க்

களுக்குத் தண்டனையை அளிக்கவும், பாவத்தினின்று மீட்கவும் மகாவிஷ்ணு பல அவதாரம் எடுத்தார். அதில் இராமவதாரமும், கிருஷ்ணவதாரமும் நாட்டுப்புறமக்களுக்கு மிகவும் பிடித்தமானவையாகும். கலியுக அவதாரமாகச் சொல்லப்படும் திருமாலும் மகாவிஷ்ணுவே. இம்மாவட்டத்தில் வாழும் தமிழர்களுக்கும் தெலுங்கருக்கும் திருமாலின்பால் பாசமும் பற்றும் அதிகம் என்றே கூறலாம்.

## இராம பக்தி :

இம்மாவட்டத்தில் தமிழர்களின் முதன்மையானக் கடவுளாக ஸ்ரீ இராமச் சந்திர மூர்த்தி விளங்குகிறார். அவ்வண்ணமே தெலுங்கரும் இராமனை முதன்மையான இடத்தில் வைத்து வணங்குகின்றனர். தினமும் இராம நாமத்தை உச்சரிப்போமானால் உள்ளம் புனிதமடைகிறது என்று நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர். இம்மாவட்டத்தில் தமிழர்கள் வாழும் கிராமங்களிலும், தெலுங்கர்கள் வாழும் கிராமங்களிலும் இராமருக்குக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. தங்களுக்கு ஏற்படும் இன்பமும் துன்பமும் இராமருடைய கட்டளையின் பேரிலேதான் என நம்புவர். அனைத்தும் இராமமயம், உலகெல்லாம் இராம மயம் என்பது நாட்டுப்புறமக்களின் எண்ணமாகும் என்று சொல்லப்படுவதாகப் பாடல்கள் பல பாடப்படுகின்றன.

**''ஆதியும் ராமனே**
**அந்தமும் ராமனே**
**அயோத்தி மன்னனே**
**லோக மெல்லாம் நீயே—அந்த**
**பூலோக மெல்லாம் நீயே**
**காடும் நீயே—ராமா**

காட்டுப் பூவும் நீயே
கடலும் நீயே—ராமா
கண்ணனும் நீயே—மாயக்
கண்ணனும் நீயே.[12]

இதுபோன்ற பொருளுடைய தெலுங்குப் பாடல் ஒன்றும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

''அந்த்தா ராம மயம்
ஜக மந்த்தா ராம மயம்
அந்தரங்க முனா
ஆத்ம ராமுடு
அனந்த ரூப்பமுனா
விந்த்த ராமுடு ஜகமந்த்தா
நதுலு வனம்புலு
நா நா ம்ருகம்புலு
விதித கர்ம முலு
வேத சாஸ்திர முலு
அன்னியு ராம மயம்
மனக்கேதி பயம்''[13]

''எல்லாம் இராமமயம், இவ்வுலகமெல்லாம் இராமமயம், உள்ளத்தில் ஆத்ம இராமன்; ஆனந்த உருவத்தில் அதிலே இராமன். நதிகளும், மரங்களும், மிருகங்களும் நிறைந்த இவ்வுலகத்திலும், வேதங்களிலும் இராமனே. இனி நமக்கு பயம் ஏன்?'' என்பது தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

எல்லாம் இராமமயமே என்ற கருத்து இரண்டு பாடல்களிலும் காணப்படுகிறது. 'அயோத்தியைப்பற்றியும், கண்ணனவதாரம்பற்றியும் தமிழ்ப்பாடலில் குறிக்கப்பட்டுள்ளது. வேதத்தைப்பற்றித் தெலுங்குப் பாடலில் குறிக்கப்பட்டுள்ளது. 'சர்வமும் இராமமயமே' என்ற பொதுவானக் கருத்தை இவ்விரண்டு பாடல்களும் வெளிப்

படுத்துகின்றன. இரண்டு பாடல்களும் இசையில் ஒன்று படுகின்றன.

தமிழைவிடத் தெலுங்கில் இராமரைக்குறித்தபாடல்கள் அதிகமாகப் பாடப்படுகின்றன. ஸ்ரீ இராமச்சந்திரனையும், சீதையையும் இம்மாவட்டத்தில் வாழ்கின்ற தமிழ், தெலுங்கு நாட்டுப்புறமக்கள் தங்களது குடும்பத்தில் ஒருவராக மதித்துப் போற்றுகின்றனர். ஏழையானாலும், அவன் பணக்காரனாக மாறினாலும் 'இராமனைமறவாதே மனமே' என்று தன் மனதுக்கு அறிவுறுத்துவதாகத் தமிழி லும் தெலுங்கிலும் பாடல்கள் பாடப்படுகின்றன.

''பணம் வந்து சோந்தாலும்—கெட்ட
குணம் வந்து சேர்ந்தாலும்
வனம்போன ராமர
மறக்காதே—மனமே
மறக்காதே

கஷ்டம் பல வந்தாலும்
நஷ்டம் பல உண்டானாலும்
துஷ்டனோடு சேர்ந்தாலும்
இஷ்டம் போல் நடந்தாலும்
வனம் போன ராமர
மறக்காதே—மனமே
மறக்காதே''[44]

இதுபோன்ற பொருளையுடைய தெலுங்குப் பாட லொன்றும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

''ராமுனி மறவக்கே—ஓ மனசா
ராமுனி மறவக்கே

எக்குவ சம்பாதன லொச்சினா கானி
ஏனுகு குர்றமுலெக்கினா கானி
ராமுனி மறவக்கே—ஓ மனசா
ராமுனி மறவக்கே

பிச்சி வாடனி பேரொச்சினா கானி
பிரியமுத்தோ பெத்தலு பிலிச்சினா கானி
கண்டமு மிக்கிலி கலிகினா கானி
காயமு வியாதுலு கப்பினா கானி
நிந்துக்கு லோபடி நிலிச்சினா கானி
நிண்டு சதுவுலு நேர்ச்சினா கானி
ராமுனி மறவக்கே—ஓ மனசா
ராமுனி மறவக்கே[45]

*என்று பாடுகின்றனர்.*

''இராமனை மறவாதே மனமே
இராமனை மறவாதே

அதிக வருமானம் வந்தாலும்
யானை, குதிரையைப் பெற்றாலும்
இராமனை மறவாதே.

பயித்தியக் கார னென்று சொன்னாலும்
பிரியமானவன் என்றழைத்தாலும்
கஷ்டங்கள் பல வந்தாலும்
வியாதிகள் வந்திட்டாலும்
பெரிய படிப்பு படித்தாலும்
இராமனை மறவாதே மனமே''

*என்பது தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.*

*''தன்னுடைய மனசாட்சிக்கு அறிவுரை வழங்கு வதாகவே இரண்டு பாடல்களின் பொருளும் அமைந் துள்ளன. சமுதாயத்தில் உயர்ந்த நிலையை அடைந் தாலும், தாழ்ந்த' நிலைக்குச் சென்றாலும் இறை வனிடத்தில் தன்னைத் தாழ்த்திக் கொண்டு அன்பு வைக்க வேண்டும் என்பதே இவ்விரண்டுப் பாடல்களும் வெளிப் படுத்தும் பொதுவான கருத்தாகும். இவ்விரண்டு பாடல் களும் இசையில் வேறுபடுகின்றன.*

**கிருஷ்ண பக்தி :**

நாட்டுப்புற மக்களிடையே கிருஷ்ணபகவான் நீங்காத இடத்தைப் பெற்றுத் திகழ்கின்றார். கிருஷ்ணனைக் குழந்தையாக நினைத்துப் பாடும் பாடல்களே இம்மாவட்டத்தில்அதிகமாகப் பாடப்படுகின்றன. தாலாட்டுப் பாடல்களிலும், கிருஷ்ணனைத் தாலாட்டுவது போன்ற தாய்மார்கள் கற்பனை செய்துகொண்டு பாடுவதாகப் பாடல்கள் கிடைத்துள்ளன. மேலும், இம்மாவட்டத்திலுள்ள தமிழ், தெலுங்கு நாட்டுப்புற மக்களிடையே ஸ்ரீ கிருஷ்ணனுடைய லீலைகள், மகிமைகள் போன்றவைகளைப் பற்றிப் பாடல்களும் கிடைத்துள்ளன.

பாலு பாலூன்னா கிருஷ்ணன் (ன்)
பாலு கொடுக்க போனே (ன்)
பாலு வாணான்னா கிருஷ்ணன்
பந்தங்கள் எடுக்க வந்தான்
என்னடி எசோதா உந்தன் மகன்
அத்திளி உடு துடுக்கம்
அரியாத பையன் எந்தன் மகன்
அநியாயம் சொல்ல வேணா

தயிறு தயிறுன்னா கிருஷ்ணன்
தயிறு கொடுக்க போனேன்
தயிறு வாணான்னா கிருஷ்ணன்
தாவி புடிக்க வந்தான்
என்னடி எசோதா உந்தன் மகன்
இத்தினி உடுதுடுக்கம்
அரியதா பயன் எந்தன் மகன்
அநியாயம் சொல்ல வேணா [46]

இது போன்ற பொருளுடைய தெலுங்குப் பாடலொன்றும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

''பாலடிகே கிஸ்ட்டுடு
பரணி பங்கரி
பெருக அடிகெ கிஸ்ட்டுடு
பரணி பங்கரி
பாலு தாகி செண்டாடே
பரணி பங்காரி
இருகு பொருகு சூடகானே
பரணி பங்காரி
பெருகு வச்சி தினிபோயே
பரணி பங்கரி
கன்னெத்தி சூடாகானே
பரணி பங்காரி
கன்னெத்தி சூடானே
பரணி பங்கரி
கப்புக்கோள வொச்சாடு
பரணி பங்காரி

''பால் கேட்டார் கிருஷ்ணன்; மோர் கேட்டார்; பால் குடித்துப் பந்தாட வந்தார். வெண்ணையைத் திருடித் தின்றார்; அக்கம் பக்கம் பார்க்காமல் என்னைத் தாவிப் பிடிக்க வந்தார்'' என்பது தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

''கிருஷ்ண பகவானுடைய லீலைகளைப் பற்றித் தமிழ்ப் பாடலில் குறிப்பிட்டிருப்பது போன்று தெலுங்குப் பாடலிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. கிருஷ்ண பகவான் தாம் குழந்தைப் பருவத்தில் விரும்பி உண்ணும் பால், தயிர், வெண்ணெய் போன்ற பொருட்களைப் பற்றிய குறிப்புகள் இரண்டு பாடல்களிலும் காணப்படுகின்றன. இரண்டு பாடல்களும் இசையில் வேறுபடுவதைக் காணலாம்.

**வேங்கடேசுவரன் பக்தி :**

ஸ்ரீ மகா விஷ்ணுவையே வேங்கடேசுவரன், ஏழுமலை யான், பெருமாள், திருமால் என்று பல்வேறு பெயர்களால்,

நாட்டுப்புற மக்கள் அழைக்கின்றனர்; தெலுங்கர் எங்க டேசுலு, ஏடுகொண்டலவாடு, கோவிந்தடு என்பன போன்ற பெயர்களைக் கொண்டு அழைக்கின்றனர்.

தமிழர்கள் திருமால் என்றும் ஸ்ரீநிவாசன் என்றும் அழைக்கின்றனர். நாட்டுப்புறக்களின் கோரிக்கைகளை நிறை வேற்றும் தெய்வமாக இவர் திகழ்கின்றறார். அன்பு பெருக் கால் தெலுங்கு மக்கள் இவரை 'வெங்கன்னா' என்று அழைப்பர். ஆபத்துக் காலங்களில் இவரின் அடிதொழுது வணங்கினால் இரட்சிக்கப்படுகிறோம் என்ற நம்பிக்கையை இம்மக்கள் வைத்துள்ளனர்.

''பெருமாளே வாரும்—மக்கள்
பெருங் கொறய்ய தீரும்
ஏழுமலை தோறும்
ஏறி வந்தேன் சாமி
கல்லும் முள்ளும் மிதித்து
கானகம் வந்தேன் சாமி
துளசி மால உந்தனுக்கு
தூப வர்க்கம் கோவிந்தனுக்கு
பெருமாளே வாரும் மக்கள்
பெருங்கொறய்ய தீரும் 48

என்று பாடுவர். அதுபோலவே தெலுங்குப் பாடலொன்றும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

''இதடே வெங்கட்ட ஜோதி
திருபதியை வெலசின யோகி
சித்தம் பதினிக்கி சாஷ்டாங்கம்
நுதியிஞ்சினனே நதி பக்துடனு

கஸ்தூரி திலகமு தீர்ச்சி வட்டி காசுலு
கனமுக கூர்ச்சி
ஸ்திரமுக தாசுலக்கு அயயமுலிச்சின ஹரி
சர்வாத்முடு''49

''இவரே வேங்கடேசுவரர். திருப்பதியில் எழுந்தருளியவன் சர்வத்திற்கும் அநுகூலமானவன். வட்டிப் பணத்திற்கு நாயகன். தாசர்களுக்கு அடைக்கலம் கொடுத்தவன்'' என்பது தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

இரண்டு பாடல்களிலும் பெருமாளைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. தமிழ்ப்பாடலில் ஏழுமலை' என்றும், தெலுங்குப் பாடலில் திருப்பதி' என்றும் குறிப்பிட்டு அவர் எழுந்தருளிய இடத்தில் சுட்டிக்காட்டப் பட்டுள்ளது. இரண்டு பாடல்களும் இசையில் வேறுபடு கின்றன.

இம்மாவட்டத்தில் வாழும் தமிழ், தெலுங்கு நாட்டுப் புற மக்கள் திருமாலை வழிபடுகின்றனர். ஆனால் கிராமப் புறங்களில் கோயில் கட்டுவதோ, விக்கிரங்கள் வைத்து வணங்குவதோ இல்லை என்று கூறலாம். இதற்குக் காரணமும் உண்டு. இம்மாவட்டத்தில் வடக்குக் கோடியில் திருப்பதி மலையில் வேங்கடேசுவரர் கோவில் உள்ளது. இஃது உலகப்பிரசித்தி பெற்றது. இங்கு ஒரு நாளைக்கு சுமார் பத்தாயிரம் பக்தர்கள் இறைவனைத் தொழுது கொண்டு வீடு திரும்புகின்றனர். இஃது இந்துக்களின் புண்ணிய ஸ்தலமாகவும் விளங்குகிறது. அயல் நாடு களிலிருந்தும் இக்கோயிலுக்கு வருகின்றனர். காணிக்கை வருமானத்தில் உலகில் இஃது இரண்டாவது இடத்தை வகிக் கின்றது. எனவே, திருப்பதியிலும் திருமலையிலும் உற்சவங்கள், விழாக்கள் போன்றவை சிறப்பாகக் கொண்டாடப்படுவதால் இம்மாவட்டத்தைச் சார்ந்த தமிழ், தெலுங்கு மக்கள் திருப்பதிக்கு வந்து விழாவில் கலந்துக் கொண்டு சுவாமியின் தரிசனம் பெறுகின்றனர். இதன் காரணமாக தங்களுடைய கிராமங்களில் கோயில் எழுப்பி அதில் சிலை வைத்து வணங்க முன் வரவில்லை என்று சொல்லலாம். மாறாக, புரட்டாசி மாதத்தில் ஐந்து சனிக்கிழமைகளிலும் 'கிராமங்களில் தமிழர்களும்,

தெலுங்கர்களும் விக்கிரங்கள் வைத்துச் சிறப்பாலப் பூசை செய்து வாணவேடிக்கைகளுடன் கொண்டாடுகின்றனர். அக்காலங்களில் கிராமங்களில் வாழும் மக்கள் சைவ உணவு மாத்திரம் உண்பர். இம்மாவட்டத்தில் தமிழர்களைவிட தெலுங்கு மக்களே ஸ்ரீ வேங்கடேசுவரன்பால் அன்பு கொண்டு அவரைத் தொழுது சிறப்பாக விழா எடுக்கின்றனர். தெலுங்கருடைய உள்ளத்தில் எப்போதும் 'வெங்கடேசா! 'ஏடு கொண்டவாடா,' என்ற நாமம் ஒலித்துக் கொண்டேயிருப்பதைப் பாடல் வழி அறிய முடிகிறது.

## சக்தி வழிபாடு—பாடல்கள் :

'சக்தி' வழிபாடு இம்மாவட்டத்தில் தமிழர்களிடத்திலும், தெலுங்கரிடத்திலும் காணப்படுகின்றது. இவ்வுலகம் உண்டானதற்கு முன்பு 'ஆதிசக்தி' அவதாரமே இருந்திருக்கிறது என்று நம்புவர். அந்தச் சக்தி மூன்று முட்டைகளை இட்டது என்றும் ஒரு முட்டை உடைந்து கீழ் ஓடு பூமியானது என்றும், மேல் ஓடு ஆகாயமாக மாறியது என்றும், அம்முட்டையிலிருந்து மும்மூர்த்திகள் வெளிவந்தனர் என்றும்,இரண்டாவது முட்டைகால்பட்டு உடைந்துவிட்டது என்றும், மூன்றாவது முட்டையை பசியின் காரணமாக விழுங்கிவிட்டது என்ற கதையும் நாட்டுப்புற மக்களிடையே இன்றும் வழங்கி வருகின்றது[5] இக்கதையினை வெளிப்படுத்தும் பாடல்கள் தமிழிலும், தெலுங்கிலும் இம்மாவட்டத்தில் பாடப் பெறுகின்றன.

**அண்டம் பொறந்தது**
**ஆதி சக்தியாலே**
**மூணு தெய்வம் பொறந்தது—சக்தி**
**முட்டையாலே[51]**

என்பது தமிழ்ப் பாடல். தெலுங்கிலும் இக்கருத்தினை வெளிப்படுத்தும் பாடல் கிடைத்துள்ளது.

ஊகமுனூ ஜகமுனு
புட்டகா முந்தலா
ஆதி சத்தி அவதார மெத்தி நாதம்மா
நிராகாரமு சத்தி நிலிபினாதம்மா
போத்து காலே தகிலி பொலபு பாரேனு
பட்டு பெடதா மண்டே விருக்ட்சாலு லேவு
மூடு குட்லே பெட்டிந்தி முரஹருனி சத்தி
காலு தகிலாக்க குட்டு கல்லி போயிந்தி
ஆகலேனொக்க குட்டு அநுபகிஞ்செனு
வொன்ட்டி குட்டொக்க மீத
வரனமாயிந்தி
முக்கத்தோ மூண்ணொலு கூடு நதிகிந்தி
பாகானிக் கொச்சிந்தி பகிலினா குட்டு
கிந்தி வெக்கிரி வபாயி பூதேவதாயே
மீதி வெக்கிரி போயி ஆகாசமாயே
இக்னமயல மீரம்மயீசுவடுடு முக்கரு[52]

என்று பாடுவர். "ஆதியிலே சக்தி அவதாரமெடுத்தது; மூன்று முட்டைகளைக் கொடுத்தது; கால் பட்டு உடைந்தது அம்முட்டை; பசியென்று ஓர் முட்டையை உண்டது; ஒரு முட்டையின்மேலோடு ஆகாயமானது; கீழ்ஒடு பூமியானது; மூன்றாவது முட்டையிலிருந்து மும்மூர்த்திகள் வெளி வந்தனர்" என்பதுதெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

'அண்டம்' பிறந்தது 'சக்தி' யாலே என்ற குறிப்பு தமிழ்ப்பாடலில் காணப்படுவது போல தெலுங்குப் பாடலிலும் காணப்படுகிறது. மூன்று முட்டைகளால் அண்டம் உண்டானது என்பதை இவ்விரண்டுபாடல்களும் வெளிப்படுத்துகின்றன. இரண்டு பாடல்களும் இசையில் வேறுபடுகின்றன.

இம்மாவட்டத்தில் சக்தியைப் பல்வேறு பெயர்களால் வழிபடுகின்றனர். தமிழர்கள் தேவிரூபம், காளிசண்டி, துர்க்கை, மீனாட்சியம்மன், , சரஸ்வதி, சாவித்திரி

போன்ற பெயர்களாலும், தெலுங்கர் காளிக்க ாமூர்த்தி, சண்டிக்கா, துர்க்கா, லலிதா தேவி, பிரமராம்பா, ஞனப் பசூராம்பா, காயத்ரி போன்ற பெயர்களாலும் சக்தி வழி பாட்டை ஆண்களை விட பெண்களே அதிகமாக மேற்கொள் கின்றனர். சக்தி வழிபாட்டில் 'விரதம்' முதன்மையாக அனுசரிக்கப்படுகின்றது.

## சிறு தெய்வ வழிபாட்டுப் பாடல்கள்:

இதனை நாட்டுப்புறமக்கள் கிராம தேவதைகள் என்பர். அவ்வாறே தெலுங்கரும் 'கிராமதேவதலு' என்பர். நாட்டுப் புறமக்கள் ஒரு சமுதாயமாகக் கூடி விவசாயத்தை முதன்மை யாகக் கொண்டு வாழ முற்பட்ட காலத்திலேயே நாட்டுப் புறத் தெய்வங்கள் தோன்றலாயின[58] என்று ஹென்றி ஒய்ட் ஹெட் (Hentry white head) அவர்கள் கூறுவர். நாட்டுப் புற மக்கள் தங்களது அன்றாட வாழ்க்கையில் ஏதேனும் துன்பங்கள், சோதனைகள் நேரிட்ட போதும், தீராத வியாதி கள் வந்த போதும் அத்தொல்லையிலிருந்து மீள்வதற்காக, மலைப் பகுதிகளிலுள்ள கால்வாய்களிலும், ஆறுகளிலும், நல்ல முகவாட்டமுடைய கல்லைக் கொண்டு வந்து அதனைச் சுத்தமான நல்ல நீரைக் கொண்டு கழுவி மஞ்சள் பூசி, குங்குமம் வைத்து மலர்களால் அலங்கரித்து அதற்கு ஒரு பெயரைச் சூட்டி, பலியிட்டு தம்முடைய கஷ்டங்களை அதன் இடத்தில் சொல்லிமனக் கவலையைத் தீர்த்துக் கொண்டு இருப்பர். காலப் போக்கில் அத்தெய்வங்களுக்கு மனித உருவத்தைக் கொடுத்து விக்கிரங்கள் என்ற பெயரில் வழிபாடு நடத்தியிருப்பர். அந்நாள்முதல் இன்று வரை அவற்றைக் கிராம தேவதைகள் என்ற பெயரில் தமிழர்களும், 'கிராம தேவதலு' என்ற பெயரில் தெலுங்களும் இம்மா வட்டத்தில் அவைகளை வழிபட்டு வருகின்றனர்.

## கிராம தேவதைகள்:

இம்மாவட்டத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட கிராம தேவதைகள் இருக்கின்றன. கிராம தெய்வங்களை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை: 1. பெண் தெய்வங்கள், 2. ஆண் தெய்வங்கள். பெண் தெய்வத்தில் சிறப்பிடம் பெறுவது 'கங்கையம்மன்' என்பதாகும். இவ்வம்மையாருக்கு நாட்டுப்புற மக்களிடம் நல்ல வரவேற்புள்ளது. இம்மாவட்டத்தில் கங்கையம்மனுக்கு இடத்திற்கேற்றவாறு பலவிதமான பெயர்கள் வழங்குகின்றன. அவை முறையே கங்கம்மா, அரதலகங்கம்மா, அரிமேலி கங்கம்மா, குந்தூரு கங்கம்மா, குண்டட்டகங்கம்மா, குண்டி கங்கம்மா, சாந்தான கங்கம்மா, சிந்தலகுண்டா கங்கம்மா, ஜடலகங்கம்மா, ஜல கங்கம்மா, திருப்பதி கங்கம்மா, தண்டு கங்கம்மா, தனகொண்ட கங்கம்மா, தொட்டி கங்கம்மா, நடுவீதி கங்கம்மா, நல்ல கங்கம்மா பெத்தபுலி கங்கம்மா, பாட்ட கங்கம்மா, புருஜீ கங்கம்மா மத்திமானி கங்கம்மா, மரானா கங்கம்மா, மிட்ட கங்கம்மா, முத்துமாரி கங்கம்மா, ராள்ள கங்கம்மா, ருட்குடுரு கங்கம்மாபோன்றவைகளாகும்.

## பெண் தெய்வங்கள்:

அங்கம்மா, அக்கம்மா, அக்கசார்லு, அனந்தம்மா, ஆரேட்டம்மா, ஆதிசக்தி, ஆவட்டலம்மா, இரகாலம்மா, ஈதெம்மா, உத்ராலம்மா, எல்லம்மா, கனகதுர்கம்மா, கன்யாகாபரமேஸ்வரி, கனகலம்மா, காட்டபுட்டலம்மா, கடபாலம்மா, கானகலம்மா, காமாட்சியம்மா, குப்பம்மா, கோட்டா சௌடேசுவரி, குண்டலம்மா, சதுமு அம்மவாரு, சல்லரம்மா, சாமுண்டேசுவரி, சாள்ளபுரெம்மா, சிந்தாலம்மா, சின்னம்மா, சீராலம்மா, தாரம்மா, தோளம்மா, துர்க்கானம்மா, தோட்டேடம்மா, தும்மாலம்மா, தொண்டம்மா, துர்க்காலம்மா, திரௌபதம்மா, தேசம்மா, நாகாலம்மா, நங்கமாச்சலம்மா,

பரஞ்சோதியம்மா, பகலபுட்டாலம்மா, பிரசன்ன அக்னி மாரெம்மா, பாட்டலம்மா, பெத்தம்மா, பொன்னேலம்மா, போலம்மா, போலேரம்மா, போகம்மா, பஸ்காரம்மா. பண்டெம்மா, மல்லம்மா, மாங்காளியம்மா, மாதம்மா, மாவள்ளம்மா, முத்யாலமம்மா, மூகபட்டம்மா, மொகிலம்மா ரெட்டம்மா, ரேணுகம்மா என்பவை பெண் தெய்வங்களின் பெயர்களாகும்.

## ஆண் தெய்வங்கள் :

இம்மாவட்டத்தில் பெண் தெய்வங்களுளைப் போலவே ஆண் தெய்வங்களுக்கும் பூசை செய்கின்றனர். அவை முறையே போத்துராஜு மூனீஸ்வரன், குர்ரப்பசாமி, தர்மராஜு, காட்டுராஜு, காட்டு ராஜா, வீரன்னா, பைரவசாமி, ஆஞ்சினேயன் போன்ற தேவர்களாகும்.

## சுயரூபமும் சுபாவங்களும் :

சித்தூர் மாவட்டத்தில் வாழும் தமிழர்களும், தெலுங்கர்களும் தினமும் பூசை செய்யும் கிராம தேவதைகள் கல், பாறை, குண்டு, மண் உருண்டை, மாவு உருண்டை, மரம், மண்] உலோகம் போன்றவற்றால் செய்யப்பட்ட சிலைகள் போன்றவையேயாகும். தெலுங்கில் இவற்றை ராயி(கல்), பண்டா(பாறை), குண்டு (குன்று) மட்டி முத்தா (மண் உருண்டை), பிண்டி முத்தா (மாவு உருண்டை) சிலை (சிலலு) என்றழைப்பர். சாதாரணமாக மூன்று செங்கல், அல்லது நல்ல முகவாட்டமுடைய கற்கள் போன்றவற்றை மரத்தடியிலோ அல்லது பெரிய குன்றுகள் அடிப்பக்கத்திலோ, ஏரிக்கரையின் மீதோ வைத்துப் பூசை செய்து வழிபடுவர்.

கிராம தேவதையாக வழிபடும் பாறை மெல்லியதாக இருந்து இரண்டடி அகலமும், ஆறு அடி உயரமும் கொண்டதாயிருப்பின் அவற்றை ஊருக்கு வெளியிலுள்ள பாழடைந்த

மண்டபம், கோயில், மிகவும் பெரிய மரம் போன்ற இடங்களில் வைத்து வழிபடுவர். அவ்வழியே தனியாகச் செல்வோரை அத்தேவதை கொன்று விடுகிறாள் என்றும் நம்புகின்றனர்.

புகழ் பெற்ற இந்து மத தெய்வங்களாகிய சிவன், விஷ்ணு போன்ற தேவாலயங்களில் செய்யப்படும் வழி பாட்டைக் காட்டிலும் நாட்டுப்புற மக்களின் கிராம தேவ தைகளுக்குச் செய்யப்படும் வழிபாடு மிகவும் எளிமை யானது என்று ஹென்றி அவர்கள் கூறுகின்றார்.54 மிருக பலி, பொங்கல், பூசை, கும்பம்சோறு, இரத்தம் கலந்த சோறு, ஊர்வலம் போன்ற சடங்குகள் கிராம தேவதை களுக்கு விருப்பமானவைகளாகும்.

நாட்டுப்புறமக்கள் ஒவ்வோர் ஆண்டும் தாங்கள் தவறாது அம்மனுக்குச் செய்வதன் மூலமாக அம்மை நோய், காலரா, மலேரியா. போன்ற வியாதிகளிலிருந்து தாங்கள் காப்பாற்றப்படுவதாக நம்புகின்றனர்.

## கிராம தேவதைகளும் பூசையும் :

இறைவனுடைய அனுக்கிரகத்திற்காக நடத்தும் சடங்கு 'பூசை' எனப்படும். உள்ளத்தில் தூய்மை ஏற்படு வதற்காக,பக்தியாகச் செய்யும் பணியே 'பூசை'. தெலுங்கில் 'பூஜா' என்பர். இறைவன் திருப்தியடையும் வகையில் மனிதன் இறைவனுக்கு அன்பால் செய்யும் அர்ச்சனையே 'பூசை' என்றும் சொல்லலாம். இப்பூசையைச் செய்ய தனிப்பட்ட குலத்தவர் உள்ளனர். அவர்களைப் பூசாரி; 'பூஜேலி' என்பர். தெலுங்கர் பூஜேலி' என அழைக் கின்றனர்.

பூசைக்கு மஞ்சள், குங்குமம், தேங்காய், கர்ப்பூரம், அரிசிமாவு, சந்தனம் போன்றவை முக்கியமான பொருட் களாகும். பால், தயிர், நெய், தேன், தர்ப்பை, பூ, அருகம்புல், மஞ்சளும் அரிசியும் கலந்த கலவை, பழம்,

வெற்றிலைப் பாக்கு, பொரி, கடலை போன்றவற்றைப் படைப்பர். இப்பூசையின் 'பலி' இடுவது மிகவும் முக்கியத் துவம் வாய்ந்தது. கோழி, பன்றி, ஆடு, எருமைக்கடா போன்றவற்றைப் பலியிடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். தெலுங்கரும் தேவதைகளுக்குப் படைப்பதிலும், பலியிடுவதிலும் தமிழர்களைப் போலவே செயல்படுகின்றனர்.

## கிராம தேவதைகளும் பொருத்தனைகளும் :

நாட்டுப்புறமக்கள் தங்களுடைய வாழ்க்கையில் ஏதாவது பெரிய கஷ்டங்கள் வந்த போதும், கொடிய வியாதிக்குட்பட்டு மரணத்தருவாயில் இருக்கும்போதும், தங்களுக்கு விருப்பமுள்ள தெய்வத்திடம்மொட்டை' அடிப்பதாகவும் காணிக்கை செலுத்துவதாகவும், பலியிடுவதாகவும், கோயில் கட்டித் தருவதாகவும், விழா நடத்துவதாகவும் வேண்டிக் கொள்வதுண்டு. இதனையே பொருத்தனை என்பர். தெலுங்கில் மொக்குப்படி என்பர். ஆபத்திலிருந்து தங்களை விடுவித்தமைக்காக இத்தகு செயல்களை மேற்கொள்கின்றனர். இச்செயல் பொதுவாக பொருளாதார அடிப்படையிலேயே செயல் படுகின்றது என்று கருதலாம். நாட்டுப்புறமக்கள் தீயசெயல்களுக்கும், நல்ல செயல்களுக்கும் பொருத்தனைகளை மேற்கொள்வர். இரண்டு திருடர்கள் கொள்ளையடிக்கப் போகும்முன் இறைவனிடம வேண்டுவதாகப் பாடல்கள் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளன.

**கொள்ளையிட போறம்மா—நாங்க**
**கொண்டு வந்தத நாரம்மம்மா**
**திருட்டு பொருளாச்சேன்னு**
**திட்டு பட்டிருச்சேன்னு**
**தள்ளி விடாதம்மா—தாயே**
**தள்ளி விடாதம்மா** [55]

இது போன்ற தெலுங்குப் பாடலொன்றும் கிடைத்துள்ளது.

தொங்கலிஞ்சனு போத்தாமம்மா—மேமு
தொரக குண்டா ரவலம்மா
தொரக்க குண்டா வஸ்தேனம்மா—மேமு
கொக்க எத்தி பெடத்தாமம்மா
கோக்க எத்தி பெடத்தாமம்மா—மேமு
ரய்க்க எத்தி பெடத்தானம்மா[56]

என்று பாடுவர். ''திருடுவதற்காகப் போகின்றோம், நாங்கள் அகப்படாமல் வந்தால் உமக்குப் புடவையும் ரவிக்கையும் கொண்டு வருகிறோம். எங்களுக்குத் துணை புரியும்'' என்பது மேற்கண்ட தெலுங்குப் பாடலின் பொருளாகும்.

கொள்ளையிடப் போகும்முன் இறைவனை வழிபடுவதாக தமிழ்ப்பாடலிலும், தெலுங்குப் பாடலிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. கொள்ளையிட்டப் பொருட்களை கிராம தேவதைகளுக்குப் படைப்பது இரண்டு பாடல்களிலும் காணப்படுகிறது. தீய செயலைச் செய்பவர்களுக்கும் 'கிராமதேவதைகள்' துணை நிற்கின்றன. என்ற கருத்தை இவ்விரண்டு பாடல்களும் வெளிப்படுத்துகின்றன. இரண்டு பாடல்களும் இசையில் வெளிப்படுகின்றன.

இம்மாவட்டத்தில் கங்கையம்மனுக்கும், காளி தேவிக்கும் பலியிடுவதைப் பாடல்கள் வாயிலாகத் தெரிந்து கொள்ளலாம்.

பொங்கிலிட்டு கங்கம்மா தாயே
பலி கொடுத்தோம் கங்கா புவானி
கும்பம் சோறு உந்தனுக்கு
குணமுள்ள மாரியம்மா
ரத்த சோறு உந்தனுக்கு
ரண கொடி மாரியம்மா
ஆட்டுக்கெடா தந்தோம்
ஆதரிக்க வேணும் அம்மா[57]

என்று பாடுவர். இது போனற தெலுங்குப் பாடலொன்றும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

**பொங்க பெட்தாது கங்கம்மக்குரு**
**பொட்டேலி கொட்தானு கங்கம்மக்கு**
**அங்கம்மா தேவிக்கி ஜே ஜேலு**
**கங்கம்மா தல்லிக்கி தண்டாலு**
**கொர்றெ பலி பர்றெபலி இஸ்தாமு**
**கும்பாலு கோட்ளு பலி இஸ்தாமு**[58]

போன்ற பாடல்கள் வேண்டலுக்குச் சம்பந்தப்பட்டவை. "பொங்கல் வைத்து ஆட்டுக்கடாவையையும், செம்மறி யாட்டையும் கோழியையும் பலியிட்டு, சோறு கும்பம் போடுகிறோம்" என்பது பாடலின் பொருளாகும். இவ் விதமாகத் தமக்கு ஏற்பட்ட துன்பங்களைப் போக்குவதற் காக நாட்டுப்புற மக்கள் கிராம தேவதைகளிடம் பொருத் தனைச் செய்து கொண்டு அதன்படி அம்மக்கள் இறைவனுக்கு நன்றி சொல்லும் வகையில் இச்செயலை மேற்கொள்கின்றனர்.

கிராம தேவதைகளுக்கு நாட்டுப் புறமக்கள் 'பலி' செலுத்தி வழிபடுகின்றனர் என்ற குறிப்பு தமிழ்ப் பாடலி லும், தெலுங்குப் பாடலிலும் காணப்படுகின்றன. இவ் விரண்டுப் பாடல்களும் இசையில் வேறுபடுகின்றன.

அம்மனுக்குப் பலி செலுத்துவதில் தமிழர்களும் தெலுங்கர்களும் ஒன்றுபட்டு காணப்படுகின்றனர். சாதியின் அடிப்படையில் பலி செலுத்துவது வேறுபடுகின்றது. ஆடு, கோழி, பெரிய பூசணிக்காய் போன்றவற்றை உயர்ந்த சாதி யினரும் பலியிடுவர். எருமைக்கிடா, கோழி போன்றவற்றை ஆதிதிராவிடர், ஆதி ஆந்திரர் போன்ற மக்கள் பலியிடு கின்றனர். இந்நிகழ்ச்சி பொருளாதார அடிப்படையிலும், ட்கொள்ளும் உணவு பழக்க வழக்கங்களின் அடிப்படை

யிலும் நிகழ்கின்றது. உயர்ந்த சாதியினர் எக்காரணத்தைக் கொண்டும் எருமைக் கிடாவைப் பலியிடமாட்டார்கள்.

## கிராம தேவதைகள் விரதமும் விழாவும்:

'சித்தூர் மாவட்டத்தில் வாழும் தமிழ் தெலுங்கு நாட்டுப்புறமக்கள் நூற்றுக்கும் மேற்பட்ட கிராம தேவதை களை வழிபடுகின்றனர். அவற்றுள் சில மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவையாகக் கருதப்படுகின்றன. தமிழர்களாலும், தெலுங்கர்களாலும் சிறப்பாக வணங்கப் பெறும் சில தேவதைகளே இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பெறுகின்றன.

நாட்டுப்புறமக்கள் தங்களுடைய வாழ்க்கைச் சிறப்பாக அமையவும், சந்தோஷமாக இருப்பதற்காகவும் குறிப்பிட்ட ஒரு நாளில் காலையிலிருந்து மாலைவரை உணவு உட்கொள்ளாமல் இறைவனுக்குப் பூசை செய்வர். இதனையே 'உபவாசம்' என்றும், விரதம் என்றும் அழைப்பர். தெலுங்கில் விரதமு, உபவாசமு என்றழைப்பதுண்டு. இம்மாவட்டத்தில் பலர் 'ஒருபொழுது' 'ஒரு பொய்தி,' 'ஓர் சந்தி' என்பார்கள் 'தெலுங்கர் 'ஒக்கபொத்து' 'ஓர்சந்தி என்பர். பொதுவாகஇம்மாவட்டத் தில் தமிழரைக் காட்டிலும், தெலுங்கரே சிறப்பாக விரதம் இருப்பதைஅனுசரிக்கின்றனர். விரதம் இருப்பதை நோன்பு, நோமு என்றும் அழைப்பதுண்டு. மக்கள் தாங்கள் நினைத்த போதெல்லாம் உபவாசம் இருந்து தெய்வத்திற்குப் பூசை செய்வதை 'நோன்பு' என்பர். பெரியவர்கள் நிச்சயித்த வண்ணம் குறிப்பிட்ட அந்நாளில் உபவாசத்தை அனுசரிப் பது 'விரதம்' எனப்படும். பெயர் வேறுபட்டாலும் அந்நாட்களில் அனுசரிக்கப்படும் சடங்குகள், ஆசாரங்கள் போன்றவை ஒன்றாகவே இருக்கும். மக்கள் யாகங்களுக்கு மாறாக விரதங்களையும், நோன்பையும் ஏற்படுத்திக்

கொண்டார்கள் எனக் கொள்ளலாம். ஆண்டு முன்னூற்று அறுபத்தைந்து (365) நாட்களுக்கு விரதமும், நோன்பும் எங்காவது ஓர் இடத்தில் இருந்து கொண்டே இருக்கும். தசரத மன்னனுடைய காலத்திலிருந்து விரதங்களும், நோன்பும் மக்களிடையே அனுசரிக்கப் படுகிறது. புருஷோத்தமன் தசரத மன்னனுடைய விரதத்தைக் கண்டு வியந்து தானே தசரத மன்னனுக்குப் புதல்வனாக அவதரித்தார் என்றும் நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர். கலியுகப் பெண்கள் தாங்கள் பாவத்திலிருந்து விடுபடுவதற்கு ஏதாவது ஒரு வழியைக் காட்டும்படி பார்வதியையும், பரமசிவனையும் வேண்ட அவர்கள் விரதத்தை அனுசரிக்கும்படி கூறியதாகக் கதையும் உண்டு. தமிழர்கள் மார்கழி மாதத்திலிருந்து விரதங்கள் இருப்பதை அனுசரிக்கின்றனர். அவ்வாறே தெலுங்கரும் (ஸ்ரவண) மாதத்திலிருந்து விரதம் இருக்கின்றனர். மனித சமுதாயத்தில் பெண்களுக்குத் தாலி மிகவும் புனிதமானதும், கட்டப்படாத கோட்டையாகவும் விளங்குவதால் அதனைக் காப்பாற்றிக் கொள்வதற்காக ஆயிரம் தேவர்களை வேண்டிக் கொள்கின்றனர். பொதுவாகப் பெண்கள் அனுசரிக்கும் விரதங்களுக்கும் நோன்புக்கும் பூசைகளுக்கும் இதே முக்கியக் காரணம் என்று சொல்லலாம்60 என்று நாட்டுப்புறவியலர் கூறுவர். நாட்டுப்புற மக்கள் தாங்கள் விரும்பியதை இறைவனிடமிருந்து பெறுவதற்காக விரதம், நோன்பு போன்றவற்றைக்கடைப்பிடித்த காரணமாக இறைவனிடம் கையேந்தி மனம் தாழ்த்திப் பெற்றுக் கொள்கின்றனர் எனக் தருகலாம்.

**கங்கையம்மன் :**

இம்மாவட்டத்தில் வாழும் தமிழர்கள் கங்கையம்மனுக்கு விரதம் இருந்து விழா எடுப்பதைப் போலவே தெலுங்கரும் இவ்வம்மனுக்கு விரதம் இருந்து விழா

எடுக்கின்றனர். தமிழர்கள் கெங்கம்மா ஜாத்திரை, கெங்க ஜாத்ர, மாரியம்மன் திருவிழா, மாரியாத்தா திர்ணா என பல்வேறு பெயர்களைக் கொண்டு அழைக்கின்றர். அவ்வாறே தெலுங்கரும் கங்கம்மா, ஜாத்ரா, கெங்க ஜாத்ரா, கெங்க பண்டகா, என அழைப்பர் இம்மாவட்டத்தில் கங்கையம்மனுக்கு மிகவும் சிறப்பாக விழா எடுக்கின்றனர். 'யாதவர்' என்ற இனத்தவர்கள் கங்கையம்மனை தங்களுடைய குலதேவதையாகக் கருதி வணங்கி வருகின்றனர் இத்தேவதைக்கு உரிய காலத்தில் திருவிழா மேற்கொள்ளாமல், பூசைகளும் பொருத்தனைகளும் தவறி விட்டால் அவ்வம்மையார் மக்களுக்கு குறிப்பாகச் சிறு பிள்ளைகளுக்கு வாந்தியும், பேதியும் வரவழைப்பாள் என்றும் ''அம்மை' நோயை உண்டாக்குவாள் என்றும் நம்புகின்றனர். இதனை வெளிப்படுத்தும் வகையில் தமிழிலும், தெலிங்கிலும் பாடல்கள் கிடைத்துள்ளன.

வாந்தி பேதி மாரியத்தா
ரோந்து ரோந்தா சுத்திக்கினு
பிச்சா புடுங்குதோடி கடவுளே—நா
கும்ட்ட தெய்வம் எங்க போசி கடவுளே
ஆட்டுக்கெடா எரு மாட்டுக்கெடா வெட்டி
அரிசிமாவு தளக போட்டு
அம்மாள வேண்டிக்கொண்டேன் கடவுளே—நா
கும்ட்ட தெய்வம் எங்க போசி கடவுளே[61]

இத்தகைய பொருளுடைய ஒரு தெலுங்குப் பாடலும் கிடைத்துள்ளது.

வாந்து பேதுலு வாரக்க போயே
சந்து பொந்தளி சுட்டக்க போயே
பொட்டேலி ஈரகத்தாமு—கங்கா பொவானி
கும்பம் கூடு பொதாமு கங்கா பொவானி
அம்மா கங்கா பொவானி''[62]

"காலரா'' என்ற வியாதி வரக்காரணம் கங்கையம்மனே" என்பது தமிழ்ப்பாடலிலும் தெலுங்குப் பாடலிலும் காணப் படுகிறது. கங்கையம்மனுக்குப் பலி செலுத்துதல் பற்றியக் குறிப்பும் இரண்டு பாடல்களிலும் காணப்படுகின்றது. இவ்விரண்டுப் பாடல்களும் இசையில் வேறுபடுகின்றன.

கங்கையம்மனைச் சாந்தப்படுத்துவதற்காகச் செய்யும் பூசனையே 'ஜாத்திரை' என்பதாகும். இவ்விழாவினை ஒவ்வொரு ஆண்டும் சித்திரைத் திங்கள் முதல், வைகாசி மாதம் இறுதிவரை ஏதாவது ஒரு நாளில் செய்வதுண்டு. நகரி, புத்தூர் ஆக்கிய வட்டங்களில் வாழ்கின்ற முதலியார் வகுப்பைச் சார்ந்த தமிழர்கள் ஆனி, ஆடி, போன்ற மாதங் களில் செய்வதுண்டு. இவ்விழா இரண்டு நாள் விழாவாகும். செவ்வாய், புதன் ஆகிய கிழமைகளில் மட்டுமே கொண்டாடும் நியதியும் வைத்துள்ளனர்.

## சாற்றுதல்

பெரியோர்களின் பேரில் கங்கையம்மன் திருவிழா நடைபெறும் தேதி குறிக்கப்படும். இதனைப் பத்து நாட் களுக்கு முன்னதாக மக்களுக்குத் தெறியபடுத்துவர். இந்நிகழ்ச்சியையே 'சாற்றுதல்' என்பர். இம்மாவட்டத்தில் வாழும் தமிழர்கள் 'சாட்டு' என்பர். அவ்வாறே தெலுங்கரும் 'சாட்டு' என்றே அழைக்கின்றனர். அன்று அக்கிரமத்திலுள்ள காளியம்மனுக்குப் பூசை செய்து, ஆடு, எருமை போன்வற்றைப் பலியிட்டு சிந்திய இரத்தத்தைப் பொங்கலிட்ட சோற்றுடன் கலந்து புதிய முறத்தில் எடுத்துக் கொள்வர். பலி செலுத்தப்பட்ட மிருகத்தின் குடலை யாராவது ஒருவர் தங்களுடையக் கழுத்தில் மாலை போல் போட்டுக் கொண்டு, பக்கத்தில் 'பறை' கொட்டிக் கொண்டு, கிலோ...லோ...லோ என்று உரத்த சத்தம் போட்டுக் கொண்டு, இரத்தம் கலந்த சோற்றை இரைத்துக் கொண்டும் ஊரை வலம் வருவர். திருவிழாவுக்கு முன்னதாக

களைச்சுத்தி கரிப்புச் செய்யவும், அசுத்த ஆவிகள் ஊருக்குள் நுழைந்து வியாதியை உண்டாக்கி மரணத்துக் குள்ளாக்கமால் தடுப்பதற்காகவும் இத்தகைய செயலை மேற்கொள்வர். இச்சடங்கில் தமிழர்களும் தெலுங்கரும் ஒன்று பட்டுக் காணப்படுகின்றனர். சாற்றும் போது அக்கிராமத்தில் இருந்தே அனைத்து மக்களும் திருவிழாவில் பங்கேற்க வேண்டும். இல்லையென்றால் தீங்கு நேரிடும் என நம்புகின்றனர். 'சாற்றுதல்' நாளில் அக்கிரமத்தில் இருந்த உறவினர்களும் தவறாது திருவிழாவில் கலந்துக் கொள்வர்.

செவ்வாய்க்கிழமை காலையில் 'புளித்த கூழை' அம்மனுக்குப் படைப்பதுண்டு. அன்று அம்மனுக்குப் பூசை செய்வர். தெலுங்கில் 'அம்மிலி போயுட்டா' என்பர். கூழ் நிரப்பப்பட்டிருக்கும் குடத்துக்கு கட்டாயம் வேப்பிலை யைக் கட்டியிருப்பர். அன்று தெருவில் சிறு பிள்ளைகளை வரிசையாக உட்கார வைத்துக் கூழ் ஊற்றுவர். பின்னர் அவர்களை ஒரு புறமாக நிற்க வைத்து கிராமத்து எல்லைக்கு அப்பால் திரும்பிப்பார்க்கா வண்ணம் விரட்டி விடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். கூழைக் குடித்து விட்டு 'அம்மை நோய்' கிராமத்தைவிட்டு ஓடி விட்டதாக நம்புகின்றனர்.

மேலும் சிறு பிள்ளைகளை அம்மை நோய் தாக்காமல் இருப்பதற்காக. இச்செயலை மேற்கொள்கின்றனர். செவ்வாய்க் கிழமை இரவு புகழ்பெற்ற நாடகக் குழுவினரால் நாடகம் நடத்துவிப்பர். புதன் கிழமை காலை கங்கையம்மனுக்குப் பூசை பொருத்தனைகள் மேற் கொள்ளப்படுவதுண்டு. தமிழர்கள் மாறுவேடம் போட்டுக் கொண்டு நடனம் ஆடுவர். அவ்வாறே தெலுங்கரும் மாறுவேடம் போட்டுக் கொண்டு நடனம் ஆடி பணம் வசூலிப்பதுண்டு. மாறு வேடத்தைப் போடுவதில் ஆண்கள் மட்டுமே ஈடுபடுவர். பெண்கள் அம்மனுக்குப் பொங்கல் வைப்பது, மாவுஉருண்டை, பிட்டு போன்றவை களைச் செய்வதில் கவனம் செலுத்துவர்.

மாறாக பெண்களில் வேடிக்கைப் பார்ப்பவர்களும் உள்ளனர். அம்மனுக்குப் பூசை முடிந்த பின் கும்பம் சோறு, அரிசி, மாவு (பாக்கம்) போன்றவற்றைப் படைத்து விட்டு கோழி, ஆடு, எருமை போன்றவைகளைப் பலி யிடுவர். இவைகள் ஒன்றிலிருந்து சுமார் நூறுவரை இருக்கும். சிறப்பாக எருமைக் கிடாவையே பல இடங் களில் பலியிடுகின்றனர். தாங்கள் பலியிட்ட ஒவ்வொரு விலங்கின் தலையையும் அவ்வூரில் கலவைத் தொழில் செய்யும் வண்ணானுக்குக் கொடுத்துவிட வேண்டும் என்ற வழக்க தமிழரிடையேயும் தெலுங்கரிடையேயும் காணப்படு கின்றன. தேங்காயின் மேல்மூடியும் வண்ணானுக்குச் சேரவேண்டும். சில கிராமங்களில் ஊர் நாட்டாண்மைக் காரும் சில இடங்களில் வாலிபர்களும், வண்ணான், சலவாதி போன்ற இனத்தவர்களும் பலியிடுவதை மேற் கொள்வர்.

இம்மாவட்டத்தில் மிகவும் சிறப்பு வாய்ந்தது திருப்பதி கங்கையம்மன் திருவிழா ஆகும். இத்திருவிழாவிற்கு சுமார் பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட பக்தர்கள் கூடுகின்றனர். மேலும் கோட்டாகர கிராமத்தில் 'அல்லி குண்டா கங்கையம்மன்' 'கடப்பகுண்டா கங்கையம்மன்', தூக்குன்றம் கங்கையையம்மன் பலமனேரி கங்கையம்மன், புங்கனூர் கங்கையம்மன் போன்றவை பிரசித்தி பெற்றவை யாகத் திகழ்கின்றன. இவ்விழாவின் போதுப்பாடும் பாடல்கள் தமிழிலும், தெலுங்கிலும் கிடைத்துள்ளன. பாடலுககு முன் இலேலே...லோ...லோ...என்று உரத்த குரலுடன் சத்தம் போட்டு பின்னர் பாடலைத் துவக்குவ துண்டு.

திரபதி கெங்கம்மா—நீ
திட்டம் போட்டு வந்தாயோ
முட்டக்கண்ணி கெங்கம்மா—நீ
முளிக்கினு வந்தாயோ

மத்தாப்பு மாருமேல
மணக்குதடி மல்லிகப்பூ—உம்
மேனியெல்லாம் பன்னிரு
மணக்குதடி சந்தனமா[63]

தெலுங்கிலும் இது போன்று பாடல் அன்று பாடப்படு கின்றது.

நிலுவு நிலுவி கெங்கம்மா தல்லி
நிலுவம்மா திரபதி கங்கம்மா
ஈதி ஈதி திரிகினாவே—அட்ல
நடிதிலோ நிலிச்சினாவே—அட்ல
ஏடு புட்லு கும்பம் கூடு—கங்கம்மா
நீக்கு சுக்க துன்ன போத்துலம்மா
ஆட வலசி ஆடலேது—திரபதி கெங்கம்மா
பாட வலசி பாடலேதே—அட்ல
ஏடாதிக்கொக்க தினமு—கெங்கம்மா
பாடாக்க வொச்சானே[64]

என்று பாடிக்கொண்டு மேளத்துக்கு ஏற்றவாறு ஆட்டம் ஆடுவதுண்டு. "நில்லம்மா கெங்கம்மா; தெருத் தெரு வாகச் சுற்றினாய் நடுத்தெருவில் நின்றாய், ஏழு புட்டி கும்பம் சோறு உமக்குப் படைத்தோம்; பொல்லி, பொல்லி எருமைக்கிடா உமக்குப்பலியிருக்கிறோம்; பாடவேண்டு மென்று பாட வரவில்லை, ஆடவேண்டுமென்று ஆடவில்லை வருடத்திற்கொருமுறை பாட வந்தேன்" என்பது தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

திருப்பதி கங்கையம்மனைப் பற்றிய குறிப்பு இரண்டு பாடல்களிலும் காணப்படுகின்றன. வசை மொழியால் இழிவுபடுத்துவது கங்கையம்மனுக்கு மிகவும் பிடிக்கும் என்ற செய்தியை இவ்விரண்டு பாடல்களும் வெளிப்படுத்து கின்றன. இரண்டு பாடல்களும் இசையில் வேறுபடு

கின்றன. எருமைக்கிடா பலியைப்பற்றிய குறிப்பு தெலுங்குப் பாடலில் காணப்படுகிறது.

ஆட்டம் ஆடுவதைத் தெலுங்கில் 'சிந்துலு தொக்குட்டா' என்பர் புதன் கிழமை மாலை களிமண்ணால் செய்யப்பட்ட கங்கையம்மனின் உருவத்தை ஊர்வலமாகச் சென்று இறுதியில் ஏதாவது ஒரு கிணற்றில் கரைத்து விடுவதைத் தமிழர்களும் தெலுங்கரும் வழக்கமாகக் கொண்டுள்ளனர். நீரில் கலந்துவிடுவதோடு கங்கையம்மன் திருவிழா முற்றுப் பெறுகின்றது.

இம்மாவட்டத்தில் கங்கையம்மன் திருவிழாவைத் திருப்பதியில் மிகவும் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். சித்தூர் மண்டலத்தில் 'கோட்டகரம்' என்ற கிராமத்தில் 'அல்லிகுண்டா கங்கம்மா' என்ற கிராம தேவதையின் ஆவியானது அவ்வூரிலுள்ள பூசாரியாகிய சுப்பிரமணி முதலியார் நரசும்மலு போன்றவர்களது உடலில் புகுந்து, மக்கள் கேட்ட வரங்களைத் தருகின்றது. இதனைக் 'குறி' கேட்பது என்பர். தமிழிலும், தெலுங்கிலும் 'குறி' என்றே அழைக்கின்றனர். ஞாயிறு, செவ்வாறு, வெள்ளி ஆகிய நாட்களில் இங்கு 'குறி' சொல்வதுண்டு. இம்மூன்று நாட்களில் பல இடங்களிலிருந்தும் மக்கள் வந்து தங்களது எதிர்கால வாழ்க்கையின் அமைப்பையும், நிகழ்காலத்தில் தமக்கு ஏற்பட்டிருக்கும் சிக்கலையும், தெறிந்துக் கொண்டு அல்லிகுண்டா கெங்கையம்மனின் ஆசி பெற்றுச் செல்வர்.

## எல்லம்மா

ஜமதக்னி மனைவியான ரேணுகா தேவியை நாட்டுப்புற மக்கள் 'எல்லம்மா' என்றழைப்பர். இவ்வம்மையாருக்கு 'எல்லரக்கு அம்மா, எல்லவடுஅம்மா' என்ற பெயரும் உண்டு. தமிழகத்தில் எல்லம்மா திருவிழாவினைச் சிறப்பாகக் கொண்டாடுவர். பிள்ளைபேறு இல்லாதவக்கள் எல்லம்மாவை வேண்டிக் கொண்டால் புத்திரப்பாக்கியம்

கிடைக்கும் என நம்புகின்றனர்.[65] இம்மாவட்டத்தில் தமிழர்கள் அதிகமாக வாழும் பகுதிகளாகிய புத்தூர், நகரி, காளத்தி போன்ற மண்டலங்களில் இவ்விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடுவதைப் போல புங்கனூர், வாயல்பாடு, சந்திரகிரி, சின்னகுட்டகல்லு போன்ற வட்டங்களில் வாழ்கின்ற தெலுங்கரும் 'எல்லம்மா' திருவிழாவினைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். தெலிங்கானாப் பகுதிகளில் வாழும் மக்கள் 'பாம்பு'களை எல்லம்மா தேவதையாக எண்ணிப் பூசை செய்து வழிபடுகின்றனர். இவ்வம்மையார் ரேணுகம்மாள், மாத்தம்மா, மாகூரம்மா, மாரெம்மா, அக்னி மாரியம்மா, எல்லம்மா தேவரா, அல்லி எல்லம்மா போன்ற பெயர்களைக் கொண்டும் விளங்குகின்றாள். இடத்திற்கேற்றவாறும், சாதியின் அடிப்படையிலும் இப்பெயர்கள் மாற்றமடைந்துள்ளது. தெரியவருகின்றது. 'எல்லம்மா' சிலை வடிவத்தில் கோயிலில் வைக்கப்பட்டுள்ளது. நாட்டுப்புறங்களில் பாம்பு வடிவத்தில் சிலை வைக்கப்பட்டுள்ளதைக் காண முடிகிறது. எல்லம்மாவை நாட்டுப்புற மக்கள் தங்களது தாயாக மதித்து வணங்குகின்றனர். எல்லம்மாவுக்குச் சில இடங்களில் தினமும் பூசை, செய்யப்படுகிறது. ஜூன் மாதத்தில் 'எல்லம்மா' திருவிழா நடை பெறுகின்றது. விழாவென்று எல்லம்மாவுக்குப் பூசைகளையும் பொருத்தனைகளையும் செலுத்திவிட்டு, ஊர்வலமாக எடுத்துச் செல்வர். அச்சமயம் நாட்டும்புறமக்கள் மகிழ்ச்சியுடன் மேளம், பம்பை, பறை, தம்புரா, டோல், முதலியவைகளைக் கொண்டு இசை எழுப்புவர். அந்நேரம் பலர் ஆடியும், பாடியும் வீதியெங்கும் களிப்புடன் காணப்படுவர். இந்நிகழ்ச்சியில் தமிழிலும், தெலுங்கிலும் பாடல்கள் பாடப்பெறுகின்றன.

**ஏரிக்கர எல்லம்மா—எங்க**
**தொல்லைகளை பாரம்மா**
**நாக கன்னி எல்லம்மா—எங்க**
**கஸ்டத்த பாரம்மா**

தேவ கன்னி எல்லம்மா
தேவைய சொல்லம்மா
கற்பூரம் வேணுமா—அம்மா
கந்து பொடி வேணுமா[67]

தெலுங்கரும் 'எல்லம்மா' உருவச்சிலையை ஊர்வலமாக எடுத்து வரும்போது பாடல்களைப் பாடுகின்றனர். பாடல்களுக்கேற்றவாறு கூத்தாடுவர்.

தாட்டி மானு சக்கனய்தே
ராஜ மொன கோடா
மூல னொஸ்திவி ஏலம்மா
ஏட்டி கட்னா எல்லம்மா
எந்துக்கம்மா அலிகினாவு
கற்பூரம் காவாலனா—எல்லம்மா நீக்கு
டெங்காயி காவாலனா[68]

பொதுவாக எல்லல்மாவுக்குத் தமிழர்கள் ஆடு, கோழி, எருமை, போன்றவைகளைப் பலியிடுவவைப் போல தெலுங்கரும் ஆடு, கோழி, எருமை போன்றவகைளைப் பலியிடுகின்றனர். "ஏரிக்கரையின் மேல் வீற்றிருக்கும் 'எல்லம்மா தாயே எங்கள் மீது உமக்கு கோபம் ஏன்' கற்பூரம் வேண்டுமா தேங்காய் வேண்டுமா" என்பது தெலுங்கு பாடலூர்குரியப் பொருளாகும்.

எல்லாம்மாவின் இருப்பிடங்களுள் ஏரிக்கரையும் ஒன்றாகும். என்பது தமிழ்ப்பாடலிலும் குறிப்பிட்டுள்ளது. போன்று தெலுங்குப் பாடலிலும் குறிப்பிட்டுள்ளது. எல்லம்மாவுக்குப் பல பெயர்கள் இருந்து வந்தாலும் தமிழர்களும், தெலுங்கரும் தங்களதுப் பாடல்களில் எல்லம்மா என்றே அழைத்திருப்பது குறிப்பிடத்தக்க தாகும். இவ்விரண்டுப் பாடல்களும் இசையில் வேறுபடு கின்றன.

# கிராம தேவதைகளும் பூஜை செய்யும் முறைகளும்!

Dravidian Puchoy means flower action other Dravidian pusu means to anceint or smear ie with Sandalwood paste or vermilion instead ofblood[1] கிராம தேவதைகளுக்குப் பூஜை செய்வது என்பது பண்டைய காலத்தில் தோன்றியவை. தந்தை வழி மகனுக்கு என்ற அடிப்படையில் இம்முறை பரம்பரை பரம்பரையாக மக்களிடையே இருந்து கொண்டிருக்கின்றது பூசை மட்டுமல்லாமல் தேவதைகளின் பூசையைக் குறித்தும் வழிபாட்டு முறைகளைக் குறித்தும் மக்கள் பண்டையக் காலத்திலிருந்தே அறிந்து வந்திருக்கின்றனர். புதையுண்ட நகரங்களான ஹரப்பா, மொகஞ்சதாரோ போன்ற இடங் களில் கிடைக்கப்பட்ட முத்திரைகளில் தேவதைகளின் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. இதனைச் சற்று ஆய்வு நோக்கோடு கண்டால் தேவதை பூஜைக்கு முன்பு மூல தேவதை பூசை இருந்திருக்க வேண்டும் கிராம தேவதைக்கு மூலாதாரமாக விளங்கும். மூலதேவதை ஆராதனை முறை கி.மு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இருந்திருக்க வேண்டும். ஆனால் மூல தேவதை ஆராதனை முறை மக்களிடையே எவ்வாறு இருந்தது. என்பதை ஆணித் தரமாகச் சொல்ல போதுமான ஆதாரங்கள் கிடைக்க வில்லை. ஆனால் சில காலம் கடந்த பின்னர் மூலதேவதை ஆராதனை முறையில் மந்திரம், தந்திரம், பலி போன்றவை இடம்பிடித்துக் கொண்டன, மூல தேவதையின் சொரூப மான தேவதையின் பூசை முறையை அறியும் முன் ஆய்வுக் களமாக விளங்கும் சித்தூர் மாவட்டத்தில் மூல தேவதை ஆராதனை முறை எவ்வாறு இருந்தது என்பதைத் தெளிவோம்,

மனிதனுடைய வாழ்க்கையில் பல்வேறு எதிர்ப்புகள் தோன்றலாயின. எதிர்ப்புகளைச் சந்தித்து மனிதன்

வாழ்க்கையின் ஒவ்வொரு கூறுகளிலும் தன்னுடைய இலட்சியத்தை நோக்கி முன் செல்லலானான்! இவ்வுலகி லுள்ள எல்லா இயற்கையின் சலனங்களுக்கும் ''மூலதேவதை'' தான் காரணமாய் விளங்குகிறாள் என்று எண்ணினான். அவற்றை திருப்தி படுத்துவதற்காகவும், அருளைப் பெற்று இயற்கையை ஆள்வதற்காகவும் மூல தேவதையை வழிபடாலானான்.

இப்பூசை முறைகளுள் முக்கியமானவைகளாக ; 1. பிரார்த்தனை 2. மந்திரம், 3. புனிதம் 4. ஆந்தும ஹிம்சை 5. பலி போன்றவை முக்கிய சடங்குகளாகும். இதனைத் தெலுங்கில் 1. பிரார்த்தனா, 2. மந்த்ரசர்யா 3. பவித்ரகரண 4. ஆத்மஹிம்சா 5. பலி என்று சொல்வர்.

## 1. பிரார்த்தனை

விருப்பங்களைக் கேட்பதற்கும் தெய்வச்சக்தியைப் பெறுவதற்கும் மேற்கொள்ளப்படும் சடங்கை பிரார்த்தனை என்பர். மேலும் தெய்வபக்தியை தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்வதற்கும். அச்சக்தியிலிருந்துப் பயனைப் பெறுவதற்கும், ஆதிமனிதன் மேற்கொண்ட முதல் முயற்சி ''பிரார்த்தனை'' என்று சொலலலாம். ஆதிமனிதனது, பிரார்த்தனை முறையை இரண்டு வகையாகப் பகுக்கலாம் 1. சமுதாய முன்னேற்றத்திற்கு மேற்கொள்ளப் பெறும் பூசைகள் 2. தனிப்பட்ட மனித வாழ்க்கைக்கு பயனளிக்கும் வகையில் மேற்கொள்ள பெறும் பூசைகள் என்பதாகும்

ஆதிமனிதன் ஒரு இடத்தில் கூட்டமாகக் கூடி வாழ முற்பட்டபோது தன்னைச் சுற்றிலும் உள்ள பல்வேறு சமுதாயத்தவரால் பல தொல்லைகளை அடைய வேண்டி யிருந்தது. இயற்கையின் சீற்றம் தீய சக்திகளின் விளைவு பயம் போன்றவை ஆதி மனிதனை பயமுறுத்திக் கொண்டிருந்தது. இதனின்றும் தன்னையும், தான் வாழும்

சமுதாயத்தையும் காப்பாற்றிக் கொள்ள மேற்கொள்ளப் பெறும் சடங்கை பிரார்த்தனை என்று சொல்வர். தான் நலமாய் வாழ வேண்டும் என்றும் மற்றவர்களைக் காட்டிலும் தான் வலிமை வாய்ந்த சக்தியைப் பெற வேண்டும் என்றும், மேற்கொள்ளப் பெறும் பூசையை 'பிரார்த்தனை' என்பர்.

ஆதிமனிதனது பிரார்த்தனையின் போது விருப்பத்தை மட்டும் தெய்வச்சக்திக்கு எடுத்துரைப்பான் அதற்கு நன்றி செலுத்தும் வகையில் காணிக்கைகளைச் செலுத்துவான் இது மட்டுமேயன்றி அவனது பிரார்த்தனை முறையில் வேறு எந்த மாற்றமும் காணப்படவில்லை. மந்திரங்களும் தந்திரங்களும், சாஸ்திரங்களும் அபிவிருத்தியடைந்து, தேவதைகளுக்கு ஒரு நிரந்தரமான உருவம் ஏற்பட்ட பிறகு தேவதைகளைக் நீக்கம் குறித்த இலக்கியம் தோன்றிய பிறகு தேவதைகளின் பூசை முறையில் பல்வேறு சடங்குகள் இடம் பிடித்துக் கொண்டன. அதுமட்டுமல்லால் ஆதிமனிதனுடைய பூசையில் தெய்வத்திற்கும், மனிதனுக்கும் இடையே பூசாரி என்பவன் இல்லை. தேவதைகளின் பூசையில் ஆச்சாரங்கள், இடம்பிடித்த போது தேவதைக்கும், பக்தர்களுக்கும் இடையே பூசாரி முறை ஏற்பட்டது.

## 2, மந்திரச் சடங்குகள்

தெய்வச் சக்தியைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதற்கும், கடுமையான வேலைகளை எளிதில் முடிப்பதற்கும், எடுத்துச் சொல்லும் ஒருவிதமான உச்சரிப்பை நீக்கம் மந்திரம் என்று சொல்கிறோம். அது மட்டுமல்லபது தெய்வசக்திகளோடு தொடர்பு வைத்துக் கொள்வதற்கும் மந்திரம் பயன்படுகிறது[2] Magic too is made up of beliefs and rits It has ceremonies sacrifices Lustrations Prayers, chants and dances as well.

'மந்திரம்' என்பது சில தனிப்பட்ட முறையில் தெய்வச் சக்தியை பெற மேற்கொள்ளப்பெறும்'' சடங்கு என்று சொல்லுவர்.

சில தனிப்பட்டச் சொல்லைக் கேட்பவர்களுக்கு புரியாத வகையில் திரும்பத் திரும்ப வேகமாக எடுத்துச் களுக்கு பெரும்பான்மை சக்தி இருப்பதாகக் கருதி சொல்வகையே ஆதி மனிதன் கருதினான். மந்திரங் னால். இந்த சக்தியின் மூலம் தெய்வச் சக்தியைத் தனதுக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முடியும் எனக் கருதினான். 'யோகாசனம், அபிவிருத்தி அடைந்தபிறகு அதில் ஏதோ ஒரு செயல் மனிதனுக்கு நன்மையளிக்கும் வகையில் அமைந்துள்ளது. என்று உணரலானான் அதனை ''ப்ராணாயாமம்'' என்று அழைப்பர்.

பிராணாயாமம் என்பது மனிதரில் உள்ள ஆத்ம சக்தியை பெருகச் செய்கின்றது. என்று கருதினான். சில தனிப்பட்ட ஒலிகளைப் ப்ராணயாகமத்தில் சேர்த்து ஒலித்தால் உறங்கிக் கொண்டிருக்கும் சக்தி விழித்துக் கொள்கிறது என்று உணரலானான். இவ்விதமாக வந்த பரிணாம வளர்ச்சியில் ஆத்துமசக்திக்கு மூலமாக விளங்கும் மூல தேவதை பல மழிகளில் பூஜிக்கப்படலானாள், மூல தேவதைக்குரிய சக்தியைப் பெறுவதற்கு ஆதிமனிதன் பலவித முயற்சிகளை மேற்கொண்டான். இது போன்ற முறைகள் மந்திர—தந்திர வகைகள் கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கும் 12-ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டக் காலத்தில் நல்ல வளர்ச்சி நிலையில் இருந்தது.

இக்காலத்தில் சக்தி தேவதை ஈசுவரனைக் காட்டிலும் சிறப்பாக பூஜிக்கப்படலானாள். சக்தியைத் தன் வசம் செய்துக் கொள்ள அனேகப் பூசைமுறைகள் மேற்கொள்ளப் பட்டன. அதில் ''சக்கரப் பூசை'' என்பது முக்கியமானவை இந்துக்களின் பூசை முறையில் சக்கரங்களுக்கு (Crrcular Shapes) தனிப்பட்ட இடம் உண்டு. மனிதனின் உடலில்

88 ஆயிரம் சக்கரங்கள் இருப்பதாகக் கூறுவர். மந்திர சக்தியோடு ஆத்ம சக்தியை ஒன்று சேர்ப்பதற்கு மேற் கொள்ளப்படும் சடங்குமுறைகளில் சக்கரப்பூஜை, ஸ்திரீ கன்னிப்பூசை போன்றவை சிறப்பு வாய்ந்தவை.

இந்த பூசை முறையில் ஸ்திரீயை சக்தி தேவதையாகக் கருதி சிறப்பான முறையில் பூசை மேற்கொள்வர். அதோடு பஞ்ச பூதங்களையும் வழிபடுகின்றனர். பஞ்ச பூதங்கள் நீர், நிலம், நெருப்பு, ஆகாயம், காற்று போன்றவையாகும். ஸ்திரீ பூசை, சக்கரபூசை, கன்னிப் பூசை போன்றவற்றில் மந்திரத்திற்கு முக்கியத்துவம் உண்டு தென்னிந்தியாவில் வாழும் பூசாரிகளுள் பெரும்பாலோர் பஞ்சபூதங்களுக்கு முதலிடம் அளிக்கின்றனர்.

,தந்திரம்' என்பது தெய்வச்சக்தியைப் பெறுவதற்கு சில தனிப்பட்ட முறைகளைக் கையாளும் சடங்கு என்று சொல்லலாம். "The word 'Tantra' which is derived from the root Tan to spread means a system, a method desipline தந்திரம் என்பது தர்மம், இச்சையடக்கம் மோட்சம் ஆகியவற்றிற்கு வழிகாட்டி என்றும் சொல்லலாம்.

தந்திரம் என்பது வைதீக மதத்திலிருந்து (Vedic Religion) தோன்றியது என்றும் இரகசியமாகவே இது வளர்ந்து வரலாயிற்று என்றும் கூறுவர் தந்திரம் என்பது பழங்காலத்தவை என்று சிலர் கூறுவர். தந்திரத்திற்குச் சம்பந்தப்பட்ட இலக்கியங்கள் கி. பி. 7 அல்லது 8 ஆம் நூற்றாண்டில் தோன்றியவை என்பர். புத்தமத தந்திரங் களுள் முதல் தந்திர இலக்கியம் "குஹசமுதாயம்" என்ற பெயரில் கி. பி. 650 ல் வெளிவந்தது. என்று சொல்வர். இந்துக்களுக்குச் சம்பந்தப்பட்ட ருத்ரயாமம், பிரம்ம யாமம், குல, இன, தந்திரம், போன்ற இலக்கியவகைகள் கி. பி. 1000, 1100, 1150 ஆகிய ஆண்டுகளில் தொன்ற லாயின.

ருத்ரயாமம் என்ற நூலில் விசுவாசம், பரமேஸ்வரி, கிரணம் போன்றவைப்பற்றிய தந்திரங்கள் இடம் பெற்றுள்ளன. பிரம்மயாமத்திற்குச் சம்பந்தப்பட்ட செய்திகள் இன்றும் நேபாளத்தில் பத்திரமாகச் சேமித்து வைக்கப்பட்டுள்ளன. இந்த யாமங்களில் தந்திர முறைகள் மட்டுமல்லாமல் புதிய தேவதைகளுக்குச் சம்பந்தப்பட்ட பூசை முறைகள் கூட அடங்கியிருக்கின்றன. நிலையான தேவதைகளுக்கு உரிய பூறைகளையும் யாமத்தில் காண லாம். பிராமணர்கள் மேற்கொள்ளும் மந்திர—தந்திர முறைகளையும் இதில் விளக்கமாக எடுத்துச் சொல்லப் பட்டிருக்கின்றன. ப்ரம்ம யாமத்தில் முதல் பகுதியான ''ஐயத்ரதாயமத்தில்'' சக்தி தேவதையின் ஆராதனை முறைகள் உள்ளன.

முக்கியமாக காளி, சங்கர்மணி, காளி சங்கர்மணி, தாம் பரகாளி, ககனேஸ்வரி, எக்தாரா பைரவதாகினி, வீரகாளி, பத்ரகாளி போன்ற தேவதைகளின் ஆராதனை முறைகள் உள்ளன. இவ்விதமாக யாமத்தில் விவரமாகச் சொல்லப் பட்டிருக்கும் தந்திர பூசை முறைகள், பிற்காலத்தில் நாடெங்கிலும் பரவலாயின. சில மந்திரவாதிகள் இன்றும் இது போன்ற பூசை முறைகளை அனுசரிக்கின்றனர். சித்தூர் மாவட்டத்திலும் கிராம தேவதை ஆலயங்களில் மட்டுமன்றி தனிப்பட்ட சக்தி பூசை மேற்கொள்ளும் மந்திரவாதிகளும் இன்றும் காணப்படுகின்றனர். உதாரணத்திற்கு சித்தூரில் உள்ள குருநாத சித்திர கோயி லுக்கு அருகில் உள்ள தேவராசன் என்பவரையும், சித்தூருக்கு அருகில் உள்ள எட்டேரி என்ற கிராமத்தில் வசிக்கும் சுப்பிரமணியம் என்பவரையும் சிறந்த மந்திர வாதிகள் என்று சொல்லலாம்.

## புனிதச் செயல்

தீ மிதித்தல், நீரிலும், இரத்தத்திலும் பால், நெய், தேன் போன்றவற்றில் கழுவி சுத்தம் செய்தலை புனிதச் செயல் என்று சொல்லலாம். ஆதிமனிதன் சக்தியை வழிபட்டப் பின்னர் சில பொதுவானக் காரியங்களில் விழிப்புணர்வோடு இருந்தான். சக்தி தேவதை இருந்த இடத்தைப் புனிதமாகக் கருதினான். அந்த இடம் சுத்தமாக இருக்க பலவித முயற்சிகளை மேற் கொண்டான். தானும் உடலாலும், உள்ளத்தாலும் புனிதமாகவும், சுத்தமாகவும் இருக்க விரும்பினான். இவ்விதமான முயற்சியில் ஆச்சாரங்கள் ஒழுகாது கடைபிடித்தாலும், சரியான முறையில் ஆச்சாரங்களை கையாள இயலவில்லை என்று ஆதி மனிதன் மனம் நொந்து போனான். இந்த மனக் கசப்பு மற்றொரு புனிதச் செயலுக்கு வழிவகுத்தது.

ஆதி மனிதர்கள். புனிதமான பொருட்களுடன் மிகவும் கவனமாக இருந்து வந்தார்கள். இவைகளோடு நாம் அஜாக்ரதையோடு பழகினால் மரணம் ஏற்படும் வாய்ப்பு இருக்கும். வெளியூரிலிருந்து வந்தவர்களுள் யாரேனும் ஒருவர் மற்றொரு சமுதாயத்திற்குள் அடி எடுத்து வைக்கும் முன், புண்ணியஸ்தலம், பொருட்கள், போன்றவற்றைக் குறித்தும் அதனின் புனிதத்தன்மைக் குறித்தும் தெரிந்துக்கொள்வான் இதன் காரணமாய் தேவாலயங்கள் புனிதமாகவும், தேவாலயத்தைச் சுற்றியுள்ளப் பகுதிகள் சுத்தமாகவும் வைத்துக்கொள்ளப் பட்டன. தூரத்திலிருக்கும் மனிதன் பூர் ஆலயத்தை வெகு தூரத்தில் கண்டுவிட்டலே் அந்த பிரதேசம் புனிதமானது என்று தெரிந்துக் கொள்கிறான், கிராமதேவதைகளின் ஆலயங்களுக்கு முன்பு புனிதத்தை வெளிப்படுத்தும் வகையில் சூலங்கள் நாட்டப்பட்டிருக்கும்.

இவ்விதமாக மனிதக்களிடத்தில் இருந்து வந்த புனிதச் செயல் அவன் மேற் கொள்ளும் பூசை முறையிலும்

பரவியது. ஆதிமனிதன் புனிதமான பொருளையும், அந்த பொருள் வைக்கப்படும் இடத்தையும், தானும், புனிதமாக வைத்துக்கொள்ளவேண்டும். என்று கருதினான். புனிதமான இடங்களுக்குப் போகும் முன் உள்ளத்தாலும் உடலாலும் புனிதமாக இருத்தல்வேண்டும். என நினைத்தான். உள்ளத்தால் தான் புனிதமாக இருப்பதை அறிய முதலில் அவன் தெரிந்துக் கொண்ட செயல் ''தீ மிதித்தல்' என்பது ஆகும்.

புராணங்களில் சீதை, திரௌபதி ஆகிய பத்தினிப் பெண்டீர்கள் தங்களது புனிதத்தை வெளிப்படுத்த தீ மிதித்தார்கள் என்ற செய்திகள் நாட்டுப்புற மக்களிடையே ஆணிந்தரமாகக் குடிகொண்டன, ஆதுமட்டுமன்று நெருப்பு என்பது ஐம்பூதங்களுள் ஒன்றாக விளங்குகின்றது. புனிதத்திற்கு தீ மிதித்தல் என்பது ஏற்புடையது என்று அன்றைய மனித சமுதாயம் இதனை வரவேற்றது. அவை நாளடைவில் வழக்கமாக மாறிவிட்டது. என்று சொல்லலாம். இவ்விதமாக வழக்கத்தில் ஆழமாக காலூன்றிய புனிதம் என்பது கிராமப்புறங்களில் இன்றும் காணப்படுகின்றது.

## 4 ஆத்ம ஹிம்சை

பக்தர்கள் தெய்வத்தின் அருளைப் பெறுவதற்கு தனக்குத்தானே ஹிம்சித்துக் கொள்வதனை 'ஆத்ம ஹிம்சை' என்று சொல்லலாம். சிறுவர்கள், தங்களது பெற்றோர்களின் கண்ணில் தயை கிடைப்பதற்கு சில நேரங்களில் உண்பதை நிறுத்திவிட்டு அழுது அடம்பிடிப்பதைப்பார்க்கின்றோம். இவ்விதமாக ஏற்பட்ட இந்த செயல் ஆதிமனிதனின் தேவதை வழிபாட்டில் ''ஆத்ம ஹிம்சை' என அழைக்கப்பட்டது.

பிற்காலத்தில் ஆத்மஹிம்சை என்ற முறையில் பல்வேறு முறைகள் கையாளப்பட்டன. கிராம தேவதைகளின் முன்பு கை, கால்களைக் கட்டிப்போடுதல், உதடுகளில்

சூலத்தை நாட்டிக்கொள்ளுதல், நாக்கில் சூலத்தைக்குத்திக் கொள்ளுதல், கண்களைத்தானம் செய்தல் போன்ற அனேக வகையான ஆத்மஹிம்சைகள் கிராம தேவதைகளின் பூசையில் இடம் பிடித்தன.

இவ்விதமாக ஏற்பட்ட ஆத்மஹிம்சை முறைகள் இன்றும் சில இடங்களில் காணப்படுகின்றன. கங்கை யம்மன் திருவிழாவின் போது உதட்டிலும், நாக்கிலும், சூலங்கள் நாட்டிக்கொள்ளும் முறை போன்றவை இன்றும் பல்வேறு இடங்களில் பரவலாகக்காணப்படுகின்றன. தற்போது 'சப்பாரம்' (அலங்கரிக்கப்பட்ட கோபுரவடிவம்) எடுத்தல், உடல் முழுவதும் எலுமிச்சம்பழத்தைக் குத்திக் கொள்ளுதல், கத்தியால் அறுத்துக்கொள்வது, தலையின் மீது தேங்காயை உடைத்துக்கொள்வது, போன்ற ஆத்ம ஹிம்சை முறைகள் போன்றவற்றை இன்னும் காணலாம்.

## பலி

பலி என்றால் 'காவு' கொடுத்தல் என்று பொருள்படும். தேவதைகளுக்கு நன்றி செலுத்தும் வகையில் காணிக்கைகள் செலுத்துவதையே 'பலி' என்று சொல்லலாம். இந்த பலியானது காணிக்கை, [தீபம், பூ, எலுமிச்சை, விலங்கு, மனிதன் போன்ற வடிவத்தில் இருக்கலாம். அதிக சக்தியைப் பெறுவதற்கும், இயற்கையின் சீற்றத்தி லிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்கும் கொடுக்கப்படும் காணிகையை பலி என்று சொல்லலாம். பெரும்பாலான இடங்களில் விலங்குகளையே இறை வனுக்குப் பலி செலுத்தும் வழக்கம் இருந்து வருகின்றது.

இறந்தவர்களுடைய ஆவிகள் தாம் உயிரோடு இருக்கும் போது விருப்பம் கொண்டவற்றை விரும்புகின்றன என்று ஆதிமனிதர்கள் நம்பினர். அதற்காகவே அவர்கள் இறந்த பின்னர் ஆவிகளுக்கு ஏதாவது காணிக்கை செலுத்தும்

வழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டனர். இவ்விதமாக ஆதிமனிதன் முதன் முதலில் மேற்கொண்ட காணிக்கை முறைகள் நாளடைவில் 'பலி' ஆக மாறியது. இன்று பலி என்று சொன்னால் விலங்குகளைப் பலி கொடுத்தல், இரத்தத்தைப் 'பலி' இடுவது என்று பொருள்பட விளங்கி வருகின்றது. பண்டைய காலத்தில் பிணங்களைப் புதைக்கும் இடத்தில் பயிர்கள் நன்கு செழித்து வளரும், இதனைக் கண்ணுற்ற மனிதன் பூமிக்கு மனிதனைப் பலி கொடுத்தால் பயிர்கள் நன்றாக வளர்கின்றன. என்று நினைத்திருக்கக்கூடும் என பலர் முடிவுக்கு வருகின்றனர். இவ்விதமாக முதலில் பூமிக்கு பலி கொடுத்த பழக்கம் பின்னர் வழக்கமாக மாறி இன்றைய பலியாக உருவெடுத்தது என்பர் கிராம தேவதை வணக்கத்தில் 'பலி'க்கு முக்கியத்துவம் உண்டு. பண்டைய காலத்தில் பலி எவ்வாறு இருந்தது என்பதை ஆய்வோம்.

சாதாரணமாக பலியை ஆகாயம், பூமி, சூரியன் சந்திரன், நதிகள், திசைகள், பூதங்கள், நீர், மரம் சில உயிரினங்கள் போன்றவற்றிற்குக் கொடுக்கின்றனர். பலியை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். 1. நரபலி 2. விலங்கு பலி ஆகியவையாகும்.

## நரபலி

பயிர்கள் நன்கு விளைச்சலைத் தரவும். தொற்று வியாதிகள் வராமல் தடுக்கவும். கால்நடைகள் கன்றுகள் போடவும், பணம் சேரவும், அதிர்ஸ்டம் வந்து சேரவும், தேவதைக் கருணைக் காட்டவும், நரபலி கொடுப்பதுண்டு. நரபலியைக் குறித்து இருக்கு வேதத்தில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இதில் குறிப்பிட்டுள்ள பலி பற்றிய செய்திகள் அனைவருக்கும் பொதுவானவை'

யசூர் வேதத்தில் பலியைப் கொடுக்கப்படவேண்டியவர் சத்திரியன், பிராமணன், ஆகியோர்கள் இருக்க வேண்டும்.

அவனை 1000 பசுமாடுகள் கொடுத்து விலைக்கு வாங்குவர். அவர் ஒரு வருடம் முழுவதும் சகல வசதிகளுடனும் வாழலாம். ஆனால் பெண்களை மட்டும் தீண்டக்கூடாது. பலி கொடுக்கும் நாளில் கிராம தேவதையின் பூசாரி அவனை வெட்டி சாகடிப்பர். அவன் இறந்த பின்னர் அந்த நாட்டு மன்னரின் இளவரசி இறந்து கிடக்கும் பிணத்துடன் உடலுறவு கொள்வாள். இந்த நிகழ்ச்சிகள் முடிவு பெற்றதும் பலி கொடுத்தவரின் உடலை சிறு, சிறு துண்டுகளாக நறுக்குவர். பின்னர் நறுக்கியத்துண்டுகளை கிராமதேவதை களுக்குப் படைப்பர் ஆனால் துரோணப்பகுதியில் பலியைக் குறித்து வேறு விதமாகக் கூறப்பட்டுள்ளது.

பலி கொடுக்கப்படும் மனிதனைக் கீழே படுக்க வைத்து அவனுடையக் கழுத்தை அறுத்துக் குடலை வெளியே எடுத்துக் கிராம தேவதையின் கோயிலுக்கு முன்புள்ள மரத்தில் மாலை போல் தொங்கவிடுவர். பின்பு பலி கொடுப்பவன் பலி ஆனவனின் உடலில் உள்ள இரத்தத்தில் தன்னுடையக் கையை நனைத்து அம்மரத்தில் கை முத்திரை இடுவான்.

காளி புராணத்தில் நரபலி பற்றிய முழு விவரங்கள் உள்ளன. சக்தியைக் கொடுக்கும் மூல தேவதைக்கு எல்லா விலங்குகளையும் பலி கொடுக்கலாம். ஆனால் நரபலி கொடுத்தால் தேவி ஆயிரம் ஆண்டுகள் சமாதானமாக இருப்பாள் என்று சொல்வர். ஒரே நேரத்தில் மூன்று பேர் களைப் பலி கொடுத்தால் ஒரு இலட்சம் ஆண்டு தேவி திருப்தியாக இருப்பாள் என்று காளி புராணத்தில் சொல்லப் பட்டிருக்கின்றது.

நரபலி கொடுக்கும் முன்பு தேவதையை பூக்களாலும் சுகந்த பொருட்களாலும் பூசை செய்வர். பலி கொடுப் பவனை பலி பீடத்துக்குக் கொண்டு வருவர், பலி கொடுப்பவனைக் கிழக்குப் பக்கமாகத் திருப்பி நிற்க வைப்பர். பலி கொடுப்பவன் வடக்குத்திசை நோக்கி

திற்பான். பலி இடுபவனது தலையை இடது புறமாக சாய்த்து என்னுடைய அற்புதத்தின் பயனாக நீ ஒரு புனித செயலுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டாய். பலிக்குத் தயாராக இருக்கும் இவனை தேவி உனக்குப் பலியாகக் கொடுக்கிறேன். இதன் பயனாய் எல்லா தீய சக்திகளும் நாசம் அடையவேண்டும்'' என்று உரத்த குரலில் சொல்லி விட்டு அவன் தலையில் தண்ணீரை ஊற்றுவர். பின்னர் அவனது தலையில் பூவைத் தூவுவதுண்டு. அடுத்து கத்தி, அல்லது அறிவாள் போன்றவற்றைக் கொண்டு வந்து ஓம்... ஓம்...பட் என்று சத்தமாய் கூக்குரலிட்டுக் கொண்டே அவனுடையத் தலையை வெட்டுவர்.

இரத்தத்தை ஒரு பாரத்திரத்தில் (வெள்ளி, ராமி, பித்தளை( ஆகிய தட்டில் வைப்பர். தலைக்கருகில் தீபம் ஏற்றுவர். தலையையும், இரத்தத்தையும் தேவதை முன் வைத்து பின்னர் இரத்தத்தை தேவதை இருக்கும் இடத்தில் தெளிப்பர். அதோடு நரபலி முடிவடைகின்றது.

நரபலியைக் குறித்துப் புராணங்களிலும் சொல்லப் பட்டிருக்கின்றன இராமாயணத்தில் ''சுவக்ஷேபு'' என்பவன் பலி கிடாவாக விற்கப்படுகின்றான். மகாபாரத் தில் பாண்டவர்கள் போருக்குச் செல்லுமுன் இலாவந்தனை காளி தேவதைக்குப் பலி கொடுக்கின்றனர். ஜராசந்தன் என்பவன் 100 சிற்றரசர்களைப் பலி கொடுப்பதற்காக பசுபதி என்ற ஆலயத்தில் கட்டிப் போட்டிருக்கையில் இவர்களை ஸ்ரீ கிருஷ்ணன் காப்பாற்றுகிறார்.

புராங்ணங்களிலே மட்டுமல்லாமல் காவியங்களிலும் 'நரபலி' பற்றியச் செய்திகள் காணப்படுகின்றன. 1000 பேர் பொன் வேலை செய்யும் தொழிலாளர்கள் பலி கொடுத்ததாக சிலப்பதிகாரம் செப்புகின்றது. நர மாமிசத்தைச் சிலர் விற்றதாக அர்த்தசாஸ்திரம் குறிப்பிடு கின்றது. சில பயங்கரவாதிகள் தங்களது காதலிகளைத் தேவதைகளுக்குப் பலி கொடுக்கும் சமயத்தில் கதாநாயகன்

வந்து காப்பாற்றிய செய்தியை மாலதி—மாதவத்தில் பவபூத்தி என்பவர் கூறிப்பிட்டுள்ளார்.

சரித்திரத்திலும் நரபலி பற்றிய செய்திகள் காணப் படுகின்றன. விஜய நகரத்தில் ஒரு கோபுரம் கட்டிக் கொண்டிருக்கும் சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் ஒரு குற்றவாளியைப் பலி கொடுத்ததாகக் கூறப்படுகிறது. காமரூபத்தில் காமாக்ய கோயில் கட்டும் சமயத்தில் 146 பேர்களைப் பலி கொடுத்து அவர்களுடையத் தலையை ராகி அண்டாவில் வைத்துப் படைத்ததாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. அது மட்டுமல்லாமல் கடந்த நூற்றாண்டின் இறுதியில் தஞ்சாவூரில் ஒரு காளி ஆலயத்தில் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் ஒருவரை பலி கொடுத்ததாகக் கூறுவர்.

இவ்விதமாக நடைபெறும் நரபலியின் பின்னால் ஏதோ ஒரு உத்தேசம் இருக்கின்றது. அது மட்டுமல்லாமல் ஒவ்வொரு பலிக்கும் ஒரு பிரபாவம் இருக்கும். பலி கொடுக்கும் சமயத்தில் எல்லா பொருட்களுக்கும் புனிதம் என்பது செயல்படுகின்றது, பலி கொடுத்த பின்னர் உடனே அந்த இடத்தைக் கழுவி சுத்தம் செய்ய வேண்டும். பலி சம்பந்தப்பட்டச் செலவுகளை ஏற்பவர்களுக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும் என்று நம்புகின்றனர். சிறிய பலிகளை எஜமான் என்பவன் தன்னுடைய இல்லத்திலேயே தானே செய்துக் கொள்ளலாம். ஆனால் பெரிய பலிகளை எல்லாம் தெரிந்த மதகுருக்கள் மட்டுமே நடத்த வேண்டும். இத்தகைய செயல்களை மேற்கொள்ளும் போது எஜமானின் ஆலோசனைகளையும் ஏற்க வேண்டி வரும்.

இவ்விதமாக பரவிய நரபலி பல நாடுகளிலும், பல இனத்து மக்களிடத்திலும் காணப்படுகிறது. இறைவனின் தியாகத்தால் மனிதன் பிறக்கின்றான் என்று அஜிஸ்து (Aztee) நாட்டு மக்கள் நம்புகின்றனர். அதற்குப் பிரதிபலனாக இறைவனுக்கு மனிதனின்

இதயத்தை அர்ப்பணம் செய்கின்றனர். சுகாடியா என்ற இனத்தவர்கள் மிகவும் கொடூரமான முறையில் நரபலி கொடுப்பார்கள். நெடுவழியில் யாராவது தனியாகப் போய் கொண்டிருப்பவனைப் பிடித்துக் கொண்டு வந்து ஒரு பள்ளம் தோண்டி கழுத்து அளவுக்கு அவனைப் புதைத்து விடுவர். அவன் தலைமீது அகல் விளக்கேற்றி அவனைச் சுற்றிலும் ஆடிப்பாடி மகிழ்வதுண்டு. புதையுண்டவன் விளக்கின் சூட்டிற்குப் பொறுக்காமல் கதறி அழும்போது சுகாடியர்கள் ஆணும் பெண்ணும் அவனை வலம் வந்து ஆடிப்பாடி மகிழ்வர். அவன் சாகும் வரை இவ்விதமாக ஆடியும், பாடியும், மகிழ்வதுண்டு.

ஆந்திர மாநிலத்தில் ''ரெட்டி'' இனத்தைச் சார்ந்தவர்களான 'மொரசு' என்ற பிரிவினர் திருமணத்தின் போதும், பிறப்பின் போதும், தங்களுடைய குடும்பத்தில் உள்ள ஒருவரின் கை விரலை பைரவன் என்ற தெய்வத்திற்குப்பலி கொடுப்பதுண்டு. சில சமயம் நரபலிகூட கொடுப்பார்களாம்.

தென்னிந்தியவில் 'கோண்டா' என்ற இனத்து மக்கள் மழை வரும்போது மனிதனின் முதுகுப் பகுதியில் உள்ள மாமிசத்தை அறுத்து இறைவனுக்குப் படைப்பார்களாம். 'பொண்டரு' என்ற மற்றொரு பிரிவினர் ஒருவனைக் கம்பத்தில் கட்டிப் போட்டுவிட்டு அவனுடைய முதுகிலிருந்து மாமிசத்தை அறுத்து மழை தேவனுக்குப் படைப்பார்களாம். பின்னர் பலி கொடுத்தவனுடையத் தோலை பூசாரி என்பவர் ஆடையாக உடுத்திக் கொள்வாராம்.

## விலங்குபலி

வேதங்களில் விலங்கு பலியை 'பசுவதை' என்று அழைப்பர். யாகங்களில் யானைகளையும் பலி கொடுப்பார்களாம். அது மட்டுமல்லாமல் 'ருத்ரா' என்ற தேவதைக்கு காளை மாடுகளைப் பலி கொடுக்கும் வழக்கம் வேதங்களில்

காணப்படுகின்றது. இவ்விதமாகச் செய்தால் கால்நடைகள் அபிவிருத்தி அடைகின்றது. என்று நம்புவர். அஸவமேதாய யாகத்தில் 609 விலங்குகளைப் பலி கொடுப்பர். அஸ்வ மேதயாகம் பிரம்மபிரயாகத்திலும், பத்தாவது அஸ்வமே தயாகம் பனாரால் என்ற இடத்திலும் நடந்ததாகக் கூறுவர். இறுதி அஸ்வமேதயாகம் 18வது நூற்றாண்டின் இடைப்பட்டக் காலத்தில் ஜெய்ப்பூர் அரசன் செய்வித்தார். என்று சொல்வர். சில காலத்திற்கு முன் கர்நாடக மாநிலத்தில் உள்ள சித்ரதுர்கா பகுதியில் அஸ்வமேதயாகம் நடைபெற்றது. ஆனால் இந்த யாகத்தில் கட்டையில் செய்யப்பட்ட அஸ்வினியைப் பலி கொடுத்தனர்.

உலக நாடுகளில் விலங்குபலி பல்வேறு முறைகளில் கொடுக்கப்படுகின்றது. 'பெல்லா' என்ற இனத்தவர் வேட்டையாடியப் பிறகு அந்த மாமிசத்துண்டுகளைக் கொண்டு வந்து தனக்கு விருப்பமுற்ற இறைவனை எடுத்துக் கொள்ளும்படி வேண்டுவர்.

ஓரிஸ்ஸாவில் வாழும் மலை சாதியினர் விலங்குகளை மிகவும் கொடூரமாக பலி கொடுப்பதுண்டு. பலி கொடுக்கப் படும் விலங்கு உயிரோடு இருக்கும் போது அதனுடையக் கால்கள் காதுகள் போன்றவற்றை அறுத்து விடுவர் சில சமயம் விலங்கு உயிரோடு இருக்கும் போது அதனை வெட்டி 32 பாகங்களாக்குவர் கருவுற்றிருக்கும் விளங்கின் வயிற்றைக் கிழித்து அதில் வளர்ந்து வரும் பிண்டத்தை வெளியே எடுத்து இறைவனுக்குப் படைத்து வணங்குவர் பின்னர் உயிரோடு இருக்கும் விலங்கை உயர்ந்த இடத்தில் வைத்து வணங்குவர். சில சமயங்களில் பலி கொடுக்கப்படும் விலங்கின் [கால்களை வெட்டி முழங்காலில் நடக்குப்படிச் செய்வர் அது சாகும் 'வரை இப்படியாக நடத்துவிட்பர். கோழிகளையும், பறவைகளையும் மிகவும் கொடூரமாக உயிரை வாங்குவர் இறைச்கைகளை இறுக்கமாகக் கட்டி மேலே தூக்கி எறிவதுண்டு அவை மரணமடையும் வரை இவ்வாறகச் செய்வர்.

மேலே சொல்லப்பட்ட பலிகள் அனைத்தையும் விட மனிதன் தனக்குத்தானே அர்ப்பணித்துக் கொள்வது உத்தமம் என்ற எண்ணம் தோன்றலாயிற்று. கத்தியால் தலையை வெட்டிக்கொள்வது, சூலங்கள் மீது குதித்தல், மலை உச்சியிலிருந்து குதித்தல், போன்ற செயல்கள் தன்னைத்தானே சித்ரவதைக் குள்ளாக்குதல் என்ற செயலில் அடங்கும். நரபலி விலங்குபலி மட்டுல்லாது சில இடங்களில் சாராயம் பிராந்தி. சிகரெட் போன்றவற்றை யும் படைப்பர்.

இவ்விதமாக நடைபெற்று வந்த நரபலி, விலங்குபலி போன்றவை இன்று பெரும்பாலும் குறைந்து விட்டது என்று சொல்லலாம் மேலும் நாகரீகம் வளர வளர நரபலி, விலங்குபலி போன்றவை நாளுக்கு நாள் மிகவும் குறைந்து கொண்டே வருகின்றது என்று சொல்லலாம். இன்னும் நரபலி ஆங்காங்கே காணப்படுகின்றது. அரசாங்கம் விலங்கு பலிக்குப் பல தடைகளை விதித்தாலும் சில தேவதை களுச்குத் திருவிழா எடுக்கும் போது விலங்குபலி தவறாது கொடுத்து வருகின்றனர்.

## சித்தூர் மாவட்டத்தின் எல்லையிலுள்ள மாநிலங் களில் கிராம தேவதைகளின் பூசை முறைகள்

கிராம தேவதைகளின் பூசை முறையில் இடத்திற்கு இடம் மாறுபடுகின்றன. சில முக்கியமான முறைகள் மட்டும் ஒரே மாதிரியாக இருக்கின்றன. மற்றைய செயல் முறை களில் சில மாற்றங்கள் காணப்படுசின்றன. இப்பகுதியில் சித்தூர் மாவட்டத்தின் எல்லைப் புறங்களில் தேவதை பூசைகள் எவ்வாறு மேற்கொள்ளப்படுகின்றன. என்பதை யும் தமிழ்நாடு, கர்நாடகம் ஆகிய மாநிலங்களில் கிராம தேவதை பூசை முறைகள் எவ்வாறு உள்ளன, என்பதையும் ஆராயப்படுகின்றது.

தமிழகத்தில் சில பகுதிகளில் கிராம தேவதைகளுக்கு பூசைகள் செய்யும் போது விக்கிரகம் முன்பு ஒரு திரையைக் கட்டுவர். கிராம தேவதைக்கு முன்பு உள்ள மதுரை வீரன் முனீஸ்வரன் ஆகியோருக்குப் பலி கொடுப்பர். 'போத்து ராஜா' இருக்கும் இடத்தில் 'அய்யனார்' என்ற ஆண் தேவதையை நிலை நிறுத்தி பூசை மேற்கொள்கின்றனர் ,பலி செலுத்திய பின்னர் உலர்ந்த மீன். பங்கி இலைகள் அல்லது சாராயம் போன்றவற்றையும் வீர தேவர்களுக்கு படைப்பது முண்டு. அய்யானாருக்கு ஆண்டு தோறும் விழா எடுக்கின்றனர். கருப்பு கல்லால் செய்யப்பட்ட ஐயனார் சிலைக்கு எள் எண்ணெய், பால், தயிர், தேங்காய் நீர். வாழைப்பழம், சர்க்கரை போன்றவற்றால் அபிஷேகம் செய்வர். அன்று கிராமத்து மக்கள் சோறு. தேங்காய், இனிப்பு போன்றவைகளை அய்யானாருக்குப் படைக்கின்றனர். திருவிழா முடிவு பெறும் சமயம் அய்யனார் சிலைக்கு முன்பு திரையைக் கட்டி அவறது பாது காப்பாளராக விளங்கும் வீரர் தேவர்களுக்கு பலி கொடுப்பர்.

இவ்விதமாக கிராமாதவதைகளின் விக்கிரகங்களுக்கு முன்பு திரையைக் கட்டி பலியைக் கொடுக்கும் முறைகள் சித்தூர் மாவட்டத்தில் காணப்படுவதில்லை ஆனால் திரௌபதை தேவி, திருவிழா சமயத்தில் 'கரகம்' எடுத்தல் போன்ற பழக்கம் சித்தூர் மாவட்டத்தில் சில பகுதிகளிலும் தமிழகத்திலும் இன்றும் காணப்பகின்றன. சித்தூர் மாவட்டத்திலும், தமிழகத்திலும் கங்கையம்மன் திருவிழா ஒன்று போலவே நடைபெறுவதைக் காணலாம். கங்கையம்மன் திருவிழாவின் போது இரத்தத்தை முதுகில் கட்டிக் கொண்டு இழுத்தல்' எலுமிச்சைப் பழத்தை உடல் முழுவதும் குத்திக் கொள்ளுதல், தீச்சட்டி எடுத்தல் போன்ற பழக்க வழக்கம் சித்தூர் மாவட்டத்திலும், தமிழகத்திலும் ஒன்று போலவே காணப்படுகின்றன.

கர்நாடக மாநிலத்தில் மாரியம்மனை வழிபடும் முறைக்கும், சித்தூர் மாவட்டத்தில் கங்கையம்மனை வழிபடும் முறைக்கும் மிகவும் நெருக்கமான தொடர்பு இருக்கின்றன. கோலார், முலபாகல் ஆகிய பகுதிகளில் கங்கையம்மன் திருவிழா சிறப்பாக நடைபெறுகின்றது. அப்போது விலங்கு பலி அம்மனுக்குத் தரப்படுகின்றது. பலியிடும் விலங்கின் கழுத்தை வாயால் கடித்து கழுத்தைத் துண்டிக்கும் வழக்கம் இன்றும் இருந்து வருகின்றது. இச்செயலை அம்மாநில மக்கள் ''காவு பிடித்தல்'' என்ற பெயரில் அழைக்கின்றனர். இதுபோன்ற செயலை மாநிலத்தின் பல்வேறு இடங்களிலும் பரவலாகக் காணலாம்.

பெங்களூர் பட்டணத்தில் உள்ள 'அன்னம்மா' என்ற தேவதைக்குப் பூசை மேற்கொள்ளும்போது கோழிக் குஞ்சு தயிர் போன்றவற்றைப் படைத்து வணங்குகின்றனர். பெங்களூரில் ஆண்டுக்கொருமுறை நடைபெறும் 'பச்சைக் கரகம்' விழாவின்போது சிறிய கத்தியால் மார்பை வெட்டிக் கொள்கின்றனர். இச்செயலை மேற்கொள்ளும் பக்தர்கள் அன்று முழுவதும் உண்ணாவிரதம் இருக்கின்றனர். இச்செயலுக்கு 'அலுகுசேவை' என்று பெயர். பச்சைக் கரகத்தை ஊர்வலமாகக் கொண்டு செல்லும்போது எருமைக்கிடா, ஆட்டுக்கிடா, கோழி, பூசணிக்காய் போன்றவற்றைப் பலி கொடுப்பர். பெங்களூரில் நடைபெறும் பச்சைக்கரகத்திற்கும், நெருங்கிய தொடர்பு உண்டு.

மேலும் கர்நாடக மாநிலத்தில் சிவமொக்கா என்ற மாவட்டத்தில் 'சொரபா' என்ற தாலுக்கா உள்ளது. அந்த தாலுக்காவில் சந்திரகுத்தி என்ற சிற்றூருக்கு அருகில் 'ரேணுகாம்மாள் ஆலயம் மாதங்கி ஆலயம் உள்ளது. அந்த இடத்தில் சிவராத்திரியன்று விசேட பூசை நடைபெறுகின்றது. சிவராத்திரி முடிந்த ஒன்பதாவது நாள் ''நிர்வாண பூசை நடைபெறுகின்றது. சந்திர குலத்துக்கும் ரேணுகாம்மாள் கோயிலுக்கும் இரண்டு கல் தூரம் உள்ளது.

பூசை நாளன்று ஆண்களும் பெண்களும் நதியில் நீராடிவிட்டு நிர்வாணமாக இரண்டு கல் தூரம் நடந்து சென்று ரேணுகம்மாவைத் தரிசிக்கின்றனர். அரசாங்கம் இதற்குக் கடும் எதிர்ப்பு தெரிவித்தபோதும் அப்பகுதியில் வாழும் நாட்டுப்புற மக்கள் தங்கள் பழக்கங்களை மாற்றிக்கொள்ள முன்வரவில்லை. கர்நூல் மாவட்டத்தை சுற்றியுள்ள கர்நாடக மாநிலப் பகுதியில் கங்கையம்மன், மாரியம்மன் திருவிழாவின்போது சில விசித்திரமான நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. கிராமத் தேவதைகளை பூசை செய்வதற்காக நதியில் நிர்வாணமாக நீராடிவிட்டு மாதங்கி வேடம் தரிசிப்பர்.

மாதங்கி வேடம் தரித்த பெண் உயர்குல மக்கள் மீது துப்புவாள். மாதங்கி வேடம் தரித்த பெண் துப்பினால் நல்லது என்று உயர்குல பெண்கள் நினைக்கின்றனர்.

அவ்வாறு மாதங்கி வேடம் போட்டவள் துப்பினால் தங்களது உள்ளத்தில் உள்ள அசுத்தங்கள் அகன்றுவிட்டதாக உயர்குல மக்கள் நம்புவர். கர்நாடகாவில் வாழும் சில பிராமணர்கள் மாதங்கியைக் குலதேவதையாக கருதி வழிபடுகின்றனர். திருவிழாவின்போது மாதங்கி வேடம் தரித்தவர் கட்டையால் செய்யப்பட்ட செருப்பால் ரெட்டி குலத்தவர்களை அடிப்பாளாம். பெல்காம் மாவட்டத்தில் சவதத்தி எல்லம்மா கோயிலுக்கு முன்புள்ள மாதங்கி தேவதைக்கு ஒரு ஜோடி செருப்பைக் காணிக்கையாக படைத்து வழிபடும் பழக்கம் இன்றும் வழக்கத்திலுள்ளது.

# சித்தூர் மாவட்டத்தில் கிராம தேவதைகளைப் பூசை செய்யும் முறைகள்

கிராம தேவதைகளின் பூசை முறைகள் பல்வேறு இடங்களில் காலத்திற்கேற்ப மாறுதல் அடைந்துகொண்டிருக்கின்றன. கிராமத்திற்கு வெளியே இருக்கும் தேவதைகளுக்கு திருவிழாவின்போதும், பண்டிகை நாட்கள்போதும் நடைபெறும் பூசை முறைக்கும், ஒவ்வொருநாளும் நடைபெறும் பூசை முறைக்கும் வேறுபாடுகள் காணப்படுகின்றது. இப்பகுதியில் சித்தூர் மாவட்டத்தில் வழிபடும் கிராம தேவதைகளின் பூசை முறைகள் விவரிக்கப்பட்டுள்ளன.

## கங்கையம்மனை ஆராதிக்கும் முறை

சித்தூர் மாவட்டத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் கங்கையம்மனுக்கு விழா எடுக்கின்றனர். கங்கையம்மன் என்பது இயற்கை தேவதை ஆகும். கங்கை என்றால் நீர் என்று பொருள்படும். தண்ணீரை நிலையாக ஓரிடத்தில் நிலைநிறுத்துவதற்கு இயலாது. எனவே கங்கையம்மன் திருவிழாவின்போது தவிர மற்றைய நாட்களில் கங்கையம்மன் கோவில்களில் கங்கையம்மன் விக்கிரகத்தைக் காண முடியாது. மற்றைய நாட்களில் கங்கையம்மனுக்குப் பதிலாக கரகம் அல்லது சூலம் ஆகியவற்றைக் கோயிலில் வைத்த பூசை செய்வர். மஞ்சள், குங்குமம், பூ, கோழி முதலியவற்றைப் படைத்து வணங்குவர். ஆனால் கங்கையம்மன் திருவிழாவின்போது நடைபெறும் பூசை முறைகள் உடலை மெய்சிலிர்க்க வைக்கின்றன.

சாதாரணமாக சித்தூர் மாவட்டத்தில் மார்ச்சு மாதம் முதற்கொண்டு ஜுன் மாதம் வரை கங்கையம்மன் திருவிழா நடைபெறுகிறது. சித்தூர் மாவட்டத்தில் முப்பதுக்கும் மேற்பட்ட கிராமங்களில் ஒரே நாளில் கங்கையம்மன்

திருவிழா நடைபெறுகின்றது. கங்கையம்மன் திருவிழா நடைபெறும் முன் கிராமத்து மக்கள் ஒன்று சேர்ந்து விழாவைக் குறித்துப் பேசுவர். கூட்டத்தின் முடிவில் திருவிழா நடைபெறும் தேதியைக் குறிப்பிடுவர். கங்கை யம்மன் திருவிழா தேதி நிர்ணயிக்கப்பட்டதும் 'சாற்றுதல்' என்ற நிகழ்ச்சியை மேற்கொள்வர். சுற்றுதல் என்றால் அறிவித்தல் என்று பொருள்படும்; அதாவது திருவிழா நடைபெறும் தேதியை அறிவித்தல் என்பதாகும். சாற்றுதல் நிகழ்ச்சி முடிந்தபின்னர் கிராமத்திலுள்ளவர்கள் வேறு கிராமத்திற்குச் செல்லக் கூடாது; அருகிலுள்ள கிராமங் களுக்கு வேலையினிமித்தம் சென்றாலும் மாலைக்குள் திரும்பி வந்துவிட வேண்டும் என்ற நிபந்தனை உண்டு. சாற்றுதல் நடைபெறும் நாளில் 'கரகம்' உண்டாக்கி அதற்கு பூசை செய்து எருமைக்கிடா, ஆடு, கோழி போன்றவற்றை பலியிட்டு இரத்தத்தோடு சோறு கலந்து கிராமத்தைச் சுற்றிலும் வலம் வநது இரைப்பர். இதோடு சாற்றுதல் முடிவடைகின்றது.

கரகம் நிகழ்ச்சி சாதாரணமாக இரவு நேரத்தில் நடை பெறுகின்றது. கரகத்தை நிறுத்துவதற்கு கிராமத்தில் உள்ள கங்கையம்மன் பூசாரி, வண்ணன், தோட்டி, மற்றும் கிராமத்துப் பெரியவர்கள் கலந்து கோயிலுக்கு அருகில் பூசையை நடத்துவிப்பர். பின்னர் அனைவரும் ஒன்று சேர்ந்து கிராமத்தின் மேற்குத் திசையில் உள்ள ஒரு கிணற்றுப்பக்கம் சென்றடைவர். கிணற்றுக் கருகில் பறை, பம்பை போன்றவை முழங்கிக் கொண்டிருக்க பூசாரி பூசை வேலையை செய்து முடிப்பர். அடுப்பில் வைத்துக் காய்ச் சாதப் பானையைக் கொண்டு வந்து அதனை சுத்தம் செய்து அதில் சிறிது தண்ணீரை ஊற்றி ஒரு நாணயம், மஞ்சள், குங்குமம் போன்றவற்றைப் போடுவர். அந்தப் பானையில் வேப்பிலைச் சுள்ளிகளை வைத்து பூக்களால் அலங்கரிப்பர். அதன் பின்னர் அந்த இலைகளின் மீது மஞ்சள், குங்குமம் ஆகியவற்றை தூவுவர்.

கரகத்திற்கு கற்பூரம், ஆரத்தி அடுத்து தேங்காய் உடைப்பர் பின்னர் 'ஆசாதி' என்ற இனத்தவர்கள் கங்கையம்மனைத் துதிப்பார்கள் கங்கையம்மனைத் துதித்துக் கொண்டிருக்கும்போது பூசாரிக்கு ஆவேசம் வருகின்றது. இவ்விதமாக ஆவேசம் வருவதை "பூசாரி உடல் நிறைஞ்சது'' என்றும், "அம்மா வந்தாள்" என்றும் "அம்மா நெறைஞ்சிருக்கா'' என்று சொல்வர். பூசாரிக்கு ஆவேசம் வந்ததும் அவருடைய வாயில் விபூதியைப் போடுவர். பூசாரிக்கு உண்மையாகவே அம்மை நிறைந் துள்ளதா என்பதைத் தெரிந்துக் கொள்ள அவருடையக் கையில் கற்பூரம் கொளுத்துவர். பூசாரி எரிகின்ற கற்பூரத்தை வாயில் போட்டுக் கொண்டு விழுங்கி விடுவர்.

சாட்டையால் தன்னை அடித்துக் கொள்வார். பூசாரி தன்னிடமுள்ளக் கற்பூரத்தை அனைவருக்கும் காட்டி விட்டி விழுங்குவதுண்டு. பூசாரி தன்னைச் சாட்டையில் அடித்துக்கொள்ளும் சமயம் அம்மா! சாந்தம், சாந்தம் என்று கிராமத்துப் பெரியவர்கள் அம்மனை நோக்கி நேர்ந்துக்கொள்வார்கள்; பின்னர் வண்ணானுக்கும், தோட்டிக்கும், கோயில் பூசாரிக்கும் 'கங்கணம்' கட்டு கிறார்கள். பின்னர் முளையிடப்பட்ட நவதானியங்களைப் படைப்பர். முளையிடப்பட்ட நவதானியங்களைத் 'தோட்டி' எடுத்துப் போட்டுக் கொண்டிருக்கும்போது கோவிந்தா! கோவிந்தா? என்று உரத்தக்குரலுடன் அலங்கரிக்கப்பட்ட கரகத்தைப் பூசாரி தலைமீது எடுத்து வைப்பர்.

'ஆசாதி' இனத்தவர்கள் வணங்கும்போது பூசாரி மறுபடியும் ஆவேசம் வருகின்றது பூசாரியின் தலைமீது உள்ள கரகத்தைப் பக்தர்கள் விழாமல் பிடித்துக் கொண் டிருக்கம் பூசாரி ஆவேசத்துடன் அங்கும் இங்கும் துள்ளுவர். 'ஆசாதி' என்பவன் கங்கையம்மனை தியசொற்களைக் கொண்டு வசைவர்.

மேற்குத் திசையில் உள்ளகிணற்றிலிருந்துக் கரகத்தைக் கொண்டு வந்ததனால் கங்கையம்மன் மேற்குத் திசையில் உள்ளகிணற்றில் பிறந்தது என்று நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர். இவ்விதமாகப் பிறந்த இடத்திலிருந்துக் கங்கையம்மனைக் கிராமத்தின் நடுத்தெருவில் நிலைநாட்டுவர். தற்போது நிலைகொண்ட இடம் புகுந்த வீடாகக் கருதப்படுகின்றது, கங்கையம்மன் திருவிழா முடிந்த பின்னர் கங்கையம்மனை (கரகத்தை) எடுத்துக் கொண்டு போய் நீரில் விட்டு விடுவர். அந்த இடம் கங்கையம்மன் விதவைக்கோலம் பூண்ட இடமாகக் கருதப்படுகின்றது. அதற்காகத்தான் கணவனை இழந்தவளை கங்கை பவானிக்குச் சமமானவள் என்பர்.

அது மட்டுமல்லாமல் கணவன் இறந்ததும் மனைவியை நதி, அல்லது கிணற்றுக்கருகில் கொண்டுபோய் அவளது மஞ்சள், குங்குமம் வளையல் போன்றவற்றை அகற்றி நீரில் கலந்து விடுவதும் உண்டு. கங்கையம்மன் பிறந்த வீட்டிலிருந்து அத்தை வீட்டுக்குச் செல்ல பிணக்குக் கொள்கிறாள். என்று கெட்ட வார்த்தைகளைக் கொண்டு திட்டுவர். ஆவேசம் வந்த பூசாரி அடிமேல் அடி வைத்துக் கொண்டு கிணற்றுக் கருகிலிருந்துப் புறப்படுகிறான். இவ்வாறாக வந்து கொண்டிருக்கும் அம்மனுக்கு (கரகம்) கிராமத்து மக்கள் கற்பூரம் கொளுத்தி ஆரத்தி எடுத்து, தேங்காய் உடைத்து எருமைக்கிடா, ஆடு, போன்றவற்றைப் பலியிட்டு வணங்குவர். கிராமத்தவர்கள் பூசைப் பணியை முடித்துக்கொண்டதும் கரகத்தைக் கோயிலில் இறக்கிவைப்பர். கரகத்திற்கு அருகாமையில் முளையிடப்பட்ட நவதானியங்களைக் கொட்டி வைப்பர். பின்னர் பூசாரிக்கு ஆவேசம் முற்றிலும் அகன்று விடுகின்றது[1] இவ்விதமாகக் கொண்டு வந்த கரகத்தை கங்கையம்மனின் உருவமாகக் கருதி வழிபடுகின்றனர்.

இத்தகைய சிறப்பு கரகத்திற்கு எவ்வாறு நேர்ந்தது, என்பதை ஆய்வோம். தண்ணீருக்கு எதிர்கொள்ள

இயலாத சக்தி இருக்கின்றது என்பதை உணர்ந்த ஆதி மனிதன் தண்ணீர் கிடைக்காத நேரத்தில் தண்ணீருர்காக அலைந்து திரிந்திருப்பான் தண்ணீரின்றி விளைச்சல் இல்லை என்பதையும் உணர்ந்தான். ஆதிமனிதனுக்குத் தாகம் ஏற்படும்போது. தண்ணீரைத் தேடி அலைந்தான். தண்ணீரைக்குடித்ததும் அவனுக்குள் ஓர் புத்துணர்ச்சி ஏற்பட்டிருக்கும். அது மட்டுமல்லாமல் மரம் செடி கொடிகள் மழைவந்ததும் புதுப் பொலிவுடன் காணப்படு வதைக்கண்ட ஆதிமனிதன் நீருக்கு ஏதோ ஓர் சக்தி இருப்பதை உணர்ந்துக் கொண்டான். வளர்ந்த நிலையில் ஆதிமனிதர்கள் விவசாயத்தை மேற்கொண்டதும் தண்ணீரின் பால் பக்தி உணர்வு ஏற்பட்டது. அதற்காகத் தான் பானையில் தண்ணீரை ஊற்றி பூசை செய்யும் வழக் கத்தை ஏற்படுத்திக் கொண்டனர். தண்ணீரை தனியாக நிலைநிறுத்தி பூசை மேற்கொள்ள இயலாது எனவேதான் பானையில் தண்ணீரில் ஊற்றி வழிபட்டனர்.

இவ்விதம் செய்ததன் காரணமாய் தண்ணீருடன் பானைக்கும் புனித இடம் (வணக்கத்துக்குரிய) கிடைத்து விட்டது. என்று சொல்லலாம். தண்ணீரைத் தனிப்பட்ட முறையில் வணங்கியதாலும், தண்ணீருக்குப் பல பொருட்களை காட்டிலும் மிகுந்த சக்தி இருப்பதாலும் தண்ணீர் தெய்வம் சச்தி தேவதையாகவும், கங்கையம்ம னாகவும், மாரியம்மனாகவும் உருவெடுத்தது என்று சொல்லலாம். பூமி நன்கு விளைச்சலைத் தரும் பொருட்டு கங்கையம்மனுக்கு நவதானியங்களைப் படைக்கும் வழக்கம் இருந்து வருகிறது, கரகத்திற்கு உள்ள சிறப்பிடம் காரண மாக நாட்டுப்புற மக்களிடத்தில் பலவிதமான நம்பிக்கைகள் தோன்றலாயின, ஏதாவது நற்காரியத்திற்காக வெளியூர் செல்ல நேரிட்டால் புதுப்பானைகள் எதிரில் வந்தால் நன்மைகள் நேரிடும் என்று நாட்டுப்புற மக்கள் நம்பு கின்றனர். அதற்காகத்தான் ஸ்ரீ வெங்கடேஸ்வர சுவாமி யைத் தரிசிக்க வரும் மந்திரிகளுக்கும், அரசியல்வாதி

களுக்கும் பூரணகும்பத்தோடு வரவேற்பு கொடுத்து சிறப்பான முறையில் பூசை நடத்து விக்கின்றனர்.

மேற்கண்ட செய்திகளை வைத்துக் காணும் போது தண்ணீரால் குடத்துக்கு மதிப்பு வந்தது என்று தெளியலாம் தனிப்பட்ட முறையில் குடத்துக்கு மதிப்பு வரவில்லை. என்பது தெளிவாகின்றது. அது மட்டுமல்லாமல் கோயில் கோபுர உச்சியில் பூரணகும்பம் வைப்பதை இன்றும் காணலாம்.

திருமணங்களின் போதும் அலங்கரிக்கப்பட்ட பானைகளைத் தம்பதிகளுக்கு எதிரில் வைத்து வணங்குகின்றனர். அப்பானைகளை 'அரிவேணி' என்றும் 'சாலலங்காரப் பானைகள் என்றும் அழைப்பர். திருமணம் முடிந்த பின்னர் மணப்பெண் பானையில் தண்ணீர் கொண்டு வந்து நவதானியங்களைத் தண்ணீரில் போடுவாள். மனிதன் உயிரோடு இருக்கும்போது மனிதன் பானையின் மேற் பகுதியில் உள்ள துவாரத்தின் வாயிலாக நீரை உட்கொள்கிறான். மனிதன் இறந்த பின்னர் பானையின் அடிப் பகுதியில் துவாரம் போட்டு அதன் வாயிலாக நீரைப் பருகுகிறான் என்று நம்புவர்.

வெள்ளிக்கிழமை, செவ்வாய்க்கிழமை போன்ற நாட்களில் மாலை நேரம் விளக்கேற்றிய பிறகு பானை உடைந்து விட்டால் அபசகுனமாகக் கருதப்படுகிறது. நிலைகொள்ள இயலாதத் தண்ணீரைக் குடம் நிலையாக நிறுத்தியதன் பயனாகப் பானைக்கு முக்கியத்துவம் ஏற்பட்டது. எனவே தான் நீர் நிரம்பிய பானையில் வேப்பிலையை வைத்து வணங்குகின்றனர். சக்தி மிகுந்த தேவதையாகக் கருதி வழிபடுகின்றனர். கிராமத்தில் தொற்றுநோய் பரவிய போதும், மற்றைய தீய சக்திகள் நுழைந்தபோதும் கரகம் எடுக்கும் சடங்குகளை நடத்துகின்றனர்.

இவ்வாறாகச் செய்தால் அம்மையாரின் கோபம் தணிந்து நன்மை அளிக்கிறாள் என்று நம்புகின்றனர். சில சமயங்களில் கரகத்தைக் கிராமத்தின் நடுவில் வைத்து பூசை மேற்கொள்வர். கரகம் வைக்கப்பட்டிருக்கும் பானையில் உள்ள தண்ணீரை; வியாதி உள்ள வீட்டின்மீது தெளிப்பர். இவ்வாறாகச் செய்தால் கிராமத்தில் உள்ள வியாதிகள் அகன்று விடுகின்றன. என நம்புகின்றனர்.

கோயிலில் வைக்கப்பட்டுள்ள கரகத்திற்கு வண்ணான் பூசாரி, தோட்டி ஆகியோர்கள் பூசை செய்வார்கள். பூசை நேரத்தில் மேளவாத்தியங்கள் முழங்கும். இவ்வித மாகக் கிராமத்துப் பெரியவர்கள் நிர்ணயிக்கப்பட்ட தேதி வரை பூசை மேற்கொள்வர். கங்கையம்மன் திருவிழாவின் போது கிராமத்துப் பெண்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து பொங்கல் வைப்பதுண்டு. பின்னர் மாவு விளக்கேற்றி எருமைக்கிடா, ஆடு, கோழி போன்றவற்றைப் பலியிட்டு வணங்குவர். பலியிடப்பட்ட விலங்குகளின் தலையைக் கோயில் பூசாரிக்கும். வண்ணானுக்கும் தோட்டிக்கும் கொடுக்கும் வழக்கம் இன்னும் இருந்து வருகின்றது.

அதன் பின்னர்கள் அல்லது சாராயம் போன்ற வற்றை எடுத்துக்கொண்டு மேளங்கள் முழங்க, வாண வேடிக்கைகள் சிறப்புற ஊர்வலமாகக் கங்கையம்மனின் சன்னதிக்கு கொண்டு வந்து கங்கையம்மனுக்குப் படைப்பர் இம்முறை சில கிராமங்களில் மட்டுமே காணப்படுகின்றது. பின்னர் குயவன் களிமண்ணால் கங்கையம்மனுடைய தலையைச் செய்கிறான். இதன் காரணமாய் கங்கை யம்மனுக்குக் குயவன் இல்லம் தாய்வீடாக விளங்குகின்றது. குயவன் இல்லத்தில் செய்யப்பட்ட ‘கங்கையம்மன் விக் கிரகத்தை வண்ணான் கொண்டு வந்ததால் வண்ணான் கங்கையம்மனின் கணவனாக விளங்குகின்றான். கங்கை யம்மன் சிலையை வண்ணான் தலையின்மீது வைத்துக் கொண்டு ஆவேசம் வந்தவன் போல் ஆடிக்கொண் டிருப்பான். பக்தர்கள் வண்ணான் தலைமீது உள்ள

கங்கையம்மனின் தலையைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்வர். மேள தாளத்துடன் கங்கையம்மனின் தலையை ஊர்வலமாகக் கொண்டு செல்வர். ஊர் முழுவதும் சுற்றிய பின்னர் இறுதியில் சிலையைக் கோயிலில் வைப்பர். பின்னர் கங்கையம்மனுக்கு வழிபாடு செலுத்துகின்றனர்.

பின்னர் கங்கையம்மனுக்கு எருமை, ஆடு கோழி போன்றவற்றைப் பலியிடுவர். பின்னர் கங்கையம்மனைத் தலைமேல் எடுத்துக்கொண்டு இடுப்புக்கு வேப்பிலையைக் கட்டிக்கொண்டு நெற்றியில் குங்குமப் பொட்டு வைத்துக் கொண்டு மேள வாத்தியங்களுடன் ஊர்வலமாகச் செல்வர். பலியிடப்படும் விலங்குகளை ஜமின்தார்கள் பஞ்சாயத்துத் தலைவர், மணியக்காரர் போன்றவர்கள் கொடுப்பார்கள். அதற்குரிய பணத்தை அவர்கள் பெற்றுக் கொள்வதில்லை. முதலில் 'நகரி' எருமைக்கிடாவை வெட்டிப் படைத்தபின்னர் அடுத்ததாக மற்ற கிராமங் களில் பிடித்த எருமைக்கிடாவை வெட்டுகின்றனர்.

பலி இடப்படும் விலங்கை அலங்கரித்தப் பின்னர் வீடு வீடாக இழுத்துச் செல்வர். ஒவ்வொரு வீட்டாரும் அந்த பலி கிடாவுக்குப் பூசைச் செய்வர். ஒவ்வொரு வீட்டாரும் கிடாவுக்கு மஞ்சள் நீர் ஊற்றுவர் அந்த எருமைக்கிடாவின் கால்களுக்கு மஞ்சள் பூசி, குங்குமம் வைத்துக் கற்பூரம் கொளுத்தி ஆரத்தி எடுத்து தேங்காய் உடைத்துப் பூசை செய்து வழிபடுவர்.

இப்படியாகச் செய்வதனை புனிதமாக்குதல் என்று சொல்லலாம். எருமைக்கிடா கிராமத்திலுள்ள ஒவ்வொரு வீட்டிலும் பூசை ஏற்றபின்னர் கங்கையம்மன் நிலை பெற்றிருக்கும் இடத்திற்கருகில் பலிக்கிடாவை இழுத்துச் செல்வர் அங்கே ஒரு அலங்கரிக்கப்பட்ட வடிவக் கொம்பு நடப்பட்டிருக்கும். அந்தக் கொம்பில் கிடாவைக் கட்டியதும் பூசாரி இவ்வாறாகப்பாடுவார்.

''எருமைக்கிடா பலி உனக்கு
ஏற்றுக் கொள்ளும் கங்கா பவானிதாயே
சரணம் அம்மா சரணம் அம்மா ரணவீரகங்கா
சத்தியம் பலிக்குமம்மா தாயே
கருமாரி அம்மாளே தேவியே
கருமேகம் சூழ்ந்துவர தேவியே
கடைக்கண்ணில் பாருமம்மா தாயே''

மேலும் இது போன்ற பொருளுடைய தெலுங்குப் பாட லொன்றும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

வினவே கங்கம்மா தல்லி வினவே—நீக்கு
வெய்யி துன்ன போத்துலு வினவே
செரணம்மா செரணம் கங்கம்மா தல்லி
கரக சமீபமுனா கங்கம்மா தல்லி
கற்பூர தீபமு பெடத்தாமு
பால டெங்காயி பன்னெண்டு மூட்ட
பிய்யம் கும்மா கூட்டு
வலபுல வான தேவா வச்சிபோயே
வான குர்சி போயே கங்கம்மா
நீவு சுகந்தம் கங்கா ரணவீர கங்கா
சுந்தரம் லோனி புட்டினாவம்மா
சுந்தரம்லோனி பெரிகினாவம்மா
தல்லி ரேணுகா மாயம்மா ரேணுகா
நீக்கு ரொம்ம மீத பூல தண்டா ரணவீரகங்கா
நீக்கு முக்குலோ முத்யாலு பேட்டா''

என்பதாகும்.

''கேளம்மா கங்கையம்மன் தாயே; உமக்கு ஆயிரம் எருமைக்கிடாவைப் பலி கொடுக்கின்றோம்; சரணம் அம்மா சரணம். கரகத்தின் அருகில் தாயே கற்பூர தீபம் ஏற்றுகிறோம்; தேங்காய் உடைக்கின்றோம்; பன்னிரண்டு மூட்டை அரிசி சோறு கும்பம் போடுகிறோம்; அழகான

மழை தேவதையே வந்து போவாயோ; மழையைப் பொழிவித்துச் செல்வாயோ; பூரண சந்திரத்தில் பிறந்த தாயே, உமக்கு முத்துக்களால் செய்யப்பட்ட மூக்குத்தி தாயே'' என்பது தெலுங்குப்பாடலுங்குரிய பொருளாகும்.

தமிழ்ப்பாடலில் பலியிடும் விலங்கான எருமைக் கிடாவைப் பற்றிய குறிப்புக் காணப்படுவது போன்று தெலுங்குப் பாடலிலும் காணப்படுகின்றது. இரண்டு பாடல்களிலும் மழையைப் பொழிவிக்கும் தேவதையாக கங்கையம்மன் விளங்குகின்றாள். இரண்டு பாடல்களும் வேண்டுதல் முறையாகவே அமையப்பட்டுள்ளன.

இவ்வாறாகப் பாடப்பட்டு துதி செலுத்தியதும் பலி கொடுக்கும் எருமைக் கிடாவை y வடிவக் கொம்பில் கட்டி அதன்மீது மஞ்சள் நீரைத் தெளிப்பர். இவ்வாறாக செய்வ தனால் தலைப்பகுதியில் உள்ள நரம்புகள் இறுக்கமடை கின்றன. சூரிய உதயம் ஆகும் முன் தோட்டி என்பவன் பெரிய கத்தியைக் கொண்டு வந்து எருமைக்கிடாவின் கழுத்தின்மீது ஓங்கி மூன்று முறை கில்லோல்லோ, கிலோ... லோ...லோ...என்று கத்துவான். மூன்றாவது முறை வெட்டுவான். இவ்வாறாக உரத்த குரலில் சத்தம் போடுவதால் வெட்டுபவர்களுக்குப் புதிய சக்தியும், உணர்வும் ஏற்படுகின்றது; அச்சம் உடலை விட்டு நீங்கி விடுகின்றது என்று சொல்லலாம்.

மூன்று வெட்டுகளுக்கு மேல் எருமைக்கிடாவை வெட்டக் கூடாது என்ற விதிமுறை உண்டு. மூன்றாவது முறை வெட்டியதும் தலையும், உடலும் வேறாகவேண்டும் என்ற நியதி உண்டு. பொதுவாக எருமைக் கிடாவின் கழுத்துப் பகுதி கனமாக இருக்கும். பல முறை கழுத்தை வெட்டுவதால் எருமைக்கிடா சித்ரவதைக்குள்ளாகின்றது. அவைகள் சித்ரவதைப்படுவதைக் கண்ட மனிதனுக்கு பாவம் செய்து விட்டோமோ என்ற அச்சம் ஏற்படுகின்றது. எருமையின் தலை துண்டிக்கப்பட்டதும் எருமையின்மீது

தண்ணீரை ஊற்றுவர். அடுத்த கிராமத்தவர்கள் இரத்தத்தை திருடிக்கொண்டு சென்றுவிட்டால் பலியின் பிரதி பலன் அவர்களைச் சென்றடையும் என நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர். வெட்டிய தலைகளை எல்லாம் கங்கையம்மன் விக்கிரகத்திற்கு எதிரில் வைப்பர். எருமைக் கிடாவின் முன்னங்காலில் (வலது) ஒன்றை வெட்டி வாயில் வைப்பர். எருமைக்கிடாவின் வாய் பகுதியில் உள்ள தோலை அறுத்துக் கண்களின் மேற் பகுதியில் வைப்பர். எருமைக்கிடாவின் தலைமீது தீபம் ஏற்றுவர்.

சிலர் உறங்கும் போதும் கண்கள் திறந்து கொண்டு இருக்கும். வாய் மூடப்பட்டிருக்கும், சிலருடைய வாயும் தூக்கத்தின் போதும் திறந்திருக்கும். சிலர் தூங்கும் போது வாயும், கண்ணும் இரண்டும் மூடியிருக்கும்; மனிதன் இறந்து விட்டான் என்றால் அதற்கு அடையாளமாக கண்கள் மூடப்பட்டிருக்கவேண்டும். இறந்தவனுடைய கண்கள் திறந்து இருந்தால் பார்ப்பதற்கு பயமாக இருக்கும். வாய்திறந்து இருந்தால் வாயில் வெற்றிலைப் பாக்கு நறுக்கி வைப்பர். இறந்தவர்களின் ஆவியைப் பிடிக்க வந்தவர்கள் பிணத்தைச் சுற்றிச் சுற்றி வருவர். அவர்களால் பிணத்துக்கருகில் இருப்பவர்களுக்கு ஆபத்து நேரிடும் என பிணத்துக்கருகில் விளக்கு வைப்பர். இருட்டில் பிணத்துக்கருகில் இருக்க அச்சம் கொள்வது இயல்புதான், இத்தகைய அடிப்படையில் தோன்றிய நிகழ்ச்சி தான் இன்று எருமைக் கிடாவை வெட்டியதும் தலையின் அருகில் விளக்கேற்றி வைக்கும் பழக்கம் இன்னும் இருந்து வருகின்றது.

மேலும் வயிற்றுப்பகுதியில் உள்ள தோலை அறுத்து எடுத்து கண்களை மூடுவதுண்டு. வாயில் மற்ற பொருட்களை வைத்தால் நசுங்கிப் போய்விடும் என்ற உத்தேசத்தால் எருமைக்கிடாவின் வலதுக் காலை வெட்டி வாயில் வைப்பர். வெட்டுப்பட்ட இடத்தில் பேய்கள் நடமாடும் எனக் கருதி தலைக்கருகில் தீபம் ஏற்றி வைப்பர். தோட்டி

என்பவன் எருமை மாட்டின் வயிற்றைக் கிழித்துக் குடலை வெளியே எடுத்து கழுத்தில் மாலை போல் சூட்டிக் கொள்ளுவர். குடலில் சிறிது அறுத்து எடுத்துக் கையில் கங்கணம் கட்டிக்கொள்வர்.

பின்னர் சூல் கொண்டுள்ள செம்மறி ஆட்டை இரண்டாக வெட்டுவர் வெட்டப்பட்ட ஆடு தோட்டிக்கும், வண்ணானுக்கும் சொந்தம். சில சமயங்களில் செம்மறி ஆட்டை வெட்டுவதற்குப் பதிலாக 'காவு' கொடுப்பதுண்டு ஆசாதி என்பவன் செம்மறி ஆட்டைக் கழுத்தின் மீது போட்டுக் கொண்டு வாயில் கழுத்தைக் கடித்து உயிரை வாங்குவதுண்டு, இவ்வாறாகக் கடிக்கும்போது கால்களையும், வாயையும், கெட்டியாகப் பிடித்துக் கொள்வர். பின்னர் கையால் வயிற்றைக் கிழித்துக் குடலை வெளியே எடுத்துக் கழுத்தில் மாலை போல் போட்டுக் கொள்வர். பின்னர் பலியிட்டவனுடையத் தலையில் இரண்டு அல்லது மூன்று குடம் தண்ணீரைக் கொட்டுவர். அவனுக்கு ஆவேசம் வரும். உடனே அவனதுக் கையில் கற்பூரம் வைத்துக் கொளுத்துவர். அவர் அதனை வாயில் போட்டுக் கொண்டு விழுங்கி விடுவர். வேப்பிலையைக் கொத்துக் கொத்தாகப் பறித்து தின்பர். பம்பை, இருடி, போன்ற வாத்தியங்களை முழக்குபவர்கள் கிராமத்தில் உள்ள வியாதிக்கு காரணம் என்ன வினவுவர். அதற்குரிய பதிலையும், அம்மன் கூறுவாள். கிராமத்தவர்கள் அடிபணியும், வேண்டுதலையும், நேர்த்திக் கடனையும் ஏற்கும். படியும் அம்மனைக் கேட்பர்,

இது போன்ற நிகழ்ச்சிகள் அனைத்தும் முடிந்து விட்டதும் கோழி அல்லது எலுமிச்சை போன்றவற்றைப் பலியிடுவது உண்டு. கிராமத்தைச் சுற்றி மூன்று முறை வலம் வந்ததும் கங்கையம்மன் கோயிலைச் சென்று சேர்வதுண்டு கங்கையம்மன் கோயிலில் வழிபாடுகள் முடிந்து விட்டதும் தலைகள் உள்ள முறத்தைக் கையில் ஏந்திய வண்ணம் கிராமத்து எல்லையைத் தாண்டுபடிச் செய்வர். இத்தனை

நிகழ்ச்சிகளும் முடிவதற்குள் சூரியன் உதயம் ஆகிறது. அது வரை ஏற்றி வைத்த விளக்குகள் எரிந்துக் கொண்டே இருக்க வேண்டும். விளக்கு அணைந்து விட்டால் பலி கொடுத்ததின் பலன் ஏற்படுவதில்லை. என நம்புவர் இறுதியில் தோட்டி என்பவன் கிராமத்துப் பெரியவர்களை அழைத்து வந்து எறிகின்ற தீபத்தைக் காண்பிப்பான்.

இவ்விதமாகச் செய்வதால் வெட்டப்பட்டத் தலைக் கருகில் இருந்த தீய சக்திகள் கிராமத்து எல்லையைக் கடந்து விட்டன. என்று நம்புகிறார்கள். சில கிராமங் களில் எருமைக்கிடாவின் தலையைத் தோட்டி என்பவர் எடுத்துக் கொள்வர். சில கிராமங்களில் தலையைக் கிணற்றில் போட்டுவிடுவதும் உண்டு.

மேற்கண்ட நிகழ்ச்சிகள் அனைத்தும் முடிந்ததும் ''காவுசோறு தின்னும்.' நிகழ்ச்சிகள் ஆரம்பமாகின்றது. ஆசாதி என்பவர் ஸ்நானம் செய்து காவு சோற்றைக் கொண்டு வந்து அம்மனை ஏற்கும்படி வேண்டுவதுண்டு. கிராமத்துப் பெண்கள் சோறு சமைத்து அதில் தயிர், நெய் போன்றவற்றைப் படைத்து வணங்குவதுண்டு. பின்னர் அந்த சோறு உருண்டைக்கு மஞ்சள், குங்குமம் போன்ற வற்றை வைப்பதுண்டு. ஆசாதி என்பவர் சோறு உருண்டை யைக் கையில் தொடாமல் உண்ண வேண்டும். இந்த நிகழ்ச்சிகள் முடிந்த பின்னர் அம்மனுக்குக் கற்பூரம் கொளுத்தி தேங்காய் உடைத்து வணங்குவர். வருடம் மூன்று முறை தவறாது நல்ல மழை பொழிய வேண்டும் என்றும் தங்களுடையப் பிள்ளைகளுக்குத் தொற்று நோய் வரக்கூடாது என்றும் அம்மனைக் கேட்டுக் கொள்வர்.

இவ்விதமாகக் கிராமத்தவர்கள் அன்றைய நாட்சன் முழுவதும் கங்கையம்மனைப் பூசை செய்வர். மறுநாள் காலையிலிருந்து நீரில் கலக்கும் நிகழ்ச்சி ஆரம்பமாகின்றது பூசாரி கரகத்தையும் வண்ணான் கரகத்தையும் எடுத்துக் கொண்டு நீரண்டையை நோக்கிப் புறப்படுவர். தோட்டி

என்பவர் முளையிடப் பட்ட நவதானியங்களை எடுத்துக் கொள்வான். நெடுகிலும் கங்கையம்மன் பூசையை ஏற்றுக் கொண்ட பின்னர் கிராமத்திற்குக் கிழக்குத் திசையில் உள்ளக் கிணற்றைச் சேர்வர். கரகத்தையும், கங்கை அம்மனைச் முளையிடப்பட்ட தானியங்களையும் தண்ணீரில் கலந்து விடுவர் பூசாரி, வண்ணான், தோட்டி ஆகியோர் ஸ்நானம் செய்து பூசைக் காரியங்களில் தவறு மன்னிக்கும்படி வேண்டுவர். இதோடு கங்கையம்மன் திருவிழா முடிவு பெறுகின்றது.

இவ்விதமாகக் கங்கையம்மனை நடுவீதியில் நிலை நிறுத்தி பூசை மேற்கொள்வதால் "நடுவீதி கங்கையம்மன் என்று அழைப்பர்.

## பெத்தபுலி கங்கையம்மனை பூசை செய்யும் முறைகள்

குப்பம் வட்டத்தில் மே மாதம் கங்கையம்மன் திருவிழா நடைபெறுகின்றது. முதல் நாளில் கரகம் இரண்டாவது நாளில் திருவிழா, மூன்றாவது நாளில் தீ மிதித்தல் போன்ற நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றது. குப்பத்தில் உள்ள பெத்தபுலி கங்கையம்மன் என்ற கிராம தேவதைக்கு கரகம், தீ மிதித்தல் போன்ற நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றது.

குப்பத்தில் பெத்தபுலி கங்கையம்மன் திருவிழாவின் போது கரகம் நடைபெறும் நாளில் மாலை ஆறு மணிக்கு தீ மிதிக்கும் பக்தர்கள் கோயில் பூசாரி கோயிலுக்கருகில் உள்ள கிணற்றுப் பக்கத்தை அடைவார்கள். அங்கே கோயில் பூசாரிக்கு ஸ்நானம் செய்வித்து மஞ்சள் துணியால் பெண் வேடம் போடுகின்றனர். கோயில் பூசாரிக்கு தீபம் ஏற்று ஆரத்தி எடுப்பர். தீ மிதிக்கும் பக்தர்கள் கிணற்றில்

ஸ்நானம் செய்த பிறகு தர்மகர்த்தாக்கள், பக்தர்கள் போன்றவர்கள் மேள முழக்கங்களுடன் கோயிலுக்கருகில் சென்று சேர்வர். கிணற்றுக்கருகில் உள்ள பெத்தபுலி கங்கையம்மன் சிலைக்கு கோயில் தர்மகர்த்தா மஞ்சள், பூசி குங்குமம் வைத்து தேங்காய் உடைத்து பூசை செய்வர்.

மறுபடியும் புதுப்பானையைக் கொண்டுவந்து அதில் நீரை ஊற்றுவர். நீரில் ஒரு நாணயத்தையும்; மஞ்சள் குங்குமம் போன்றவற்றையும் போடுவர். குடத்தில் வேப்பிலை குச்சிகளை நாட்டி, குடத்தை வேப்பிலை களாலும், மல்லிகைப் பூக்களாலும் அலங்கரிப்பர். அவ்வித மாக அலங்கரித்தப் பிறகு கரகத்துக்கு அருகில் பூசாரி அமர்ந்து இருப்பர். பூசாரி கரகத்துக்கு அருகில் உள்ள நேரத்தில் பந்தல்போல் ஆடையை மேல் நோக்கிப் பற்றிக் கொள்வர். கரகத்திற்கு எதிரில் கிழக்குப் புறம் மேள வாத்தியங்கள், மேளங்கள் போன்றவற்றை வைப்பர். கோயிலுக்குச் சம்பந்தப்பட்ட மற்றொரு பூசாரி பூசையை ஆரம்பித்து வைப்பர்.

முதலில் கரகத்திற்கு மஞ்சள், குங்குமம் வைத்து தேங்காய் உடைத்து கற்பூரத்தில் ஆரத்தி எடுப்பர். மேள வாத்தியங்களுக்கும் மற்றும் உள்ள இசைக் கருவிகளுக்கும் இதுபோலவே பூசை நடைபெறும். பூசைக்குப் பயன்படுத்திய தண்ணீரை தீ மிதிக்கும் பக்தர்கள் மேல் தெளிப்பர். பக்தர்கள் அனைவரும் கோவிந்தா கோவிந்தா என உரத்தக் குரலுடன் சத்தம் போட்டுக் கொண்டு கோயில் பூசாரியின் தலையில் கரகத்தை வைப்பர். கோயில் பூசாரித் தலையில் கரகத்தை எடுத்துக்கொண்டு வலது கையில் கத்தியும், இடது கையில் தாங்கி ஆகியவற்றைப் பிடித்துக்கொண்டு நடனம் ஆடியவண்ணம் பெத்தபுலி கங்கையம்மன்கோயிலை அடைந்து மூன்று முறை வணங்குவான். இவரைப் போலவே பக்தர்களும், மற்றவர்களும் மேளங்களை முழங்கச் செய்வர். பூசாரிக்கு ஆரத்தி எடுப்பர். ஆரத்தி எடுக்கும்போது தலை

மேல் கரகத்தை வைத்திருப்பவருக்கு ஆவேசம் வருகின்றது. பக்தர்கள் கோவிந்தா கோவிந்தா! என்று கூக்குரலிட்டுக் கொண்டிருக்கையில் பெத்தபுலி கங்கையம்மன் விக்கிரகத்தைச் சில பக்தர்கள் எடுத்துக் கொள்வர்.

இவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கோயிலுக்கு அருகில் உள்ள 'அக்கினி குண்டம்' ஏற்படுத்திய இடத்திற்கு சென்றடைவர். அக்கினி குண்டம் சுமார் இருபது அடி நீளம் இருக்கும்; பதினைந்து அடி அகலம் இருக்கும் ஆழம் இரண்டு அடி இருக்கும். பக்தர்கள் நெருப்புக் கனலாக இருக்கும் போது உப்பு தெளிப்பர். உப்பை நெருப்பின் மீது தெளித்ததும் கிட்டா, பட்டா, என்ற சத்தத்துடன் வெடித்துச் சிதறும்.

அக்கினி குண்டத்தில் நெருப்பு ஆறு அடி வரை வியாபித்து இருக்கும். கரகம் அக்கினிக் குண்டத்தைச் சென்றடையும்முன் உப்பு வீசுவதை நிறுத்தி விடுவர். பின்னர் ஆசாதி என்பவர் அக்கினிக் குண்டத்தைப் பூசை செய்வர். அக்கினிக் குண்டத்தின் அக்கினி மூலையில் வாழைச் செடியை நட்டு மஞ்சள் குங்குமம் வைத்து தேங்காய் உடைத்து பூசை செய்வர். அக்கினி குண்டத்தின் நான்கு மூலைகளிலும் நான்கு பொங்கல் சோறு உருண்டையை வைப்பர். அந்த சோற்றின் மேல் மஞ்சள் தூள் தூவி, குங்குமம் வைத்து ஊதுபத்தியைக் கொளுத்தி வைப்பர்.

அதன்பின்னர் அக்கினிக் குண்டத்திற்கு ஆரத்தி எடுத்து வணங்குவர். அக்கினி தேவதையை மனதில் நினைத்துக் கொண்டு கரகத்தை தலையின்மீது வைத்துக்கொண்டுள்ளவரின் சேலையின் முந்தானையில் நெருப்பை மூட்டிக் கட்டுவர். இதனையே "நெருப்பை ஒடி பால் கட்டுதல்" என்பர். முந்தானை பற்றி எரிவதும், எரியாததையும் தெரிந்துக்கொண்டு நெருப்பின்மீது பூவை வைத்து மூட்டையாகக் கட்டுவர். உடனே ஆசாதி என்பவன் முதலில்

அக்கினி குண்டத்தில் இறங்கி ஓடுவான். அவனைப் பின் தொடர்ந்து மற்ற பக்தர்கள் அக்கினிக் குண்டத்தில் இறங்குவர். அவர்களுடன் மற்ற பக்தர்களும், விக்கிரகங் களை சுமக்கும் பக்தர்களும், கங்கணம் கட்டிக்கொண்டிருக் கும் பக்தர்களும் அக்கினிக் குண்டத்தில் இறங்கி ஓடுவர்.

இவ்விதமாகக் கிழக்கிலிருந்து மேற்கு வரை மூன்று முறை அக்கினிக் குண்டத்தில் இறங்கி ஓடியதும் கரகத்தை எடுத்து வைத்திருக்கும் நபருக்கு ஆவேசம் நின்று விடுகிறது. 'ஆசாதி' என்பவர் கற்பூர ஆரத்தி எடுத்து அக்கினிக் குண்டத்தில் வீசி எறிவர். இதோடு அக்கினிக் குண்டம் மிதிக்கும் நிகழ்ச்சி முடிவடைகின்றது. குப்பத்தில் நடை பெறும் தீ மிதித்தல் நிகழ்ச்சியில் பெண்கள் கூட பங்கேற் கின்றனர். அக்கினிக் குண்டம் தீ மிதித்தல் நிகழ்ச்சிகளில் எத்தனை தவறுகள் நடந்தாலும் நாட்டுப்புற மக்கள் அதனை பொருட்படுத்துவது இல்லை.

கரகம் எடுத்துக் கொண்டிருப்பவர், மற்றும் சில பக்தர்கள் மிதித்து விட்டதும் இறைவன் மீது நம்பிக்கை ஏற் படுகின்றது அது மட்டுமல்லாமல் தீ மிதித்தவர்கள் புனித மடைந்துவிட்டதாக கருதுகின்றனர். சீதை இராவணனால் கொண்டு சென்ற பின்பு மீண்டும் இராமனிடம் வந்ததும் தான் கற்புடையவள் என்பதை நிரூபித்துக் காட்ட தீக்குளித்தாள் என்று இராமாயணம் கூறுகின்றது அது போலவே பாண்டவர்கள் அஞ்ஞான வாசம் முடித்தபிறகு திரௌபதை தீ மிதித்து தனது கற்பை நிரூபிக்கின்றாள் என்று மகாபாரதம் கூறுகின்றது.

இவ்விதமாக புராணங்களில் கூறப்பட்ட தீ மிதித்தல் நிகழ்ச்சி நாட்டுப்புற மக்களின் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது என்று சொல்லலாம் இத்தகைய பழக்க வழக்கும் திருவிழாக்களின் போது இன்னும் கடைபிடிக்கப் பட்டு வருகின்றது.

தீ மிதிக்கும் நிகழ்ச்சி முடிவு பெற்றதும் கரக உற்சவம் ஆரம்பமாகின்றது. கரகத்தைத் தலையில் வைத்திருபபவ இரண்டுக் கைகளிலும் உள்ளக் கத்தியைர் சுழற்றிக் கொண்டும் நடனமாடிக் கொண்டும் கிராமத்தை வலம் வருவர், அவருடன் மேள வாத்தியங்களும் இசைக் கருவி களும் செல்லும் கரகம் ஒவ்வொரு வீட்டிலும் பூசையை ஏற்றுக் கொண்டு காலை ஆறு மணியளவில் கங்கையம்மன் கோயிலைச் சென்றடையும் கரகத்தை வைப்பதற்கு என்று சிறப்பாக அமைக்கப்பட்டிருக்கும் மேடையில் கரகத்தை நிலை நிறுத்துவர்.

தேவஸ்தானம் மூலமாக பலி கொடுப்பது முடிந்தவுடன் மற்ற பக்தர்கள் பலி கொடுப்பதை ஆரம்பிப்பார்கள். பலி கொடுக்கும்முன் லிலங்கின் மீது மஞ்சள் நீரைத் தெளிப்பர். பின்னர் கிடாவை நிற்க வைத்துக் கத்தியை எடுத்து இரண்டு முறை கழுத்தை நோக்கி ஓங்கி மூன்றாவது முறை வெட்டுவர். உடனே பலியிடப்பட்ட விலங்கின் மீது தண்ணீரை ஊற்றுவர் அதன் பயனாக இரத்தம் தண்ணீ ருடன் கலந்து இரத்த வெள்ளமாக ஓடும். இந்த நிகழ்ச்சி முடிவுற்றதும் அருகில் உள்ள மற்ற கிராமத்துப் பக்தர்கள் பெத்தபுலி கங்கையம்மனை வழிபட்டுக் காணிக்கைச் செலுத்துவர் மறுநாள் காலையில் கங்கையம்மன் விக்கிரத்தைக் தண்ணீரில் கலந்து விடுவர்.

## திருப்பதி கங்கையம்மன் பூசை முறைகள்

திருப்பதி க்ங்கையம்மனை திருவிழாக் காலத்தில் மட்டு மல்லாது மற்றைய நாட்களிலும் ஆராதித்து வழிபடுவர். நேர்த்திக் கடன் உள்ள பக்தர்கள் ஆடு, கோழி போன்றவை களைப் பலியிட்டு வணங்குவர் சித்தூர் மாவட்டத்தில் நடைபெறும் எல்லா கங்கையம்மன் திருவிழாவைக் காட்டி லும் திருப்பதியில் நடைபெறும் கங்கையம்மன் திருவிழா

மிகவும் சிறப்பாக நடைபெறுகின்றது. மற்ற இடங்களில் எருமைக் கிடாவைப் பலி கொடுப்பது போல திருப்பதி கங்கையம்மன் திருவிழாவில் பலி கொடுப்பது இல்லை சில வருடங்களுக்கு முன்பு கங்கையம்மன் திருவிழாவில் எருமைக் கிடாவைப் பலி கொடுப்பதற்கு அரசாங்கம் தடைவிதித்தது.

திருப்பதி கங்கையம்மன் திருவிழாவின் போது எட்டு நாட்களுக்குப் பூசை செய்வர். முதல் நாள் காலையில் முதலியார் வகுப்பைச் சார்ந்தவர்கள் கரகம் எடுப்பர் திருப்பதி கங்கையம்மன் கதை முறைப்படி இவர்கள் அனாதையாக கங்கையம்மனை வழிபட்டு வருவதை இன்றும் காணலாம். இரண்டாவது நாளில் வேண்டுதல் செய்யும் பக்தர்கள் பைராகி வேடம் தரிப்பதுண்டு. வேடம் போடுபவர்கள் முதலில் 'வேஷாலம்மன்' என்ற தேவதையை வணங்கி விட்டுப் பின்னர் கங்கையம்மனை தரிசிப்பர்.

அதன் பின்னர் பட்டணத்தில் உள்ள மற்ற கிராம தேவதைகளைத் தரிசித்து இறுதியாக வேடத்தைக் கலைத்து விடுவர். இவ்விதமாக வேடம் தரிசித்துக் கங்கையம்மனை வழிபட்டால் திருப்தியடைகிறார் என்று நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர், வேஷாலம்மா' கோயில் உள்ள வீதிக்கு வேஷாலம்மா வீதி என்று பெயரிப் பட்டுள்ளது, மூன்றாவது நாள் பண்டரி வேடம். நான்காவது நாள் தோட்டி வேடம், ஐந்தாவதுநாள் கோயதுரை வேடம் ஆறாவது நாள் மாதங்கி வேடம் போடுவர்,

மாதங்கி வேடம் போட்டிருப்பவர் கத்தியால் தனது நாக்கைக் குத்திக் கொள்வர், ஆனால் அவருக்கு வலி ஏற்படுவதில்லை என்று சொல்வர் மாதங்கி வேடத்தை முதலியார் இனத்தைச் சார்ந்தவர்கள் மட்டுமே தரிக்க | வேண்டும், ஏழாவது நாளில் வாலிபர்கள் பெண்வேடம் போடுகின்றார்கள் அன்று மாலையில முதலியார் வகுப்பைச் சார்ந்தவர்கள் இரண்டு பேர் சுண்ணாம்புச் சட்டி வேடம் போடு

வார்கள், சுண்ணாம்புச் சட்டி வேடம் போட்டவர்கள் பின்னர் அவர்கள் வேஷாலம்மன் கோயிலை அடைவர் சுண்ணாம்புச்சட்டி வேடம் போட்டவர்களைப் பார்ப்ப தற்காக கோயிலருகில் ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருப்பர், முதலில் சுண்ணாம்புச் சட்டியின் அடிப் பாகத்தில் துளையிட்டு முதலியார் இனத்தைச் சார்ந்தவர் களின் தலை மீது வைப்பர், சட்டியின் துளையின் வாயிலாக தலை முடியை இழுத்து கட்டி கீழே விழாதுவாறு இழுத்துக் கட்டுவர்,

பின்னர் சட்டியை மலர்களால் அலங்கரித்து: வேஷாலம்மன் கோயிலில் ஆரத்தி எடுத்துக்கொண்டு, ஒவ்வொரு வீட்டுக்கு முன்பும் சென்று பூசையை ஏற்பர். இவ்வாறாக சுண்ணாம்பு சட்டி வேடம் தரித்து பெண் உருவத்தில் வந்த முதலியார் இனத்தவரை கங்கையம்மன் எனக்கருதி சட்டியில் பணமோ, பொருளோ, நகையோ போடுவதுண்டு பணம், பொருள் போன்றவற்றைச் சுண்ணாம்புச் சட்டியில் போட்டால் நன்மை பயக்கும் என்று நாட்டுப்புற மக்கள் நம்புவர். எனவே சுண்ணாம்புச் சட்டியில் பணம் போடுபவர்கள் போடும்போதே கோரிக்கை களை மனதில் எண்ணியே போடுவர்.

இவ்விதமாக முதலியார் இனத்தைச் சார்ந்த மக்கள் வேடம் தரித்துக் கொண்டுக் காணிக்கைச் சேகரிப்பதுண்டு. இதர கிராம தேவதைகளின் கோயிலைத் தரிசித்தவுடன் வேஷாலம்மா கோயிலுக்கு முன்பு வந்து வேடத்தைக் கலைத்து விடுவர். மறுநாள் காலை 'சப்ராலு' வேடம் தரிசிப்பர். 'சப்ராலு' என்றால் கோபுர வடிவில் அமைக்கப் பட்டு அலங்கரிக்கப்பட்ட தேர் போன்றதாகும். இதனை ஆத்மஹிம்சை என்ற பிரிவின்கீழ் கொண்டு வருவர். தீராத வியாதிபட்டவர்கள் தாம் நோயிலிருந்து விடுபட்டுவிட்டால் 'சப்ராலு' வேடம் தரிசிப்பதாக நேர்ந்துக் கொள்வர்.

காலையில் எழுந்ததும் குளித்துவிட்டு 'சப்ரால்' கட்டப் படும் இடத்தைச் சென்றடைவர். 'சப்ரால்' கட்டிவிப்ப

வர்கள் பக்தர்களின் இடுப்புக்கருகில் சப்ராலைக் கொண்டு வந்து வைத்து ஊசியில் உடலில் துளையிட்டு நூலை துளையின் வாயிலாக இழுத்தும், மற்றொரு துளையில் மூங்கில் குச்சியைக் குத்தியும், மூங்கிலால் செய்யப்பட்ட 'சப்ரால்' என்ற அலங்கரிக்கப்பட்டக் கோபுரத்தை இடுப்புடனும் சேர்த்துக் கட்டுவர்.

இவ்வாறாக மூங்கிலால் செய்யப்பட்டதும் அலங்கரிக்கப் பட்டதுமான கோபுரத்தை 'சப்ராலு' எடுப்பது என்று சொல்வர். சப்ரால் என்பது தெலுங்குச் சொல் ஆகும். இவர்கள் முதன்முதலில் வேஷாலம்மன் கோயிலையும், அதன்பின்னர் இதர கோயில்களையும் அடைந்து தரிசித்து வேண்டுதல்களை நிவர்த்தி செய்துக் கொள்வர். அன்று மாலையில் ''சப்ரால்'' ஐ விலக்கி விடுவர். இதே விதமாக வேதமூர் என்ற கிராமத்தில் இதேபோன்று ஆத்மஹிம்சை என்ற பெயரில் கிராமதேவதைகளுக்குப் பூசை மேற்கொள் வதைக் காணலாம். யாதமரியில் மூங்கில் குச்சிகளுக்குப் பதிலாக எலுமிச்சைப் பழத்தை உடல் முழுவதும் தைத்துக் கொள்கின்றனர்.

ஏழாவது நாள் இரவு களிமண்ணால் கங்கையம்மன் உருவத்தைச் செய்து கோயிலுக்கு முன்பு நிலைநிறுத்துவர் வேப்பம் குச்சிகளை நாட்டி அதன்மீது வைக்கோல் புரியைச் சுற்றி அதன் மீது இறுதியாகக் களிமண்ணை பூசி கங்கையம்மன் வடிவத்தை அமைப்பர். மறுநாள் காலை ஐந்து மணியளவில் முதலியார் வகுப்பைச் சார்ந்தவர்கள் 'பேரண்டு' வேடம் தரித்துக் கொண்டு கங்கையம்மனுக்கு ஆரத்தி எடுத்து திருஷ்டிக் கழிப்பர். இந்த திருஷ்டிக்கு அதிக முக்கியத்துவம் உண்டு. திருஷ்டிக் கழித்த பின்னர் கங்கையம்மனுக்கு எதிரில் உள்ள திரையை விலக்குவர். திரையை விளக்கியதும் கங்கையம்மனின் வலது கன்னத்தை வெட்டுவர். அவ்வாறு கன்னத்தை வெட்டாவிட்டால் கங்கையம்மனின் பார்வை எவ்வளவு தூரம் வரை வியாபித்துள்ளதோ அவ்வளவு தூரம் எரிந்து சாம்பலாகிவிடுகின்றது என்று நம்புகின்றனர்.

திரையை விலக்கிய நேரத்தில் கர்ப்பவதியான பெண்கள் கங்கையம்மனுக்கு எதிரில் இருக்கக் கூடாது என்பர். பக்தர்கள் கங்கையம்மனை வழிபட்டதும் ஜனங்கள் ஒருவர் பின் ஒருவராக முண்டியடித்துக் கொண்டு கங்கையம்மனை நோக்கிச் செல்வர். இறுதியாக கங்கையம்மன் உருவத்தைக் கலைத்து விட்டுக் களிமண்ணில் சிறிதளவைத் தங்கள் வீடுகளுக்குக் கொண்டு செல்வதுண்டு.

கங்கையம்மனின் களிமண்ணை தம் வீடுகளில் வைத்திருந்தால் செல்வம் கொழிக்கும் என்றும், வியாதிகள் வருவதில்லை என்றும் நம்புகின்றனர். அதன் பின்னர் பக்தக்கள் பொங்கலிட்டு சோற்றைப் படைத்து வழிபடுவர். அதன் பின்னர் ஆடு, கோழி போன்றவற்றைக் கங்கையம்மனுக்குப் பலி இடுவர். இதோடு கங்கையம்மன் திருவிழா முடிவடைகின்றது.

## சுகுட்டூறு கங்கையம்மன் பூசை முறைகள்

புங்கனூரில் நிலை கொண்டிருக்கும் சுகுட்டூறு கங்கையம்மனுக்கு ஆண்டு தோறும் விழா எடுத்துப் பூசை மேற்கொள்வதுண்டு. திருவிழாவின் போது பக்தர்கள் அனைவரும் ஒன்று கூடி கரகம் எடுத்து வழிபடுவர். ஜமீன்தார்களின் மேற்பார்வையில் இருக்கும் பித்தளையினால் செய்யப்பட்ட கங்கையம்மன் தலையை வீதி வீதியாக ஊர்வலமாக எடுத்துச் செல்வதுண்டு.

சுகுட்டூறு கங்கையம்மன் கோயில் பூமிக்கு ஐந்து அடி ஆழத்தில் இருக்கும் கங்கையம்மனின் பார்வை கிராமத்தின் மீது படாதவாறு கோயிலைப் பூமிக்கு அடியில் அமைத்திருப்பதாக மக்கள் கருதுகின்றனர். கங்கையம்மன் திருவிழாவின்போது சுமார் பத்து எருமைக்கிடா, ஆயிரம் ஆட்டுக்கிடா, இரண்டாயிரம் கோழிகள் போன்றவற்றைப் பலி கொடுப்பதுண்டு.

## பொய்யிகொண்டா கங்கையம்மன் பூசை முறை

புங்குனூரிலிருந்து பத்துக் கல் தூரத்தில் உள்ள பொய்யிகொண்டா கங்கையம்மனுக்கு ஒவ்வொரு வாரமும் பூசை நடைபெறுகின்றது. பூசையின் போது பக்தர்கள் எருமைக்கிடா, கோழி, ஆட்டுக்கிடா போன்றவற்றைப் பலி கொடுப்பதுண்டு. பலி கொடுக்கப்பட்ட எருமைக் கிடாக்களை அரிசனங்கள் எடுத்துக் கொண்டு போய் விடுவர். ஆடுகளையும், கோழிகளையும் அங்கே சமைத்து அனைவருக்கும் கொடுப்பர். இவ்விதமாகச் செய்வதால் கங்கையம்மன் திருப்தியடைந்து வேண்டுதல்களை நிறை வேற்றுகின்றாள் என மக்கள் நம்புகின்றனர்.

இவ்விதமாக பூசை ஏற்ற கங்கையம்மனை இடையர் திருமணத்தின்போது பூசை செய்யும் பழக்கம் இன்னும் வழக்கிலுள்ளது. இவர்களிடம் ''கங்கை பெட்டி'' என்ற ஒரு பெட்டி இருக்கும். இதில் சாட்டை, பசு விக்கிரகம் போன்றவை இருக்கும். திருமணத்தின்போது இந்தப் பெட்டியை வெளியே எடுத்து ஊர்வலமாகக் கொண்டு செல்வர். அச்சமயத்தில் சாட்டையால் அடித்துக் கொண்டு செல்வர். கங்கை பெட்டியைத் திருமணப் பந்தலுக்கருகில் கொண்டு வந்து திருமணத்தை முடிப்பர்.

இவர்கள் ஒரு ஆட்டுக்கிடாவைக் கொண்டு வந்து தோளின் மேல் போட்டுக்கொண்டு கழுத்தை வாயில் கடித்துக் காவு கொடுப்பர்.

இச் செயலை யாரும் பார்க்கக்கூடாமல் இருக்க தலையின்மீது திரை போடுவர். ஆட்டுக் கிடாவை இடையர் குலப் பெரியவர்கள் அறுத்துப் பங்கிட்டுக் கொள்வர். சில கிராமங்களில் பலியிட்ட விலங்குகளை சக்கிலியர்களுக்குக் கொடுத்து விடுகின்றனர்.

## அங்கம்மா பூசை முறைகள்

அங்கம்மனை பூசை செய்வதற்கும், கங்கையம்மனைப் பூசை செய்வதற்கும் சற்று வேறுபாடு உண்டு. கங்கை யம்மனைப் போலவே ஒவ்வொரு கிராமத்திலும் அங்கம்மா திருவிழாவை ஆண்டுக்கொரு முறை நடத்துகின்றனர். அங்கம்மா திருவிழாவைச் சாதாரணமாக ஐந்து நாட் களிலிருந்து பன்னிரண்டு நாட்கள் வரை கொண்டாடு கின்றனர்.

முதலாவது நாளில் கரக நிகழ்ச்சி நடைபெறுகின்றது. அன்று இரவு பூசாரி கரகத்தை எடுத்துக்கொண்டு அங்கம்மா திருவிழா நடைபெறும் கிராமம் மட்டுமல்லாது மற்ற ஏழு கிராமங்களைச் சுற்றி வலம் வந்து பூசையை ஏற்பர். கரகத்தை அங்கம்மா கோயிலில் இறக்கிய பிறகு ஒன்பது வண்ணங்களில் அரண்மனை வடிவிலான கோலத் தைப் போடுகின்றனர்.

இதற்குப் பலியிடுவதும் உண்டு. இதற்கு ஒரு ஆட்டுக் கிடாவைப் பலி இடுவர். அன்று பகலில் இரண்டு மணி நேரமும், இரவில் இரண்டு மணி நேரமும் கிராமதேவதை களின் கதையைச் சொல்வர். சிலர் பல்வேறு வேடங்களைப் போடுவதும் உண்டு. கிராமதேவதைகளின் கதைகளைத் திருவிழா முடியும் வரை சொல்வதுண்டு; அது போலவே திருவிழா முடியும் வரை வேடங்கள் போட்டுக் கொண்டிருப்பர்.

இரண்டாவது நாள் 'போத்துராஜா' உருவத்தை ஒன்பது வண்ணங்களில் கோலம் போடுவர். இந்தக் கோலத்திற்கும் பலி கொடுப்பதுண்டு. மூன்றாவது நாளில் கிராம தேவதையின் உருவத்தைப் பயங்கரமாகச் சித்தரித்து ஆட்டுக்கிடாவைப் பலி கொடுப்பர். கிராம தேவதைக்கு 14 கைகளும், 14 ஆயுதங்களும் பெற்றிருக்கும். நாக்கை வெளியே நீட்டப்பட்டிருக்கும். நான்காவது நாள்

சேஷாசயனம் கோலத்தைப் போடுவர், பால், கோழி முட்டை, பச்சைப்பயறு போன்றவற்றைப் படைத்து வணங்குவதுண்டு. ஐந்தாவது நாள் பால குர்றப்ப உருவத்தைப் போன்று கோலம் போடுவர். அவருக்கும் பலி இடுவர்.

பின்னர் கிராமத்தில் உள்ள இதர கிராம தேவதை களின் உருவத்தைப் போன்று கோலம் போட்டுப் பலி கொடுப்பர். கடைசி நாளில் பெண்கள் அரிசிமாவு உருண்டை செய்து அதில் விளக்கேற்றி, கிராமதேவதைக் கோயிலில் வைப்பர். பின்னர் எருமைக்கிடாவைப் பலி கொடுத்து இரத்தசோற்றைச் சுற்றிலும் இரைப்பதுண்டு. சில கிராமங்களில் கங்கையம்மனுக்கு எருமைக்கிடாவைப் பலி கொடுத்தது போலவே அங்கம்மாவுக்கும் பலி கொடுக் கின்றனர்.

பலி நிகழ்ச்சி முடிந்ததும் புனிதமாக்குதல் நிகழ்ச்சியில் முக்கியமாகக் கருதப்படும் தீ மிதித்தல் நிகழ்ச்சி நடை பெறுகின்றது. தீ மிதிப்பவர் ஐந்து நாட்களுக்குப் பரிசுத்த மாய் இருக்கவேண்டும். கிராம தேவதையின் கோயிலில் வைதீக முறைப்படி கங்கணம் கட்டிக்கொள்ளவேண்டும். தீ மிதிக்கும் நாளில் ஒன்பது கிணற்றில் ஸ்நானம் செய்ய வேண்டும். பின்னர் அக்கினிகுண்டத்தில் இறங்குபவர்கள் அந்த இடத்தில் தயாராக நிற்பார்கள். அக்கினிக் குண்டத் தின் அக்னி மூலையில் போத்து ராஜா சிலை நிறுத்தவைக்கப் பட்டிருக்கும். போத்து ராஜா சிலைக்குப் பலி கொடுத்த பின்னர் நான்கு பக்கமும் நாட்டப்பட்டிருக்கும் வாழைச் செடிக்கு மஞ்சள் குங்குமம் வைத்து கற்பூரம் கொளுத்தி தேங்காய் உடைப்பர். தயிர் கலந்த சோற்றை அக்கினிக் குண்டத்தின் இரண்டு பக்கங்களிலும் வைப்பர். பூசாரிக்கு ஆவேசம் வருவதற்காக ஆசாதி என்பவர் பாடல்களைப் பாடுவதுண்டு.

ஓங்கார தேவியே சரணம் அம்மா
ஓம் லிங்காய தேவியே சரணம்
ஒன்பது கலர் வண்ணத்தில்
ஓய்யாரமாக கோலம் போட்டு
மஞ்சள் குங்குமம் உந்தனுக்கு அங்கம்மா
மகிமை உள்ள மானிடர்க்கு
மன்னித்தருள வேண்டுகின்றோம்.
மாவு விளக்கு ஏற்றுகின்றோம்,
மகிமை உள்ள அங்கம்மா தாயே
மருளாதே! மயங்காதே! இறங்கி வா.

இதுபோன்ற பொருளைத் தரக்கூடிய தெலுங்குப் பாடலொன்றும் இம்மாவட்டத்தில் பாடப்பெறுகின்றது.

ஓம் லிங்காய நமோ நமச்சிவாய
வீராதி வீருலந்தா படி போயிரி
தெல்லவாரி ஜாமுனா மகா தல்லி
தேவளம்பு மேமு வச்சி
கலரு பிண்டி தெச்சி பங்காரு
காளி முக்கு வேசினாமு
பொகுரு கலரு தெச்சி பங்காரு
போத்து ராஜா முக்கு வேசினாமு
சலி பிண்டி தீபாலு அங்கம்மா
செரணம் செரணம் தல்லி.

என்று பாடுவர். பொருளாலும், அமைப்பாலும் தமிழ்ப் பாடலும், தெலுங்குப்பாடலும் ஒன்றுபட்டுக் காணப்படுகின்றது.

ஓம் லிங்கா, ஓம் லிங்கா என்று பாடிய பின்னர் அங்கம்மா தேவதையின் கோயில் பூசாரிக்கு ஆவேசம் வருகின்றது. கோயில் பூசாரிக் கரகத்தை எடுத்தது முதல் ஆகாரம் உட்கொள்வதில்லை. கற்பூரத்தை மட்டும் விழுங்கிக் கொண்டிருப்பர். அங்கம்மா பூசாரியை விட்டு

நீங்கியதும் பம்பை வாசிப்பவர்கள் எலுமிச்சைப்பழத்தை அக்கினிக்குண்டத்தில் போடுவர். அக்கினிக்குண்டத்தில் வாடாமல் இருந்த எலுமிச்சப் பழத்தையும், பூவையும் பம்பை அடிப்பவன் பத்திரமாகக் கொண்டு வந்து பெண் வேடத்தில் இருக்கும் பூசாரி முந்தானையில் மூட்டையாகக் கட்டுவர். ஆசாதி அக்கினிக்குண்டத்தில் பிரவேசித்தவுடன் மற்ற ஆட்டங்கள், பூசாரிகள், கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் பக்தர்கள் போன்றவர்கள் அக்கினிக் குண்டத்தில் இறங்குவர்.

இவ்விதமாக மூன்று முறை அக்கினிக் குண்டத்தில் இறங்கினால் நன்மை பயக்கும் என்று நம்புகின்றனர். சில கிராமங்களில் தீ மிதிக்கும் நிகழ்ச்சிகள் முடிந்த பின்னர் பால் குண்டம், தண்ணீர் குண்டம் ஆகியவற்றிலும் இறங்குவதுண்டு. இவைகள் இரண்டு அடிகள் நீளமும், ஒன்றரை அடி அகலமும் இருக்கும். தீ மிதிக்கும் நிகழ்ச்சியோடு அங்கம்மா திருவிழா முடிவு பெறுகின்றது.

## திரௌபதி தேவியைப் பூசை செய்யும் விதம்

சித்தூர் மாவட்டம் முழுவதும் திரௌபதி தேவியைப் பூசை செய்து வணங்குவர். திரௌபதி தேவிக்கு விழா எடுக்கும் நேரம் தர்மராஜாவுக்கும் பூசை செய்வர். புத்தூர் திரௌபதி தேவி திருவிழா சமயத்தில் மகாபாரதத்தில் நடைபெற்ற சில முக்கியச் செயல்களைச் செய்வர். இதில் அர்ச்சுனன், சிவனைக் குறித்து தபசு செய்யும் கட்டம் முக்கியமானவையாகும். இச்சந்தர்ப்பத்தில் அர்ச்சுனன் வேடம் தரித்திருப்பவர் ஒரு மரத்தில் ஏறுவார். பொதுவாக இது பனை மரமாகவே இருக்கும். மரத்தின் உச்சிக்குச் சென்றதும், எலுமிச்சை, விபூதி, பழம், பொறி, பூ போன்றவற்றை இரைப்பர். அர்ச்சுனன் தபசு ஏறும்போது பிள்ளைப்

பேறு இல்லாத பெண்கள், வாழ்க்கையிலே குறை உடைய வர்கள். வரத்திற்காக ஸ்நானம் செய்துவிட்டு மரத்தைச் சுற்றிலும் படுத்து இருப்பர். அர்ச்சுனன் வீசிய பொருட் களைப் படுத்திருப்பவர்களும் முந்தானையில் பிடிப்பதுண்டு. வாழைப்பழம் கிடைத்தவர்களுக்கு ஆண் பிள்ளை பிறக் கும் என்றும், எலுமிச்சம் பழம் கிடைத்தவருக்குப் பெண் பிள்ளை பிறக்கும் என்றும், பொறி கிடைத்தவர்களுக்குப் பணம் மிகுதியாகச் சேரும் என்றும் நம்புகின்றனர்.

மேலும் அர்ச்சுனன் வீசிய பொருட்களை எடுத்துச் சென்று வீடுகளில் வைத்திருந்தால் தீயசக்திகள் வீட்டுக்கு வராது என்று நம்புகின்றார்கள். திருவிழா ஆரம்பத்தில் மூங்கில் மரத்தை நட்டு அதில் மஞ்சள் துணி கட்டி, பாலால் மூங்கிலைக் கழுவுவர். பின்னர் குங்குமம் வைத்து கற்பூரம் கொளுத்தி ஆரத்தி எடுத்து தேங்காய் உடைத்து வழிபாடு செய்வர். இவ்விதமாகச் செய்வதால் அந்த இடம் புனித மடைகின்றது என நம்புகின்றனர்.

அன்று இரவு திரௌபதியைப் பூக்களால் அலங்கரித்துப் பூசை மேற்கொள்வர். இரண்டாவது நாள் புலி வாகனத் தின் மீது ஏற்றிப் பூசை செய்வர். இவ்விதமாக சேஷ வாகனம், அஸ்வ வாகனம், கஜவாகனம், சிம்ம வாகனம் போன்றவற்றின்மீது திரௌபதியை உட்கார வைத்துப் பூசை செய்வர். ஒன்பதாவது நாள் பிணக்குத் தீர்க்கும் நிகழ்ச்சி ஆரம்பமாகின்றது. நல்ல தண்ணீர் உள்ள கிணற்றில் கத்தியைச் சுத்தம் செய்து, அலங்கரித்து ஊர்வல மாகக் கோயிலுக்குக் கொண்டு வருவர்.

கோயிலில் உள்ள குடத்தின்மீது கத்தி முனையை வைத்து கைப்பிடி மேலே இருக்கும் வகையில் கத்தியை நிற்க வைப்பர். இவ்விதமாகச் செய்த உடனே மக்கள் ஆயிரக் கணக்கில் தேங்காய்களை உடைப்பதுண்டு. கத்திமுனையில் திரௌபதிதேவி நின்றாள் என மக்கள் நம்புகின்றனர். பத்தாவது நாள் கருடசேவை உற்சவம் நடைபெறுகின்றது.

பதினோராவது நாள் அக்கினி குண்டம் பிரவேசம் நடை பெறுகின்றது. அக்கினிக் குண்டத்தில் பூவையும், எலுமிச்சைப் பழத்தையும் போட்டவுடன் அவை வாடியதா? இல்லையா? என்பதை பரிசோதித்த பின்னர் திரௌபதி வேடம் தரித்தவரின் முந்தானையில் எலுமிச்சைப்பழத்தை யும், பூவையும் கட்டுவர்.

திரௌபதி சிலையையும், பாண்டவர்களுடைய சிலை யையும் தலைமேல் எடுத்துக் கொண்டு கோவிந்தா! கோவிந்தா என்று சொல்லிக் கொண்டே தீ மிதிப்பர். சுமார் 1500 பேர் இந்த நிகழ்ச்சியில் பங்கு கொள்வர். அன்று இரவு சூரிய பிரபோத்ஸவம் நடைபெறுகின்றது.

மறுநாள் தர்மராஜா பட்டாபிஷேகம் நடைபெற்றதும் திரௌபதி உற்சவம் முடிவடைகின்றது. இந்நிகழ்ச்சியில் ஏராளமான மக்கள் கலந்து கொண்டு பலிகளைக் கொடுத்து தங்களது நேர்த்திக் கடனைத் தீர்த்துக் கொள்கின்றனர். சில கிராமங்களில் திரௌபதிதேவி உற்சவம் நேரத்தில் துரியோதனன் வரம் கேட்டல், கோயில் தர்மகர்த்தா பதவி வகித்தல், பூசாரி, ஆசாதி போன்றவர்கள் புனிதமாக்குதல் நிகழ்ச்சியை மேற்கொள்ளுதல் போன்றவற்றை ஒரு இணைற்றுப்பக்கம் மேற்கொள்வர்.

## அம்னாயாக்ஷினியைப் பூசை செய்யும் முறை

அம்னாயாக்ஷினிக்கு ஒவ்வொரு நாளும் பூசை நடை பெறுகின்றது. ஒவ்வொரு நாளும் இந்த அம்மனுக்கு இரண்டு முறை அபிஷேகம் செய்வர். ஐம்போக்ஷணம் செய்து கந்தம், பன்னீர், புஷ்பம், குங்குமம், மஞ்சள், பழம் போன்றவற்றைப் படைப்பர். ஞாயிறு, செவ்வாய், வெள்ளி ஆகிய நாட்களில் விசேடப்பூசைகளை மேற்கொள்கின்றனர். தினமும் பலி கொடுக்கப்படும் இடத்தில் தேங்காய் உடைப்பர்.

நவராத்திரி அன்று அம்னாயாக்ஷினி தேவிக்குத் தற்போதுள்ள எட்டு கைகள் மட்டுமல்லாமல் மற்றொரு எட்டு கைக்களை வைத்து அன்று விசேடமாகப் பூசை மேற் கொள்வதுண்டு. அந்நேரத்தில் பலி கொடுப்பதும் உண்டு. பண்டையக் காலத்தில் கோழி, முயல், எருமை, யானை, நண்டு, பூசணிக்காய், வாழைப்பழம், எலுமிச்சை போன்ற வற்றைப் பலியாகக் கொடுப்பர். எருமையைப் பலி கொடுக் கும் நேரத்தில் கோயில் கதவுகளை மூடிவிடுவார்களாம்.

ஆனால் பலி நடத்திய பின்னர் கோயில் கதவுகளைத் திறந்து பார்த்தால்அம்னாயாக்ஷினி புடவையின் முந்தானை யில் எருமையின் இரத்தம் படிந்திருக்குமாம். இவ்விதமாக நடைபெற்றால் தேவி'சத்தியம் மிகுந்தவள் என்று மக்கள் நம்புவர். அதுமட்டுமல்லாமல் எருமையைப் பலி கொடுத்த பின்னர் அதன் உடலைப் புதைத்து விடுவர். ஒரு வருடம் கழித்து புதைத்த இடத்தைத் தோண்டிப் பார்த்தால் பசுமையான எருமை மாட்டின் சாணம் கிடைக்குமாம்.

இதனைக் கருத்தில் கொண்டு அம்னாயாக்ஷினி சத்தியம் மிகுந்தவள் என்று மக்கள் கருதுகின்றனர். தற்போது எருமைக்கிடாவைப் பலி கொடுக்கப்படுவது தவிர்க்கப்பட்டுவிட்டதால் அம்மனின் அருளும், சத்தியமும் குறைந்துவிட்டது என்று பூசாரிகள் தெரிவிக்கின்றனர். ஆனால் கோயிலுக்கு முன்பு திரிசூலத்தை நாட்டி தினமும் பூசை மேற்கொள்ளப்படுவதால் அம்மனின் மகிமை சற்று மெருகேறியது என்று பூசாரிகள் கூறுகின்றனர்.

அம்னாயாக்ஷினி தேவதையைப் போலவே கிராமத் திற்கு வெளியே நிலைகொண்டிருக்கும் கிராம தேவதைக்கும் பலி கொடுப்பதற்கும், கங்கையம்மன் திருவிழாவின்போது பலி கொடுப்பதற்கும் சில வேறுபாடுகள் உள்ளன. எருமை கிடாவை ஊர்வலமாக இழுத்துச் சென்று Y வடிவில் உள்ள கம்பில் கட்டி வெட்டுவர். எருமையின் தலையை எடுத்துக் கொண்டு கிராமத்தைச் சுற்றி வலம் வருவர்.

இதுபோன்ற நிகழ்ச்சிகள் கிராமத்திற்கு வெளியே இருக்கும் கோயில்களில் நடைபெறும் பூசைகளில் காணப் படுவதில்லை. பலி கொடுக்கப்பட்ட எருமை மாட்டைக் கோயிலுக்கு முன்புறம் புதைத்துவிடுவர். ஒரு வருடம் கழித்து புதைத்த இடத்தைத் தோண்டிப்பார்த்தால் குழியில் பசுமையான சாணம் கிடைக்கும். அந்த சாணத்தைக் கொண்டு கிராம தேவதையின் கோயிலை மெழுகுவர். இவ்விதமாகப் புதைத்த இடத்தை மறுபடியும் தோண்டிப் பார்ப்பதை "குண்டாந் திறத்தல்" என்பர்.

கடுபோட்டம்மன் திருவிழா நேரத்தில் இதுபோலவே எருமைக்கிடாவைப் பலி கொடுப்பதுண்டு. கடுபோட்டம்மன் பண்டிகை நாட்களில் பக்தர்கள் தலைப்பாகைகளையும் படைத்து வணங்குகின்றனர். கிராமத்திற்கு வெளியே இருக்கும் போலேரம்மா, எல்லம்மா போன்ற தேவதை களுக்கு மேற்குறிப்பிட்டபடியே பலி கொடுப்பதுண்டு. சந்திரகிரியில் உள்ள மூலஸ்தான எல்லம்மா பூசை முறையில் சிறிது மாற்றம் காணப்படுகிறது. அந்த அம்மனுக்கு எருமைக்கிடாவைப் பலி கொடுப்பதில்லை.

நவராத்திரியின் போது அம்மனுக்குப் பல்வேறு வாகனங் களை அமைத்துப் பூசை செய்வர். சங்கராந்தி நடைபெற்ற மறுநாளிலிருந்து ஆரம்பம் ஆகும் உற்சவத்தில் இந்த அம்மனுக்கு விசேடப் பூசைகள் மேற்கொள்வர்.

## காட்டும ராஜாவை பூசை செய்யும் முறைகள்

சித்தூர் மாவட்டத்தில் உள்ள கிராமங்களில் சாதாரண மாக ஆண்டுக்கொரு முறை காட்டும ராஜாவுக்குப் பூசை மேற்கொள்கின்றனர். பூசை மிகவும் சிறப்பாக நடைபெறு கின்றன. மாட்டுப் பொங்கல் நாளன்று பூசாரி என்பவர் வீடு வீடாக அரிசி, பணம் போன்றவற்றை வசூல் செய்வர். பூசை நாளன்று கிராமத்தில் உள்ளவர்கள் அனைவரும் கோயிலுக்கருகில் பொங்கல் வைப்பர்.

பொங்கல் சோற்றை காட்டும ராஜாவுக்குப் படைப்பர் வேப்பிலை, அவரம் இலை போன்றவற்றைக் கொண்டு வந்து கோயிலுக்கு முன்புறம் வைப்பர். இதற்கு 'பதிரி' என்று பெயர். பின்னர் பூசாரி விபூதியை எடுத்துக்கொண்டு கற்பூரம் கொளுத்தி ஆரத்தி எடுப்பர்.

அடுத்ததாக முட்முதருக்குத் தீ வைப்பர். முட்முதர் தீ பற்றிக்கொண்டு எரிந்து கொண்டிருக்கும்போது பக்தர்கள் அனைவரும் மாடுகளைப் பிடித்துக் கொண்டு தீயைச் சுற்றி வலம் வருவர். கோயிலுக்கு முன்புறம் மாடுகளைக் கொண்டு வந்து கற்பூரம் கொளுத்தி தேங்காய் உடைத்து வழிபடுவர். கோயிலுக்கு முன்புறம் உள்ள பத்ரியைக் கொண்டு வந்து மாடுகளின் கால்கள் மீதும், ஆடு, செம்மறியாடு போன்றவைகள் மீதும் போடுவர். இவ்விதமாகச் செய்வதால் ஆடுகளும் மாடுகளும் விருத்தியடைகின்றது.

## மாரியம்மனை வழிபடும் முறை

சித்தூர் மாவட்டத்தில் உள்ள பலமனேர் பட்டணத்தில் உள்ள மாரியம்மனை ஒவ்வொரு நாளும் வழிபாடு செய்து பூசை செய்கின்றனர்.

ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் மாரியம்மனுக்குச் சிறப்பாகப் பூசை செய்கின்றனர். அன்று மாரியம்மன் விக்கிரகத்தை நீரில் சுத்தமாகக் கழுவுவதுண்டு. பின்னர் பால், தயிர், நெய் போன்றவற்றில் அபிஷேகம் செய்வர். பின்னர் வாய்க்கு அருகில் பித்தளையால் செய்ப்பட்ட கோரைப் பற்களை வைப்பர். கண்ணுக்கருகில் பித்தளையால் செய்யப்பட்ட கண்ணைப் பொருத்தி வைப்பர். மஞ்சள் பூசி குங்குமம் வைத்து மலர்களால் அம்மனை அலங்கரிப்பர். பித்தளை வடிவத்தில் இருக்கும் கோரைப் பற்களைத் தலையின் மேல் வைத்து வாசனைச் சுகந் தங்களால் பூசை மேற்கொள்வர். பின்னர் ஊதுபத்திகள்,

கற்பூரம் போன்றவற்றைக் கொளுத்தி வைத்து தேங்காய் உடைத்துப் பழங்கள் போன்றவற்றைப் படைத்து வணங்குவதுண்டு.

பக்தர்கள் அம்மனுக்கு அபிஷேகம் செய்ய விருப்பம் கொண்டால் பூசாரியை அனுசரித்து அபிஷேகத்தைச் செய்வர். அபிஷேகம் முடிந்தவுடன் பூசை செய்து கோழி, ஆடு போன்றவற்றைப் பலியிடுவர். கொடூரமான வியாதிகளிலிருந்து குணம் அடைந்தவர்கள் பித்தளையில் செய்யப்பட்ட கோரைப் பல், கண் போன்ற வற்றைப் படைப்பர். சிலர் பட்டுப்புடவை, வளையல் போன்றவற்றையும் படைப்பர். சிலர் நேர்த்திக் கடன் பொருட்டு பித்தளை சூலங்களை நாக்கிலும் கன்னத்திலும் குத்திக் கொள்கின்றனர். இதனை அகற்றிய பிறகு வாயில் விபூதி மட்டும் போடுவது உண்டு. பித்தளைச் சூலத்தைக் குத்தும் போது அந்தப் பகுதியில் விபூதி வைத்துப் பின்னர் துளை போடுகின்றனர்.

இவ்விதமாகச் செய்வதால் இரத்தம் வெளியாவது இல்லை. சூலங்களைக் குத்தும்போது வலி ஏற்படுவதில்லை என்று பக்தர்கள் கூறுகின்றனர். ஆனால் தற்போது இம் மாதிரி ஆத்மஹிம்சை சம்பவங்கள் அதிகமாகக் காணப்படு வதில்லை. சங்கையம்மன் திருவிழா சமயத்தில் கிராமத்த வர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து மாரியம்மனுக்குப் பொங்கல் வைப்பதுண்டு. வெல்லம் போட்ட சோற்றை மாரியம்மனுக்குப் படைப்பதுண்டு. பின்னர் ஆடு, கோழி போன்றவற்றைப் பலி இடுவர்.

பின்னர் அரிசி மாவு செய்து தீபம் ஏற்றுவர். இதற்கு ''மாவு விளக்கு'' என்று பெயர். மாவு விளக்கு எடுத்துக் கொண்டு மாரியம்மன் கோயிலை மூன்று முறை வலம் வருவர். பின்னர் கற்பூரம் கொளுத்தி ஆரத்தி எடுத்து தேங்காய் உடைத்து வழிபடுவர். தங்களையும் தங்களது பிள்ளைகளையும் காப்பாற்றுமாறு வேண்டிக் கொள்வர்.

அம்மை நோயினின்று விடுதலை பெற்ற பிள்ளைகளுக்கு உடல் முழுவதும் மஞ்சளைப் பூசி விட்டுக் கருப்புப் பொட்டு வைத்து அவர்களின் இடுப்பில் வேப்பிலைகளைக் கட்டுவர். அவர்கள் வீடு வீடாகச் சென்று பணம், பொருள் போன்ற வற்றை வசூலிப்பர். இதற்கு "மாரி பிச்சை" என்று பெயர். பிச்சை எடுத்த பொருளை மாரியம்மனுக்குக் காணிக்கை யாகச் செலுத்துவர்.

## தேசியம்மாவைப் பூசை செய்யும் விதம்

தேசியம்மனுக்கும் மற்ற தேவதைகளைப் போலவே நித்திய பூசை நடைபெறுகின்றது. இந்த அம்மனுக்கு செவ்வாய்க் கிழமைதோறும் விசேடப் பூசை நடத்து கின்றனர். அன்று பக்தர்கள் பலி கொடுத்து பூசை செய்வர். பூசை நாளன்று தேசியம்மன் விக்கிரகத்திற்கு வேப்பிலை யால் புடவை கட்டுவதுண்டு. திருவிழா அன்று கோயி லுக்கு முன்பு சற்று தூரத்தில் பலி கொடுப்பர். தேசியம்மன் கண் வியாதிகளை அகற்றும் தேவதையாகக் கருதப்படு கிறார். கண் வியாதியிலிருந்து குணமடைந்த பக்தர்கள் பித்தளையால் செய்யப்பட்ட கண்கள், பட்டுப்புடவை போன்றவற்றைக் காணிக்கையாகப் படைப்பதுண்டு.

நகரியில் நடைபெறும் கங்கையம்மன் திருவிழாவின் போது தேசியம்மன் விக்கிரகத்தை மலர்களால் அலங்கரித்து ஊர்வலமாக எடுத்துச் செல்வதுண்டு. கங்கையம்மன் திருவிழா நடைபெறும் இடத்திற்குச் சற்று தூரத்தில், தேசியம்மன் விக்கிரகத்தையும், ஒரு குட்டம்மாள் விக்கிரகத் தையும் வைத்துப் பூசை செய்வர். கிராமத்தவர்கள் அம்மனுக்குப் பழம், பூ, தேங்காய், கற்பூரம், ஊதுவத்தி போன்றவைகளைப் படைத்து வணங்குவர்.

## நாகாலம்மனைப் பூசை செய்யும் விதம்

''நாகாலம்மன்'' கோயில் சித்தூர் மாவட்டத்தில் எல்லாக் கிராமங்களிலும் இருக்கும். நாகாலம்மனுக்குக் கோயில் அமைக்கப்படுவதில்லை. அரசமரமும், வேப்ப மரமும் ஓரிடத்தில் வளர்ந்து இருந்தால் அந்த இடத்தில் மேடை போல் அமைத்து அங்கு நீண்டதொரு கல்லில் நல்ல பாம்பின் உருவத்தை செதுக்கி நாட்டி வைப்பர். இதனையே கோயில் என்று பக்தர்கள் கூறுகின்றனர். வருடத்திற்கு ஒரு முறை ''நாகால சவுத்தி'' என்று அழைக்கப் பெறும் நாளில் இந்த அம்மனுக்குச் சிறப்பாகப் பூசை நடத்து கின்றனர். அன்று பெண்கள் ஸ்நானம் செய்துவிட்டு பூசைப் பொருட்களை எடுத்துக் கொண்டு நாகாலம்மன் கோயிலை அடைவர். பொதுவாகக் கோயிலுக்கு அருகில் 'புற்று' இருக்கும் சிலைகளை நன்கு கழுவி மஞ்சள் பூசி குங்குமம் வைப்பர். பின்னர் புற்றுக்கும் அதே விதமாக மஞ்சள் தூள் தூவி குங்குமப் பொட்டு வைத்து மலர்களால் அலங்கரித்து நூலால் புற்றை மூன்று முறை சுற்றிக் கட்டுவர். பருத்தியால் செய்யப்பட்ட மாலையை நாகச்சிலைக்குப் போடுவர். தீபம் ஏற்றி வைத்து புற்றில் பாலை ஊற்றுவர். பால் ஊற்றிய பின்னர் கோழி முட்டையைப் புற்றுக்குள் போடுவர். கற்பூரம் கொளுத்தி ஆரத்தி எடுத்து தேங்காய் உடைப்பர்.

விளைச்சல் நன்கு உண்டாக வேண்டும் என்று தொழுது கொள்வர். எள், வெல்லம் போன்றவற்றில் செய்யப்பட்ட பாகையும், அரிசி, வெல்லம், எள் போன்ற வற்றில் செய்யப்பட்ட பாகையும், வெற்றிலை, பாக்கு, பணம் போன்றவற்றையும் படைத்து வணங்குவர். பூசையின்போது கூடியிருந்த சிறுவர்களுக்கு அரிசி, வெல்லம், எள் போன்றவற்றைப் பங்கிடுவர்.

பிள்ளைப் பேறு இல்லாதவர்கள் தங்களுக்குப் பிள்ளைப் பேறு கிடைக்க இந்த அம்மனுக்குச் சிறப்பான பூசை

செய்கின்றனர். வேப்பம் மரத்திற்கும் அரச மரத்திற்கும் நூலைச் சுற்றி, தண்ணீரில் கழுவி, மஞ்சள் பூசி, குங்குமம் வைத்துப் பருத்தி மாலை அணிவிப்பர். பின்னர் கற்பூரம், ஊதுபத்தி போன்றவைகளைக் கொளுத்தி மரத்தை ஒன்பது முறை சுற்றி வலம் வருவர். பின்னர் தேங்காய் உடைத்து வழிபடுவர். பழங்களையும் காணிக்கையும் படைப்பர். இவ்வாறு பூசை மேற்கொண்டு பிள்ளைகளைப் பெற்றால் நாகராஜு, நாகப்பா, நாகம்மா என்று பெயரிடு கின்றனர். அது மட்டுமல்லாமல் ஒவ்வொரு வருடமும் தவறாது பூசை செய்கின்றோம் என அம்மனிடம் வாக்குக் கொடுக்கின்றனர்.

சில கிராமங்களில் நாகாலம்மனுக்குப் பலி கொடுக்கும் வழக்கம் இருந்து வருகின்றது. சந்திரகிரி பகுதியில் சில கிராமங்களில் பலி கொடுக்கும் வழக்கம் இன்றும் இருந்து வருகின்றது.

நாகாலம்மன் அனுக்கிரகம் மூலமாகப் பிள்ளைப் பேறு அடைந்தவர்கள் ஞாயிறுதோறும் சந்திரிகிரி கோட்டைக்கு அருகில் உள்ள நாகாலம்மன் தோட்டத்தை அடைவர். நாக சிலையைத் தண்ணீரில் கழுவி மஞ்சள் குங்குமம் வைப்பர். நாகாலம்மன் சத்தியத்தால் பிறந்த பிள்ளைகளுக்குத் தலை ஸ்நானம் செய்வர். பிள்ளைகளுக்குப் புத்தாடை அணிவிப்பர். பொங்கல் சோற்றைப் படைத்து கோழி, ஆடு போன்றவற்றைப் பலி இடுவர். நாகச் சிலையைச் சுற்றி இரத்தத்தைத் தெளிப்பர். பின்னர் பலியிடப்பட்டவிலங்கை அங்கேயே சமைத்து உண்பர். கூடியிருந்தவர்களுக்கும் கொடுப்பர்.

திருப்பதி, சித்தூர் போன்ற பட்டணங்களில் நாகாலம்மனுக்குத் தினமும் பூசை நடைபெறுகின்றது. திருப்பதியில் உள்ள நாகாலம்மனுக்கு ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும், செவ்வாய்க்கிழமையும் பெண்கள் சிறப்பாக பூசை செய்கின்றனர்.

## அக்காரி அம்மனைப் பூசை செய்யும் விதம்

கிராமங்களில் வசிக்கும் மக்களின் முக்கியத் தொழில் விவசாயமாகும். விளைச்சல் நன்கு விளையவும் இயற்கையின் சீற்றத்திலிருந்து பயிர்களைக் காப்பாற்றும்படியும் வருடந்தோறும் அக்காரி அம்மனை வழிபாடு செய்வர். சாதாரணமாகக் குடும்பமாகச் சேர்ந்து பூசை செய்வர். ஞாயிறு கிழமைகளில் இப்பூசையை விசேடமாகச் செய்வதுண்டு. அன்று கழனிக்கருகில் உள்ள மரத்தின் நிழலில் ஒன்றாகக் கூடுவர். பூசை செய்பவர் நீராடிவிட்டு அக்காரி அம்மனுக்குப் பூசை செய்வர். விக்கிரகத்தை நிலை நாட்டும் மரத்திற்கு மஞ்சள் பூசி குங்குமம் வைத்து விபூதிப் பொட்டும் வைத்து சாம்பிராணி போட்டு விளக்கேற்றி ஆரத்தி எடுப்பர்.

பின்னர் வாசனை நிறைந்த "கதம்பொடி" எனப்படும் தூளைத் தூவுவர். எலுமிச்சை, வாழைப்பழம் போன்றவற்றைக் காணிக்கையாகப் படைப்பதுண்டு. பலிஇடப்பட்ட விலங்கின் இரத்தத்தை வயல் முழுவதும் தெளிப்பர். பின்னர் தேங்காய் உடைத்து கற்பூர ஆரத்தி எடுப்பர். பலியிடப்பட்ட ஆட்டுமாமிசத்தை அந்த இடத்திலேயே சமைத்து அனைவரும் ஒன்று சேர்ந்து மீதியானவற்றை மற்றவர்களுக்குப் பங்கிடுவர்.

## காட்டேரியைப் பூசை செய்யும் பூதம்

முனீஸ்வரன் அக்காவாகக் கருதப்படும் காட்டேரியை ஒரு வார காலமாக பூசை செய்வார்கள். சாதாரணமாக ஞாயிறு கிழமைகளில் இந்த அம்மனுக்குப் பூசை செய்வர். சிறுபிள்ளைகள் நலமாக வாழ்வதற்கு இந்த அம்மனை வழி படுகின்றனர். பூசையின் போது அனைவரும் நீராடித் தங்களைப் புனிதப்படுத்திக் கொள்ள வேண்டும். கருப்பு பார்டர் போட்ட வெள்ளைப் புடவை, இரண்டு தேங்காய்,

இரண்டு விபூதிப்பழம், இரண்டு எலுமிச்சை, கற்பூரம், கருப்புவளையல், மஞ்சள், குங்குமம், வாழைப்பழம், பொறி, பூ, கடலை, மூன்று விதமான தானிய வகைகள் போன்றவற்றைப் படைப்பர். கருப்புக் கோழியைப் பலி கொடுத்து இரத்தம் மண்ணில் விழாதவாறு இறுக்கமாகப் பிடித்துக் கொள்வர். கோழியைச் சமைப்பர். கோழி முட்டையை வேக வைத்து தோலை உரித்து முருங்கைக் கீரையைக் கொண்டுவந்து எள் எண்ணெய் வார்த்துப் பொறியல் செய்வர். இதனை ஐந்து உருண்டைகளாகச் செய்வர்.

அது மட்டுமல்லாமல் சோறு, ரசம், களி போன்றவற்றையும் படைப்பர். பின்னர் அரிசிமாவு, வெல்லம் ஆகியவற்றில் செய்த பாகில் தீபம் ஏற்றுவர். இவ்விதமாகக் காட்டேரி தேவதைக்குப் படைத்து விட்டு வணங்குவர். காட்டேரி தேவதைக்குப் பூசை செய்யப் போகும்போது எதிரில் யாராவது வந்தால் மரணமடைவர் என்ற நம்பிக்கை இவர்களிடம் உள்ளது. பூசை செய்ய எல்லாரும் கிணற்றுப் பக்கத்தை அடைந்ததும் அவ்விடத்தில் பச்சைப் பந்தல் போடுவர்.

அந்தப் பந்தலின்மீது புடவையைக் கட்டுவர். பந்தலின் கீழ் மூன்று கற்களை நிலை நாட்டி அதனை நன்கு சுழுவி மூன்று வண்ணங்களில் கோலம் போடுவர். கோயிலுக்கு முன்பு 12 அங்குல நீளம் அகலம் கொண்டதாயும் 12 அங்குலம் ஆழம் உள்ளதாயும் ஒரு பள்ளத்தை வெட்டுவர். மூன்று கினைகளுக்கு முன்பும் வெட்டிய பள்ளத்திலும் சமைத்த உணவை வாழை இலை வைத்துப் படைப்பர். இதனைத் தளிகை என்று சொல்வர். தளிகை வைத்த பின்னர் இலைகளுக்குப் பூசை செய்து, தேங்காய் உடைத்து வணங்குவர்.

பூசையைக் காண வந்தவர்கள் அனைவருக்கும் உணவு கொடுப்பார்கள். பின்னர் தளிகை எந்தப் பிள்ளையின்

வேண்டுதலுக்காகப் படைக்கப்பட்டதோ அந்தப் பிள்ளை யின் தாயார் உண்பார். சமைத்த உணவை மீத மில்லாமல் வந்தவர்களுக்குப் பங்கிடுவர். ஏதாவது மிச்சம் ஆனால் அதனைக் கிணற்றில் போட்டு விடுவர். குழிக்கருகில் உள்ள தாலிகையைக் குழியில் போட்டு விட்டு மண்ணைத் தள்ளி மூடிவிடுவர். அந்தக் குழியின்மீது மூன்று வண்ணங்களில் கோலம் போடுவர்.

பின்னர் கற்பூரம் கொளுத்தி தேங்காய் உடைத்து வழி படுவர். கிராமத்துப் பெரியவர்கள் தாம்பூலம் தரிப்பர். கொண்டு வந்த மாவு போன்றவற்றை அனைவருக்கும் கொடுப்பர். பச்சைப் பந்தலின் மேல் கட்டப்பட்டிருந்த புடவையைச் சிறுவர்களின் தாயார் உடுத்திக் கொள்வர். பின்னர் கூடையைத் தலை மேல் வைத்துக் கொண்டும் கோயிலை மூன்று முறை வலம் வந்து வீடு சேர்ந்து விடுவர். வீட்டுக்கு வரும்போது திரும்பிப் பார்க்காமல் வர வேண்டும். வீட்டுக்கு அருகில் அந்த அம்மையாருக்கு மஞ்சள் நீரால் கண் திருஷ்டிக் கழிப்பர். அன்று இரவு அந்த அம்மையார் உறங்கி எழுந்ததும் புடவையைத் துவைத்துக் காயவைப்பர். அதுவரை அவள் யாரிடமும் பேசக் கூடாது. காட்டேரி தேவதைக்குப் பூசை மேற்கொண்ட போது மற்றவர்கள் பார்க்கக் கூடாது. அவ்வாறு கண்டால் அவர் களுக்குத் துன்பம் வரும் என்பர். காட்டேரி அம்மனின் பூசையில் 'புனிதமாக்குதல் நிகழ்ச்சி' கடைப்பிடிக்கப்படு கின்றது.

## கொலுசு செய்வது

கொலுசு செய்வது என்ற பண்டிகையை ஏனாதி இனத்தவர்கள் செய்கின்றனர். ஏதாவது ஓரிடத்தில் நீர் தெளித்துச் சுத்தம் செய்து வண்ணக் கோலமிட்டு அந்த இடத்தில் அரிசியைப் போட்டுக் கரகத்தை வைப்பர். கரகத்திற்கு அருகில் பூசைப் பொருட்களையும் வைப்ப

துண்டு. மறுநாள் காலை கரகத்தை நீரில் கழுவிச் சுத்தம் செய்து வீட்டுக்குக் கொண்டு வருவர்.

பொங்கல் நாளன்று கரகத்தைப் பூசை செய்து ஒரு அடுப்பின் மீது ஐந்து பானைகளை ஒன்றன்மீது ஒன்றாக வைப்பர். அந்தப் பானையில் தண்ணீர் ஊற்றி அதில் அரிசி போடுவர். பானையின் கீழே அனல் போடுவர். ஐந்து பானையில் உள்ள அரிசியும் வேக வேண்டும். மேல் பானை யில் பொங்கி வழியும் போது பூசாரி என்பவன் பானையில் கையை விட்டுக் கிளற வேண்டும். இவ்விதமாகச் செய்யும் போது கைக்கு எவ்விதப் பாதிப்பும் ஏற்படக் கூடாது. பாதிப்பு ஏறபடாமல் இருந்தால் அம்மனுக்குச் சக்தியம் நிறைந்துள்ளது என்று நம்புகின்றனர்.

பூசாரி பானையில் கைவிடும் போது ஆவேசம் வரு கின்றது. அந்நேரம் பக்தர்கள் தங்களது கஷ்டங்களையும், விருப்பங்களையும் பூசாரியிடம் கேட்கின்றனர். அதற்குரிய பதிலும் பூசாரி கொடுப்பார். சிலர் தங்களது பிள்ளை களுடைய தலைமுடியையும் படைக்கின்றனர். யாரேனும் சிறு வயதில் இறந்து விட்டால் இறந்ததற்கான காரணத்தைப் பூசாரியிடம் கேட்கின்றனர். பூசையின் இறுதி நாளில் வாணலியில் எண்ணெய் வார்த்துக் கொதிக்க வைத்து அதில் மாமிசத் துண்டுகளைப் போட்டுக் கொதிக்கும் எண்ணெயில் கையை விட்டு எடுப்பர். அந்நேரம் அவர் களுக்குக் கை எந்த ஒரு பாதிப்புக்குள்ளாவதும் இல்லை.

## சௌடேஸ்வரம்மனை பூசை செய்யும் விதம்

சௌடேஸ்வரம்மனைச் சாலியர்கள் வழிபடுகின்றனர். இவர்களுள் ஒரு பிரிவினரான தேவாங்குலு என்பவர்கள் சௌடேஸ்வரம்மனின் தலையை மட்டும் பூசை செய்வர். சௌடேஸ்வரம்மனின் பூசை சமயத்தில் மூன்று முக்கிய மான செயல்கள் காணப்படுகின்றன. 1. ஜோதியைத்

தயார் செய்தல் 2. கலசம் தயார் செய்தல் 3. உற்சவ விக்கிரகத்தை ஊர்வலமாக எடுத்துச் செல்லுதல் போன்றவையாகும்.

ஜோதியைத் தயார் செய்வதற்குச் சுத்தமாக ஸ்நானம் செய்த ஐந்து இளைஞர்களைப் பெரியவர்கள் ஏற்படுத்து வார்கள். இவர்களுக்குத் திருமணம் ஆகாமல் இருக்க வேண்டும். இவர்கள் பன்னிரண்டு சேர் அரிசியை மாவாக்க வேண்டும். இவர்கள் குத்தும் போது அரிசியைக் காலால் தள்ளக் கூடாது. கைகளிலேயே அரிசியையும், மாவையும் இரண்டாகப் பிரித்து எடுக்க வேண்டும். இவ்விதமாகச் செய்த மாவுடன் வெல்லத்தைக் கலந்து மாவு உருண்டை செய்து அதனைக் கோயிலில் இருக்கும் பெரிய முறத்தில் வைத்து உருண்டையில் குழி செய்து நெய் ஊற்றி தீபம் ஏற்றுவர். இந்த தீபம் திருவிழா முடியும் வரை அணையாமல் இருக்க வேண்டும்.

இரண்டாவதாக கலசம் செய்யும் வேலை ஆரம்பமா கின்றது. கோயில் பூசாரி சுத்தமாக ஸ்நானம் செய்து, ராகி, பித்தளை, செம்பு, வெள்ளி போன்றவற்றால் செய்யப்பட்ட செம்பைக் கொண்டு வந்து அதனைச் சுத்தம் செய்து அதனுள் சுத்தமான தண்ணீரை ஊற்றுவர். அதன் பின்னர் அந்தத் தண்ணீரில் தேன், விபூதி, மஞ்சள், குங்குமம், நாணயம் போன்றவற்றை வைப்பர். பின்னர் செம்பில் வெற்றிலையை வைப்பர். வெற்றிலைக்காம்பு கலசத்திற்குள் இருக்கும்படியாக வைப்பதுண்டு. பின்னர் செம்புக்குக் கண், மூக்கு, வாய் போன்றவற்றை ஏற்படுத்துவர். அந்த வெற்றிலையின் மீது தும்பைப் பூவை வைப்பர்.

இதனை எடுப்பாக இருக்கும் ஒரு பலகையின்மீது வைப்பர். கலசம் வைக்கப்பட்டிருக்கும் மூலஸ்தானத்தில் சற்றேனும் காற்று நுழையாமல் இருக்கும். இவ்விதமாகச் செய்த பின்னர் சௌடேஸ்வர அம்மனை, வணங்கி கற்பூர

ஆரத்திக் கொடுப்பர். தேங்காய் உடைத்து சௌடேஸ்வர அம்மனை அநேக விதமாக வழிபடுவர். இவ்விதமாகத் தொழுது கொண்டிருக்கும் போது கலசம்மீது தூவப் பட்டுள்ள தும்பைப் பூ வலதுகை பக்கம் கீழே விழ வேண்டும். அவ்வாறு விழாமல் போனால் பூசாரி கத்தியால் கையை வெட்டிக் கொள்வார். இவ்வாறாக சௌடேஸ்வரம் மனைத் துதித்து, கத்தியால் வெட்டிக் கொண்டு சுமார் இரண்டு மணி நேரம் துதி செலுத்துவர். இதனை ஆத்ம ஹிம்சை என்றும் சொல்லலாம். பின்னர் தேவி கருணை கொண்டு வலது புறமாகப் பூவை விழச் செய்வாள். பின்னர் பக்தர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து விக்கிரகத்தை ஊர் வலமாக எடுத்துச் செல்வதுண்டு.

உற்சவ விக்கிரகத்தை ஊர்வலமாகச் செல்லும் போது எல்லாருடைய வீடுகளிலும் பூசை ஏற்கும். இதற்கு ''பிணக்கு சேவை'' என்று பெயர். கத்தியால் மார்பின் மீது குத்திக் கொள்வதைப் பிணக்கு சேவை என்கிறோம். பக்தர்கள் மற்றும், பூசாரிகள், திருமணமாகாத இளைஞர்கள் இச்சேவையினை செய்கின்றனர். இவர்கள் அம்மனைத் தரிசிக்கும் போது பாடல்களைப் பாடிக் கொண்டே துதிப்பர். சௌடேஸ்வரம்மனை கிராமம் முழுவதும் ஊர்வலமாக எடுத்துச் சென்ற பின்னர் கோயிலுக்கு முன்பு உற்சவ விக்கிரகத்தை நிலைநாட்டி பூசணிக்காயைப் பலி கொடுப்பர். சில கிராமங்களில் ஆட்டுக்கிடாவைக்கூட பலி கொடுப்பர். பலி கொடுத்ததும் சௌடேஸ்வர அம்மனின் திருவிழா முடிவு பெறுகின்றது.

## தொலஜம்மனைப் பூசை செய்யும் முறை

சுகாடியர்களுள் 'புக்ஸ்' என்ற பிரிவினர் இந்த அம்மனை வழிபடுகின்றனர். 'தொலஜ' உருவத்தை 'கம்சலா' என்ற இனத்தவர்களிடம் செய்கின்றனர். இந்த அம்மனை பொன், பித்தளை போன்றவற்றில் ஒரே நாளில்

செய்து முடிக்க வேண்டும் என்ற நிபந்தனை இவர்களுக்கு உண்டு. இவ்விதமாக ஒருநாளில் தயார்செய்த விக்கிரகத்தை ஒரு பெட்டியில் வைப்பர். பிள்ளைகள் பிறந்தால் அவர் களுக்குத் தலைமுடி எடுக்கும் சமயத்தில் 'தொலஜு' விக்கிரகத்தைச் சுத்தம் செய்து பூசை மேற்கொள்வர்.

## முனீஸ்வரனைப் பூசை செய்யும் விதம்

முனீஸ்வரனைச் சாதாரணமாகச் சூத்திரர்களுள் சில இனத்து மக்கள் மட்டுமே வணங்குகின்றனர். பிள்ளை களுக்குத் தலைமுடி எடுக்கும் நிகழ்ச்சிகளையே "முனீஸ் வரன் பூசை" என்பர். சில இடங்களில் முனீஸ்வரன், முனுசாமி என்றும் அழைப்பர். முனீஸ்வரனைப் பூசை செய்பவர்கள் குழந்தை பிறந்து 5,9,11 ஆகிய மாதங்களில் பூசை செய்ய வேண்டும்; அல்லாவிட்டால் 3,5,9 ஆகிய வருடங்களிலும் பூசை மேற்கொள்ளவேண்டும். நேர்த்திக் கடனைச் செய்யாவிட்டால் கூந்தல் கெட்டியாகக் கட்டிக் கொள்ளுதல் வியாதிகள் தோன்றுதல்போன்றவை ஏற்படும்.

பெரும்பாலும் ஞாயிற்றுக்கிழமையில் முனீஸ்வரனுக்குப் பூசை செய்வர். அன்று வீட்டைக் கழுவிச் சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும். பூசை செய்வதை உறவினர்கள் அனைவருக்கும் தெரிவிக்க வேண்டும்; வீட்டில் உள்ள அனைவரும் குளிக்க வேண்டும். புலால் உணவு உட்கொள்ளுதல் கூடாது. தீட்டுப்படுதல் கூடாது. குழந்தையின் பெற்றோர்கள் அன்று உபவாசம் இருக்க வேண்டும். இவையனைத்தும் புனிதச் செயலாகக் கருதப் படுகின்றது.

பின்னர் முனீஸ்வரனைப் பூசை செய்யத் தேவையான பொருட்கள் அனைத்தும் வாங்கிக் கொள்ள வேண்டும். கருப்புக் கோழி, கருப்பு ஆடு, கருப்புப் பன்றி போன்ற வற்றைக் கொண்டு வருதல் வேண்டும். இதுமட்டுமல்லாது புதுப்பானை, தேங்காய், விபூதி, பழம், எலுமிச்சைப் பழம்,

தாழம்பூ, ஊதுவத்தி,கற்பூரம்,பாக்கு, வெற்றிலை, கரும்பு, வளையல் போன்றவற்றைப் படைப்பர். மேலும் பொறி, கடலை, பேரீச்சம்பழம் போன்றவற்றைக் கோயில் உள்ள இவர்களது பொருளில் வைப்பர். பின்னர் கற்பூர ஆரத்தி எடுத்து பிள்ளைகளின் தாயார் கூடையை தலை மேல் வைத்துக் கொண்டு வீதியில் வரும்போது அந்த அம்மையாருக்கு எதிரில் யாரும் வரக்கூடாது. அவ்வாறு யாராவது குறுக்காக வந்தால் அவர்களுக்குப் பல தொல்லைகள் நேரிடும் என்று நாட்டுப்புற மக்கள் நம்பு கின்றனர். அன்று உறவினர்கள் அனைவரும் முனீஸ்வரன் ஆலயத்தை அடைவர். வண்ணான் என்பவன் முனீஸ்வர னின் உருவத்தைக் களிமண்ணால் தயார் செய்து வைத்துக் கொண்டிருப்பான்.

இந்த சிலை முனீஸ்வரின் கோயிலுக்கு முன்பு இருக்கும் இந்த சிலைக்கு நான்கு பின்னல்கள் இருக்குமாறும், நாக்கு வெளியே நீண்டிருக்குமாறும் செய்து பூசை செய்வர். வெளியே நீண்டிருக்கும் நாக்கிற்குக் குங்குமம் வைப்பர். பின்னர் சிலையைச் சுற்றி ஒன்பது தாம்பூலங்களை வைப்பர். இவைகளில் இரண்டு பாக்கு, நாணயம் போன்றவற்றை வைப்பர். இதுமட்டு மல்லாமல் ஒன்பது எலுமிச்சை, ஒன்பது பேரீச்சம்பழம், ஒன்பது விபூதிப் பழம், ஒன்பது வாழைப் பழம் போன்றவற்றை வைப்பர். கோயிலுக்கு உட்புறம் உள்ள முனீஸ்வரரின் சிலைக்கு மஞ்சள் பூசி, குங்குமம் வைத்து, விபூதிப் பூசி மலர்களால் அலங்கரிக்கப்பட்டு மூன்று பேரீச்சம் பழத்தைப் படைப்பர். பச்சை நூலை கோயிலுக் கும் சிலைக்கும் மூன்று சுற்றுக்கள் சுற்றுவர். புதிய பானையில் அரிசி போட்டு பொங்கல் வைப்பர்; சோற்றில் வெல்லம், நெய், பால் போன்றவற்றைக் கலப்பர்.

இந்த பொங்கல் சோற்றை மூன்று வாழை இலையில் வைத்துப் படைப்பர். போத்துராஜா சிலை உள்ள இடத்தில் பொங்கல் சோற்றை வைத்துப் படைப்பர். பொறி, கடலை

போன்றவற்றையும் இலையில் வைத்துப் படைப்பர். கரி, செங்கல், வெள்ளைக்கல் போன்றவற்றைக் கொண்டு கோயில் முன்பு கோடு போல் வரைவர். இந்த கோட்டின் மீது பொறி, கடலை, அரிசி போன்றவற்றைப் போட்டு, குழி செய்து எண்ணெய் வளர்த்து தீபம் ஏற்றுவர். இவ்விதமாகப் பூசை நடைபெறும் போது வாய்க்குத் துணி கட்டி வைத்து இருப்பர். இம்மாதிரியான பூசையை அனுபவம் மிக்கப் பெரியவர்கள் செய்வர். பின்னர் கோயிலின் உற்புறமும், போத்துராஜா சிலையின் எதிரிலும் கற்பூரத்தைக் கொளுத்துவார்கள். பின்னர் இரண்டு இடத்திலும் தேங்காய் உடைப்பர்.

இவ்வாறாகச் செய்யும்போது சலூன் தொழிலாளி சிறுவர்களின் முடியை வெட்டுவர். இதனை சிலைக்கு முன்பு வைப்பார்கள். பின்னர் வண்ணான் சிலைக்கு எதிரில் ஒரு திரையைப் பிடித்து கருப்பு ஆட்டைப் பலி கொடுப்பர். பின்னர் பொங்கல் சோறு, சுண்ணாம்பு, மஞ்சள் தூள் போன்றவை கலந்த சோறு உருண்டைகள் மூன்றை வாழையிலையில் வைப்பர். பின்னர் பன்றியின் மீது மஞ்சள் பூசி, குங்குமம் தண்ணீர் தெளித்து கத்தியால் குத்துவர். பன்றியைக் குத்தும்போது வலி தாங்காமல் வாயைத் திறக்கும். அப்போது வாயினுள் சோறு உருண்டைகளைப் போடுவர். மஞ்சள், குங்குமம், தண்ணீர் தெளிப்பதை புனிதச் செயலாகக் கூறுவர்.

பன்றியைப் பலி கொடுத்த பின்னர் எல்லாருடைய தலைமுடிகளையும் மொட்டை அடித்து விடுவார்கள். நீராடிவிட்ட பிறகு "கம்சலா" என்ற இனத்தவர் காது குத்துவர். இதனைக் காது குத்துதல் நிகழ்ச்சி என்று பெயர். பின்னர் உறவினர்கள் கொண்டு வந்த பரிசுப் பொருட்களைக் கொடுத்து தேங்காய் உடைத்துப் பின்னர் கோழியைப் பலி கொடுப்பர். முனீஸ்வரனுக்குப் பூசை செய்பவர்கள் போத்துராஜா சிலைக்கருகில் உள்ள பொருட்களையும், தளிகைகளையும், பழங்களையும், எடுத்துக்

கொள்வர். சிலைக்கருகில் உள்ள பொருட்களை சலூன் தொழிலாளியும், வண்ணானும் எடுத்துக் கொள்வார்கள். ஆட்டுத்தலை, பன்றித்தலை, கோழித்தலை போன்றவற்றை வண்ணான் எடுத்துக் கொள்வான்.

பின்னர் அனைவரும் ஒன்று சேர்ந்து மேளங்கள் முழங்க வீடு நோக்கிச் செல்வர். உறவினர்களுக்கு இந்த மாமிசத்தைச் சமைத்துப் படைப்பர். முனீஸ்வரனைத் தொழுது கொண்டவர்களோடு மூன்று நாளைக்கு யாரும் பேசக்கூடாது. இவ்விதமாக முனீஸ்வரனுடைய பூசை மேற்கொள்ளப்படுகின்றது.

## அல்லியம்மனை வழிபடும் முறைகள்

சித்தூருக்கு அருகில் உள்ள எட்டேரி கோட்டாகரம் என்ற கிராமத்தில் அல்லியம்மனை வழிபாடு செய்கின்றனர். இந்த இரண்டு கிராமங்களிலும் அல்லியம்மாவை வழிபடும் முறை ஒன்று போலவே இருக்கும். அல்லியம்மாவிக்கிரகத்தை நீரில் கழுவி பித்தளையினால் செய்யப்பட்ட கண்களையும், கோரைகளையும் வைப்பதுண்டு. கையில் கத்தியை அமர்த்தி கத்தியின்மீது எலுமிச்சம் பழத்தைக் குத்துகின்றார்கள். பின்னர் மஞ்சள், குங்குமம், வைத்து தீபம் ஏற்றுவர். பின்னர் கற்பூரம் கொளுத்தி ஊதுபத்திகள் வைத்துப் பூசை செய்வர். அல்லியம்மனுக்குப் பூசை செய்யும் சுப்பிரமணி என்பவருக்கு ஆவேசம் வருகின்றது. ஆவேசம் வரும்போது வாழ்க்கையில் ஏற்பட்ட துன்பங்களையும், எதிர்காலத்தில் நிகழும் செயல்களையும் சொல்வர். இதனைக் 'குறி' சொல்வது என்பர். அல்லியம்மன் அந்த பூசாரி உள்ளத்தில் நிறைந்து செல்லுகிறார் என மக்கள் நம்புகின்றனர்.

அல்லியம்மன் நிறைந்ததும் வாயில் விபூதி, கற்பூரம் போன்றவற்றைப் போடுவர். ஒவ்வொரு நாளும் இந்த அம்மனுக்குக் கோழி, ஆடு போன்றவற்றைப் பலியாகக்

கொடுப்பர். எலுமிச்சைப் பழத்தில் கிராமதேவதையான ராஜேஸ்வரியின் உருவத்தை அமைத்துப் பூசை செய்யும் வழக்கம் இன்னும் பெங்களூரில் இருந்து வருகின்றது. செவ்வாய், வெள்ளி ஆகிய கிழமைகளில் இராகு காலத்தில் அறுக்கப்பட்ட எலுமிச்சைப் பழத்தில் தீபம் ஏற்றிப் பூசை செய்தால் நினைத்த காரியங்கள் நடக்கும் என்று மக்கள் நம்புகின்றனர்.

## சக்தி கல் நாட்டும் முறை

'சக்தி' கல் பொதுவாக எல்லா கிராமங்களிலும் இருக்கும். கிராம அபிவிருத்திக்கு சக்தி கற்கள் துணைபுரிகின்றன என்று கிராமத்தவர்கள் நம்புகின்றனர். சக்திக் கல்லை நிலைநிறுத்துவதில் மந்திரத்திற்கும் இடமுண்டு. கிராமத்தில் இருக்கும் வீதியின் கடைசியில் இரண்டு குழிகள் தோண்டுவர். இவைகளுக்கு அருகில் வெள்ளைப் பாறைகளையும் கற்பூர பொம்மைகளையும் வைப்பர். மந்திரவாதி இரண்டு குழிகளுக்கு நடுவில் மந்திரம் ஓதிக்கொண்டிருப்பான்; உடனே கற்பூர பொம்மைகள் தீப்பற்றி எரியும்; சக்திக் கற்கள் எழுந்து நின்று குழியில்நிற்கும்.

பின்னர் இந்தப் பாறைகளைக் கழுவி மஞ்சள் பூசி, குங்குமம் வைத்துப் பலி கொடுப்பர். கங்கையம்மன் திருவிழாவின்போது சக்தி கற்களுக்குப் பூசை செய்வர். சக்திக் கற்களைக் கழுவிய நீரை வியாதியுள்ளவர்கள் குடித்து வந்தால் வியாதிகள் குணமடையும் என்று மக்கள் நம்புகின்றனர்.

## பூமியை பூசை செய்யும் விதம்

பூமி பொறுமையுள்ள தெய்வமாக விளங்குவதால் பூமிக்குப் பூசை செய்யும் வழக்கம் இன்றும் இருந்து வருகின்றது. முக்கியமாக விவசாயம் செய்பவர்கள்

விளைச்சல் நன்கு விளையவும், ஆடு மாடுகள் விருத்தியடைய வும் பலி கொடுப்பர். விதைக்கும் சமயத்தில் ஒரு சிலையைச் சுத்தம் செய்து மஞ்சள் பூசி குங்குமம் வைத்து ஆட்டுக்கிடா, கோழி போன்றவற்றைப் பலி கொடுத்து வணங்குவர். பலி கொடுத்த விலங்கின் இரத்தத்தை சிலையைச் சுற்றிலும் தெளித்துச் சோற்றில் கலப்பர். இரத்தச் சோற்றைத் தெளிக்கும்போதுச் பொலி...பொலி என்று சொல்லிக் கொண்டே நிலத்தைச் சுற்றித் தெளிப்பர். பலி கொடுத்த விலங்கைச் சமைத்து உண்பர்.

மீதமுள்ள உடல் பாகங்களைகப் பூமியில் போட்டுப் புதைத்து விடுவர். பண்டையக் காலத்தில் பூமிக்கு நரபலி கூட கொடுப்பார்களாம். பிராமணப் பிள்ளைகளைக் கொண்டு வந்து பலியிடுவர். பூமிக்கு ஆண்டுக்கு இரண்டு அல்லது மூன்று முறை பூசை செய்வதுண்டு.

## கூழ் ஊற்றுதல்

கிராமங்களில் தொற்று நோய் பரவிய நேரத்தில் கூழ் ஊற்றுதல் நிகழ்ச்சி நடைபெறுகிறது. கூழ் ஊற்றும் முன் இரவு சாற்றுதல் நடைபெறுகிறது. அன்று இரவு பெண்கள் அரிசி, கேழ்வரகு கலந்து கூழ் செய்து படைப்பர். அன்று காலை பெண்கள் சாணம் தெளித்து சுத்தம் செய்து கோலம் போட்டு அலங்கரிப்பர்.

சுத்தம் செய்யப்பட்ட இடத்தில் வேப்பிலைகளை மூன்று குப்பைகளாகப் போடுவர். அந்த இலைகளில் கூழ் படைத்து அதற்கு மஞ்சள் பூசி, குங்குமம் வைத்து கற்பூர ஆரத்தி எடுத்து தேங்காய் உடைத்து வணங்குவர். மேலும் நடுத்தெருவில் கொப்பரை (கரும்புப் பாலைக் காய்ச்சப் பயன்படுவது) ஒன்றை வைத்து அதன் வாய்க்கு வேப்பிலை களைக் கட்டுவர்.

கிராமத்திலுள்ள பெண்கள் எல்லோரும் தங்களது வீடுகளில் செய்த கூழைக் கொண்டுவந்து கொப்பரையில் கொட்டுவர். கொப்பரையைச் சுற்றிக் கிராமத்தில் உள்ள சிறுவர்கள் வரிசைக் கிரமமாக உட்காருவர். அவர்களது கையில் தம்ளர் அல்லது செம்பு வைத்திருப்பர். கொப்பரைக்கு கற்பூர ஆரத்தி எடுத்து தேங்காய் உடைத்து வணங்குவர். கூடியிருந்த பிள்ளைகளுக்குக் கூழ் ஊற்றுவர். கூழ் ஊற்றியதும் அனைவரையும் கிழக்குத் திசையை நோக்கி விரட்டுவர். அச்சிறுவர்கள் விரைந்தோடுவதற்காக அவர்கள்மீது தண்ணீரைத் தெளிப்பர். இவ்வாறு செய்வ தால் கிராமத்தில் உள்ள அம்மை நோய் அகன்றுவிடுவதாக மக்கள் நம்புகின்றனர்.

## உப்பர தேவதைக்குப் பூசை செய்யும் முறை

உப்பர தேவதையை 'வண்ணான்' என்ற இனத்தவர் குலதெய்வமாக வணங்குவர். இவர்கள் வருடம் முழுவதும் தண்ணீரில் இருப்பதாலும், சலவைத் தொழில் செய்வதா லும் இவர்கள் உப்பர தேவதையை வணங்குவர். நீரினின்று இவர்கள் காக்கப்படவேண்டும் என்ற எண்ணத்துடன் இப்பூசையை மேற்கொள்வர். 'உப்பர' என்பது சலவை செய்யும் இடம் என்பதாகும். பூசை நாளன்று 'உப்பரா' என்ற இடத்தில் பச்சைப் பந்தல் போடுவர். அதற்கருகில் மற்றொரு பந்தலையும் போடுவதுண்டு.

ஒரு பந்தலில் கங்கையம்மன் சிலையையும், மற்றொரு பந்தலில் வீரபத்திரன் சிலையையும் வைப்பர். சிலைகளைத் தண்ணீரில் கழுவி மஞ்சள் பூசி குங்குமம் வைத்து, விபூதி பூசி, கற்பூரம் கொளுத்தி, ஆரத்தி எடுத்து தேங்காய் உடைத்து வணங்குவர். பொங்கல் செய்த சோற்றை வாழையிலையில் படைத்துச் சிலைகளுக்கு முன்பு வைப்பர். வீரபத்திர சிலைக்கும், கங்கையம்மன் சிலைக்கும் எதிரில்

திரையைப் பிடித்து ஆடு, கோழி போன்றவற்றைப் பலி யாகக் கொடுப்பர். உப்பர தேவதையைப் பொதுவாக எல்லா கிராமங்களிலும் வணங்குவர். பிறக்கும் குழந்தைகள் பருமனாக இராவிட்டால் உப்பராவில் அந்தக் குழந்தை களைச் சற்று நேரம் படுக்க வைத்துப் பின்னர் எடுத்துச் செல்வர். அவ்வாறு செய்வதால் குழந்தை பருமனாக வளரும் என்று மக்கள் நம்புகின்றனர்.

## கிராமத்திற்குக் கட்டு கட்டுதல்

கிராமங்களில் தொற்று நோய்கள் பரவாமலிருக்கக் கிராமத்திற்குக் கட்டு கட்டுவர். அந்த கிராமத்திற்குக் குல தெய்வமாக விளங்கும் தேவதையின் விக்கிரகத்தைக் கொண்டு வந்து கிராமத்தின் நுழைவு வாயிலில் கொண்டு போய் வைப்பர்! சிலையை நன்கு சமுவிப் பூசை செய்து எலுமிச்சைப் பழத்தை நறுக்கி அதில் குங்குமத்தை இட்டு கற்பூரம் வைத்துக் கொளுத்துவர். பின்னர் சிலையை ஒருவர் எடுத்துக் கொள்ள அவர்களைப் பத்து அல்லது பதினைந்து பேர் பின் தொடருவர். போகும் போது ஒருவர் தண்ணீர் தெளித்துக் கொண்டே செல்வர். மற்றொருவார் விபூதியை இரைத்துக் கொண்டே செல்வார்.

இவ்வாறு மூன்று முறைகிராமத்தை வலம் வருவதுண்டு. இறுதியாகச் சிலையை ஓரிடத்தில் வைத்துப் பூசை செய்து எலுமிச்சைப் பழத்தை அறுத்து நான்கு திசைகளிலும் வீசி எறிந்து விடுவர். பின்னர் தேங்காய் உடைத்து ஆடு அல்லது கோழி போன்றவற்றைப் பலியிடுவர். இவ்வாறாகச் செய்து கொண்டிருக்கையில் பூசாரிக்கு ஆவேசம் வருகின்றது. பக்தர்கள் அவரிடம் கிராமத்து செய்திகளைக் கேட்பார்கள். அதற்கு அம்மன் கிராமத்தின் நன்மை தீமை களையும் செய்யத் தகாதவைகளையும் செய்ய வேண்டியவற்றையும், பரவிய வியாதிகளையும், கால்

நடைகளுக்கு உண்டாகும் துன்பங்களையும் எடுத்துச் சொல்லும். மற்ற கிராமங்களில் இருக்கும் வியாதிகள் வராமல் தடுக்க கட்டுக்கட்டுதல் என்ற மந்திரச் சடங்கைப் பூசையுடன் மேற்கொள்கின்றனர்.

சித்தூர் மாவட்டத்தில் இத்தகைய பூசை முறைகள் குறைந்து காணப்படுகின்றன. விஞ்ஞான வளர்ச்சியும் கல்வி வளர்ச்சியும் இன்றைய இளைஞர்களின் சிந்தனையைத் தூண்டுவதால் இத்தகைய மந்திரச் சடங்கு களுக்கு இடமில்லாமல் போகின்றது.

## தவளைப் பூசை

கிராமங்களில் மழை பெய்யாத காலத்தில் மழை பொழிய வேண்டும் என்று வருண தேவனுக்குப் பூசை மேற் கொள்வதுண்டு. இதனையே நாட்டுப்புறமக்கள் தவளைப் பூசை என்பர். பெரும்பாலும் சிறுவர்களே இந்தப் பூசையை சிறப்பாக நடத்துவிக்கின்றனர். பெரிய தவளை ஒன்றைப் பிடித்துக் கொண்டு வநது உலக்கை ஒன்றில் இறுக்கமாகக் கட்டுவர். உலக்கையை ஆளுக்கொரு பக்கமாகச் சிறுவர்கள் எடுத்துக் கொண்டு வீடு வீடாகச் செல்வர்.

ஒவ்வொரு வீட்டிலும் பெண்கள் அந்த தவளைக்கு மஞ்சள் தண்ணீர் ஊற்றி மஞ்சள் பூசி குங்குமம் வைத்து தேங்காய் உடைத்து வணங்குவர். இவ்விதமாக எல்லா வீடு களும் பூசையை மேற்கொள்ளும். பூசை செய்த பின்னர் சிறு பிள்ளைகள் லப லப என்று வாயை அடித்துக் கொண்டு ஓ··· வென்று சத்தம் போடுவதுண்டு. தவளைக்குப் பூசை மேற்கொண்ட மூன்று நாள் கழித்துத் தவறாது மழை பெய்யும் என்று கிராமத்து மக்கள் நம்புகின்றனர். இத்தகைய பூசையைப் பலமனேர் வட்டத்தில் வாழும் மக்கள் சிறப்பாகச் செய்கின்றனர்.

## குரபல தேவதையும் பூசையும்

இத்தேவதையைக் 'குரபா' என்ற இனத்தவர் பூசை செய்வர். இது ஆண் தேவதை ஆகும். மாவட்டம் முழுவதும் வாழ்ந்து வரும் 'குரபா' இனத்தவர்கள் பல இடங்களில் இத்தேவதைக்குப் பூசை செய்தாலும் பூசை முறைகள் மட்டும் ஒன்றுபோலவே இருக்கும். குரபாக்களுக்கு வீரசைவ மதத்தைச் சார்ந்தவர்கள் குருவாகத் திகழ்கின்றன. இவர்கள் தெய்வத்திற்கு என்று விடப்பட்ட எருதைப் பிடித்துக் கொண்டு. தலையின் மீது விபூதிப் பெட்டியை வைத்துக் கொண்டு திருவிழா நடைபெறும் இடத்தைச் சுற்றியுள்ள கிராமங்களில் ஊர்வலமாகச் செல்வர். தங்களுடையக் குரு வருவதையறிந்த குரபாக்காள், தங்களுடைய வீடுகளைச் சுத்தமாக வைத்துக் கொள்வர். திருவிழா நடைபெறும் தேதியை அறிவித்துக் குரு காணிக்கைகளைப் பெறுவர். காணிக்கைச் செலுத்திய அனைவரையும் ஆசீர்வதிப்பார். அந்த வீட்டார்கள் தேவர் எருதுக்குப் பூசை செய்து முடிப்புகளைக் கட்டுவர்.

திருவிழா சமயத்தில் ஒவ்வொரு வீட்டாரும் 'கஞ்சி' பூசை மேற்கொள்வர். கஞ்சி என்பது சண்டைப் பதம். கஞ்சி என்றால் கம்பி கட்டை என்று பொருள்.

அரிசியை சுமங்கலிகளைக் கொண்டு சுத்தம் செய்ய வைப்பர். அரிசியை ஊற வைத்து மாவு இடிப்பர். மாவு இடிக்கும்போது கால்களில் தள்ளுதல் கூடாது. இந்த மாவைப் பாகு செய்வர். அதனை உருண்டைகளாகச் செய்வர். புதிய பானை ஒன்றில் மூன்று சேர் அரிசி, நான்கு பாக்கு, வெற்றிலை, மஞ்சள் கயிறு போன்றவை களாகப் போட்டு வெண்ணிற ஆடையைப் பானையைச் சுற்றிலும் கட்டுவர். இவ்விதமாகச் செய்யப்பட்ட பானையை ஆலம் கொம்பில் கட்டுவர். பின்னர் பூசை செய்வர்.

இவ்வாறாகக் காவடி போல் செய்து பூசை செய்வதைக் "கஞ்சி பூசை" என்பர். இவ்விதமாகப் பூசை செய்யும் போது தீட்டுப்படாமல் இருக்க வேண்டும். சஞ்சி பூசை நடந்த பின்னர் 'கூடை' கட்டுவர். கூடையில் பால் தயிர், மஞ்சள், குங்குமம், எண்ணெய், தேங்காய், வெல்லம் போன்றவற்றை வைப்பர். இதனைக் "கூடைக் கட்டுதல்" என்று பெயர். கூடையைப் பசுவின் சிறுநீரால் கழுவப்பட வேண்டும். இவ்விதமாக அமர்த்தப்பட்ட கூடையைச் சுமங்கலிகள் பூசைசெய்வர். வீட்டுக்கு மருமகன் கஞ்சியை எடுத்துக் கொள்வர். கூடையை ஒருவர் எடுத்துக் கொண்டுப் போவார். இவர்களுடன் பசுவின் சிறுநீரைக் கொழும்பு தெளித்துக் கொண்டு போவார்கள். இவ்விதமாகச் செய்வதனைப் புனிதச் செயலாகக் கொள்ளலாம்.

மற்ற பக்தர்கள் மாட்டு வண்டிகளில் பின்தொடர்வதுண்டு. இவ்வாறாகத் திருவிழா நடைபெறும் இடத்தை அடைந்ததும் ஒவ்வொரு நாளும் கஞ்சிக்கும் கூடைக்கும் இரண்டு முறை பூசை மேற்கொள்வர்.

அன்று மாலைசுமார் 4 மணியளவில் தலையின் மீது தேங்காயை உடைக்கும் நிகழ்ச்சி ஆரம்பமாகின்றது. இதனை ஆத்மஹிம்சை செயலாகக் கருதுவர். தேங்காயைத் தலையின் மீது உடைத்துக் கொள்ளும் பக்தர்களுக்கு சில நிபந்தனைகள் உண்டு. இவர்கள் நாற்பது நாட்களுக்கு விரதம் மேற்கொண்டு பெண்களுடன் உடல் உறவு வைத்துக் கொள்ள மாட்டார்கள்.

அவர்கள் வாழ்நாள் முழுவதும் விபச்சாரம் செய்யலாகாது. இறந்தவர்களுடைய வீட்டில் ஒன்பது நாட்களுக்கு உணவு உட்கொள்ளக் கூடாது. இந்த நிபந்தனைகளைப் புனிதச் செயலாகக் கொள்ளலாம். இந்த நிபந்தனைகளைக் கடைபிடிக்காமல் தலையின் மீது தேங்காயை உடைத்துக் கொண்டால் தலையில் இரத்தம் வெளிப்படும். அன்று இவர்கள் ஸ்நானம் செய்து விட்டு வரிசையாக

உட்காருவர். இவர்களுக்கு எதிராக குல தெய்வத்தின் சிலை வைக்கப்பட்டிருக்கும்; மற்றொரு புறம் தேவர் எருது இருக்கும். இவர்களுக்கிடையே குரு மூன்று கலசங்களை ஏற்பாடு செய்வார். இவைகள் பல வண்ணங்களில் இருக்கும். இதனைச் சுற்றிப் பச்சை நூலைக் கட்டி, மறு முனையில் தேவர் எருதையும், பக்தர்களையும் இணைக்கின்றார்கள்.

இவ்விதமாகச் செய்த பின்னர் கலசத்திற்கும், தேவர் எருதுக்கும் தேவதைக்கும் கற்பூர ஆரத்தி எடுக்கின்றனர். பூசை செய்த பின்னர் விபூதியைத் தேவர் எருதின் வாயிலும், பக்தர்களின் வாயிலும் போடுவர்; முதன் முதலாகத் தேங்காயை தேவர் எருதின் தலையின்மீது உடைத்ததும், பக்தர்களின் தலையின்மீது ஜங்கமகுரு உடைப்பார். தேங்காய் சுக்கு நூறாக உடைத்துச் சிதறும் போது மக்கள் ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டிருப் பார்கள். பத்து வருடங்கள் முடிந்த சிறுபிள்ளைகள்கூட தேங்காயை உடைத்துக் கொள்வர்; சிலர் அதிகமான தேங்காய்களை உடைத்துக் கொள்ள விருப்பம் தெரிவிக் கின்றனர். தேங்காய் உடைக்கும் நிகழ்ச்சி பொதுவாக பள்ளமான இடங்களிலேயே நடைபெறுகின்றது. பள்ளமான இடத்தில் இத்தகைய நிகழ்ச்சிகள் நடைபெற்றால் மேலிடத்திலிருந்து பார்ப்பவர்களுக்கு ஏதுவாய் இருக்கும். அன்று இரவு தீபம் ஏற்றுதல் நிகழ்ச்சி நடைபெறு கின்றது.

கஞ்சியில் கொண்டு வந்த எண்ணையினை ஊற்றி தீபம் ஏற்றுவர். தீபம் அணைந்து போகாமல் இருக்க வெற்றிலைகளால் தடுப்புச் சுவர் ஒன்றை அமர்த்துவர். அந்த வீட்டு ஆண்களுக்கு அவர்களுடைய அத்தை உடை களை பரிசாகக் கொடுப்பர்; குடும்பத்தலைவர் நீண்டதொரு துணியின் ஒரு புறத்தில் சும்மாடு அமைத்துக் கொண்டு தலையின் மேல் வைத்துக் கொண்டு அதன் மீது பாத்திரத்தை வைப்பர்; இவர் புத்தாடைகளை அணிந் திருப்பார்.

ஆடையின் மறுமுனையைத் தலைக்குச் சுற்றிக்கொண்டு கணவனிடத்தில் உள்ள தீபத்தைத் தன்னுடைய தலைக்கு மாற்றிக் கொள்கின்றாள். இதே விதமாக மைத்துனர், அண்ணி ஆகியவரும் தீபத்தைத் தலையில் ஏற்றிய வண்ணம் இருப்பர். இறுதி நாளில் அவர்களுடைய குல தெய்வத்தைச் சிலை உருவாக வைத்து பூசை செய்து காணிக்கைகளாகப் படைப்பர். இதோடு தேவார நிகழ்ச்சி முடிவடைகின்றது. குரபல தேவதைகளை பலமனேருக்குச் சமூகமாக உள்ள பைரெட்டிப் பல்லிக்கு 3 கல் தூரத்தில் இருக்கும் மலைப் பகுதியில் மூன்று வருடத்திற்கு ஒரு முறையும் 5 ஆண்டுக்கு ஒரு முறையும் பூசை செய்து வணங்குவதுண்டு.

## கரகங்களை இடம் பெயர்த்தல்

ஒவ்வொரு கிராமங்களிலும் பொதுவாக அம்மை நோய், காய்ச்சல் போன்றவை இருக்கும் சமயத்தில் கரகத்தை ஒரு கிராமத்தின் எல்லையிலிருந்து மற்றொரு கிராமத்தின் எல்லை வரைக்கும் எடுத்துச் செல்வதுண்டு. முதலில் கிராமத்தில் பச்சை பந்தல் போட்டு அதன்மேல் வேப்பிலைகளைப் பரப்பி மூன்று குடங்களை வைப்பர். இந்தக் குடங்களில் தண்ணீரை நிரப்பி, மஞ்சள், குங்குமம் போன்றவற்றைப் போட்டு வைப்பர். இந்தப் பானையைத் தேவதையாகக் கருதிப் பூசை செய்கின்றனர். இவற்றின் முன்பு ஒரு தட்டில் விபூதியை வைப்பர். வியாதியுள்ளவர்கள் இந்தக் குடத்திற்குப் பூசை செய்து தண்ணீரையும், சற்று விபூதியையும் கலந்து உட்கொண்டால் வியாதி குண மடையும் என்று நம்புகின்றனர்.

கரகத்திற்கு முன்பு நாள் சாற்றுதல் நிகழ்ச்சியைச் செய்கின்றனர். கிராமத்தவர்கள் அன்றைக்குரிய பூசைப் பொருட்களை வாங்கி வந்து தயாராக வைத்துக் கொள் கிறார்கள். அன்று பெண்கள் தங்களுடைய வீடுகளைக்

கழுவிச் சுத்தம் செய்து கொள்கிறார்கள். சுத்தமான ஒரு மட்சிப்பியில் தண்ணீர் ஊற்றி அதில் குங்குமம், மஞ்சள் நாணயம் போன்றவற்றைப் போடுவர். நடு வீட்டில் வேப்பிலையை வைத்து அதன்மீது மட்சிப்பியை வைப்பர். அந்த மண் சிப்பிக்கு மஞ்சள் பூசி, குங்குமம் வைத்து தேங்காய் உடைத்துக் கற்பூர ஆரத்தி எடுப்பர். இதனையே கரகம் என்பர். இதனைக் கூடையில் வைப்பர். இவ்விதமாக கிராமத்தில் உள்ளவர்கள் கொண்டுவரும் போது பூசாரிக்கு ஆவேசம் வருகின்றது. அவர் கரகத்தைப் பூசை செய்து சாட்டையால் தன்னை அடித்துக் கொண்டு முன்னே செல்ல கரகம் உள்ள கூடையைத் தலை மேல் எடுத்துக் கொண்டு கிராமத்தவர்கள் பூசாரியைப் பின் தொடருவார்கள். இவ் விதமாகக் கிராமத்தின் எல்லையைக் கடந்து பக்கத்துக் கிராமத்தின் எல்லையோரத்தில் கரகத்தை வைத்து விட்டதும் பூசாரிக்கு ஆவேசம் நின்று விடுகின்றது. அந்தக் கரகத்துடன் கோழிக்குஞ்சு ஒன்றையும் வைத்து விட்டு வந்து விடுவர்.

பக்கத்துக் கிராமத்தவர்கள் அந்தக் கரகத்தை எடுத்துக் கொண்டு தங்களுடைய கிராமத்தின் எல்லையைக் கடந்து அருகிலுள்ள கிராமத்தின் எல்லையில் வைத்துவிட்டு வீடு திரும்புவார்கள். இவ்வாறாக எல்லா கிராமத்தவரும் கரகத்தை இடம் விட்டு இடம் பெயர்த்து இறுதியாக சமுத்திரத்தில் சேர்த்து விடுவது உண்டு. இவ்வாறாகச் செய்தால் கரகத்துடன் வியாதியும் கிராமத்தை விட்டுச் செல்கின்றது என நம்புகின்றனர்.

### தீவட்டி சுமத்தல்

கிராம தேவதை தங்களுடைய வேண்டுதல்களை நிறை வேற்றியதற்காகவும், விளைச்சலை நன்கு பெருகப் பண்ணியதற்காகவும் நன்றி செலுத்தும் வகையில் "தீவட்டி சுமத்தல்" என்ற நிகழ்ச்சியை மேற்கொள்வர்.

தீவட்டி சுமக்கும் நாளில் பெண்கள் கோயிலுக்கு அருகில் பொங்கல் வைத்து தேவதைக்குப் படைப்பர். சட்டியில் நெய் ஊற்றி விளக்கேற்றி தலையின்மீது வைத்துக் கொண்டு வணங்குவர். அந்நேரம் காணிக்கைகளையும் செலுத்து வதுண்டு. கிராமத்தவர்கள் எல்லாரும் சேர்ந்து ஆட்டுக் கிடாவைப் பலியாகக் கொடுப்பர். ஒவ்வொரு ஆண்டும் புங்கனூர், பலமனேர் போன்ற இடங்களில் ஆடு, கோழி போன்றவற்றைப் பலி கொடுப்பர். மொலகல புன்னமியன்று மதனபல்லி, புங்கனூர், வாயல்பாடு போன்ற வட்டங்களில் இன்னும் தீவட்டி சுமத்தல் நிகழ்ச்சி நடைபெறுகின்றது.

## முறை கட்டும் தேவதை

யுகாதிப் பண்டிகை நாளுக்கு மறுநாள் மாமிசம் தின்பதற்காகவும், மக்களைக் காப்பாற்றுவதற்காகவும் கிராம தேவதைகளுக்குப் பலி கொடுத்து வணங்குவதுண்டு. ஆடு, கோழி போன்றவற்றையும், எருமைமாடு போன்ற வற்றையும் பலி கொடுப்பர். பாலமநேருக்கு அருகில் உள்ள கீல்பட்டு என்ற கிராமத்திலும் இன்னும் சில கிராமங் களிலும் இந்நிகழ்ச்சியைச் செய்வதுண்டு.

## வலசை தேவதை

கிராமங்களில் மழை பெய்யாவிட்டால் வலசை தேவதையை வழிபடுகின்றனர். கிராமத்தை விட்டு ஒரு நாள் வெளியே சென்று இந்த அம்மனுக்குப் பூசை செய்வதால் வலசை என்று பெயர் வந்தது. இந்த தேவதைக்குப் பூசை செய்யும் முன்பு ஊர்ப் பெரியவர்கள் வலசைப் போகும் நாளை ஊர் முழுவதும் சாற்றுவர். வலசைப் போகும் நாட்காலை கிராமத்திலுள்ளவர்கள் ஒரு வேளைக்கு வேண்டிய உணவுப் பொருட்களையும், தட்டு முட்டுச் சாமான்களையும் தங்களுடன் எடுத்துக் கொள்வர். தங்களுடன் ஆடு, மாடுகள் காலம் கழிக்க வானொலி

போன்றவற்றையும் எடுத்துச் செல்வதுண்டு. கிராமத்திற்கு வடக்குப்புறம் உள்ள ஏதாவது ஒரு தோப்புக்குச் செல்வர். பகல் உணவைச் சமைத்துக் கொண்டிருக்கையில் பூசாரியும் மற்ற ஊர்ப் பெரியவர்களும் ஒரு சிலையைக் கொண்டு வந்து கழுவி ஓரிடத்தில் நிலைநாட்டி மஞ்சள், குங்குமம் வைத்து கற்பூரம் கொளுத்தி, தேங்காய் உடைத்து வணங்குவர்.

பின்னர் சமைக்கப்பட்ட சோறு, பூ, பழம் வெற்றிலைப் பாக்குப் போன்றவற்றையும் படைப்பதுண்டு. அன்று வாலிபர்களுக்கிடையே விளையாட்டுப் போட்டிகள் பாட்டுப் போட்டிகள் போன்றவை இருக்கும். வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசும் உண்டு. அன்று மாலை 5 மணி யளவில் அனைவரும் ஒன்று சேர்ந்து கிராமத்திற்குள் வருவர். அன்று நாள் முழுவதும் தலையாரி என்பவர் கிராமத்திற்குக் காவலர்களாக இருப்பார்கள்.

## வெலி தேவதை

கிராம தேவதையின் அபிவிருத்திக்காக வெலி தேவதைக்குப் பூசை செய்வர். கிராமத்திலுள்ளவர்களிடம் பூசைப் பொருட்கள், உணவுப் பொருட்கள் போன்ற வற்றைச் சேகரிப்பர். அன்று காலை கிராமத்திற்கு வெளியே கங்கையம்மன் சிலையை நிற்க வைத்துப் பச்சைப் பந்தல் போட்டு மலர்களால் அலங்கரிப்பர். பின்னர் மஞ்சள் பூசி குங்குமம் வைத்து தேங்காயை உடைத்து ஆரத்தி எடுத்து வழிபடுவர். அன்னேரம் சேகரித்த உணவுப் பொருட்களைச் சமைத்து தேவதைக்குப் படைப்பதுண்டு. அன்று தேவதைக்கு ஆடு, கோழி போன்றவற்றையும் பலி இடுவதும் உண்டு. சமைத்த உணவுப் பொருட்களை மற்ற கிராமத்தவர்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்து மாலையில் வீடு திரும்புவதுண்டு. சித்தூர் மாவட்டத்தில் எல்லா கிராமங்களிலும் இந்த பூசை நடைபெறுகின்றது.

## சொரவ தேவதை

மேகங்கள் சூழ்ந்து மழை பெய்யாவிட்டால் பயிர்கள் காய்ந்துவிடும். இது போன்ற சமயத்தில் சொரவ தேவதைக்குப் பூசை நடத்துகின்றனர். கிராமத்தின் நான்கு திசைகளிலும் நான்கு கங்கையம்மன் கற்கள் இருக்கும். அன்று இந்தக் கற்களைச் சுத்தம் செய்து மஞ்சள் பூசி, குங்குமம் வைத்தும் பொட்டு வைத்தும் பூசை செய்வர். மேற்குப்புறம் உள்ள கங்கையம்மன் சிலைக்குப் பொங்கல் வைத்து ஆட்டுக்கிடாவைப் பலி கொடுப்பர். பொங்கல் சோற்றில் இரத்தம் வேப்பிலை கலந்து பொலி, பொலி என்று இரைப்பர்.

கிராமத்தின் நான்கு திசைகளிலும் தோட்டி என்பவர் இந்தப் பலி சோற்றைத் தெளிப்பார். ஒரு தோட்டி பலி சோற்றை இரைத்துக் கொண்டு முன்னே செல்ல அவனைப் பின் தொடர்ந்து மற்றொரு தோட்டி கத்தியைப் பிடித்துக் கொண்டு போவான். அவ்வாறு பின் செல்லாவிடில் பலி சோற்றை இரைக்கும் தோட்டியைச் சக்தி தாக்கக் கூடும் என்று கிராமத்தவர்கள் நம்புகின்றனர். 'பொலி' நிகழ்ச்சி முடிந்தவுடன் கிராமத்தவர்கள் அனைவரும் பலி கொடுத்த மாமிசத்தைப் பங்கிட்டுக் கொள்வர். தோட்டிக்குக் கால்களும், வண்ணானுக்குத் தலையும் கொடுத்து விடுவார்கள்.

கிராம தேவதை வணக்கத்தில் மக்களுக்கு தெய்வ நம்பிக்கையும், சத்தியம், தர்மம், நீதி போன்றவற்றின் மீது நம்பிக்கை வளருகின்றது. புனிதச் செயல் மூலமாக பக்தர்களின் உள்ளமும் சுத்தமடைகின்றது. அதுமட்டுமல்லாமல் உள்ளத்தில் நல்ல சிந்தனையும், நல்ல பண்பு ஒழுக்க நலன்களும் தோன்றும். பூசைக்கு முன்பு உண்ணா விரதம் இருப்பதால் உடல் நல்ல ஆரோக்கியத்தைப் பெறுகின்றது. பூசைக்குப் பயன்படுத்தும் மஞ்சள், குங்குமம், கற்பூரம் போன்றவைகளுக்கு நோய்க் கிருமிகளை அழிக்கும் தன்மைகள் மிகுந்துள்ளன.

கங்கைப் பண்டிகை சமயத்தில், மஞ்சள், குங்குமம், கற்பூரம் ஆரத்தி எடுத்தல், வேப்பிலையைத் தெளித்தல் போன்றவற்றால் கிராமத்தில் உள்ள நோய்கள் சம்பந்தப் பட்ட நோய்க்கிருமிகள் அழிய வாய்ப்புண்டு. பூசையின் போது பச்சிலைகள் பல இடம் பெறுகின்றன. ஒவ்வொரு தேவதைக்கும் ஒரு இலையைப் புனிதச் செயல்களில் பயன் படுத்துவதைக் காணலாம். அதற்கு அறிவியல் பூர்வமான காரியங்கள் பல சொல்லலாம்.

## இறைவனும் — இலைகளும் — பயன்களும்

## சிவன் — வில்வ இலை

சிவ சிவா என ஆலயத்தில் சிவலிங்க பூசை செய்து கொண்டு போதுமான உடல் உழைப்பின்றி இருந்தால் உடல் நலம் தொடர்ந்திருக்காது. தக்க உழைப்பிற்குப் பின்னர் சிவனுக்கு உகந்ததாகக் கூறும் வில்வம் இலைகளை அவ்வப்போது நான்கு அல்லது ஐந்து மென்று விழுங்கி உணவையும் உட்கொண்டு வந்தால் நல்ல முறையில் ஜீரணமடைந்து உணவின் முழுச் சக்தியையும் உடல் பெறும். உடலின் கண் இருக்கும் விஷத்தன்மையும் நீக்கும்.

## சக்தி — வேப்பிலை

அன்னையே ஆதிபராசக்தியே எங்களை என்றென்றும் காப்பாற்றணும் என வேண்டுதலால் மட்டும் உடல் நலம் பெற்றிருந்து விடாது. சக்திக்குரிய வேப்பிலையை வேக வைத்து எடுத்த சாற்றை அவ்வப்போது சிறிது அருந்தி வந்தால் உடலிலுள்ள நோய்க்கிருமிகள் அழிவதுடன் கிருமிகள் உற்பத்தியாகாமலும், அன்றாட உடலுறுப்புத் தேய்மானங்களும் அன்றாடம் புதுப்பிக்கப்பட்டும் இறுதி வரை முழுச்சக்தியுடன் பிணியின்றி வாழ்ந்திடலாம்.

## விநாயகர் — அருகம்புல்

ஆதி முதல்வா! மூத்தவனே, விநாயகனே! எனக் கூறி கணபதி பூசை செய்து கொண்டிருந்தால் மட்டும் வலியின்றி வியாதியின்றி வாழ்ந்து விட முடியாது. பிள்ளையார்க்கு உரியதெனக் கூறும் அருகம்புல்லை வாரம் ஒரு முறை வேகவைத்து கஷாயம் தயாரித்துக் குடித்து வந்தால் வலியும், வியாதியும் இன்றி வாழலாம். (உ.ம்) மனித உணவையும் மனித மலத்தையும் உண்கின்ற நாய்கள் தமக்கு ஏற்படும் வயிற்றுக்கோளாறுகளை நிவர்த்தி செய்து கொள்ளச் சிறிது அருகம்புல்லை மேய்ந்து தின்று விழுங்கிப் பின்னர் கக்கி விடுவதைப் பலர் பார்த்திருக்கலாம். பழமொழி: ஆகாதது அருகம்புல்லில் ஆகும்.

## கங்கை — மாவிலை

கங்கா தேவியே! உலகமெல்லாம் மழையாகப் பெய்து வளமான வாழ்வினை எல்லோர்க்கும் நல்க வேண்டும் என்று விண்ணப்பித்து வந்தால் மட்டும் நலமுடன் வாழ்ந்து விட முடியாது. கங்கைக்கு (நீர்) உரிய மாவிலைகளை வேகவைத்து அவ்வப்போது கஷாயம் இறக்கிக் குடித்து வந்தால் நம் உடலில் நீரினால் உண்டாகும் வியாதிகளை நீக்கிக் கொள்ளலாம். (உ.ம்) கும்பாபிஷேகங்களிலும், புது மனைப் புகுவிழாக்களிலும், கலசங்களிலும் நீரை மாவிலையால் தூய்மையடையச் செய்து மக்கள் மீதும், வீடுகளிலும் தெளிக்கின்றார்கள் அல்லவா?

## திருமால் — துளசி

ராமா! கோவிந்தா! கண்ணா! கிருஷ்ணா! பெருமானே! வெங்கடாஜலபதியே! எனக் கோவிலில் ஓங்காரக் குரல் எழுப்பிக் கும்பிட்டு வருவதால் மட்டும் பலம் பொருந்திய

வாழ்வினை அடைந்துவிட முடியாது. திருமாலுக்குரிய துளசி இலைகளைப் பறித்து அவ்வப்போது மென்று தின்று வந்தால், நமது உடலின் எலும்பும் தசையும் உறுதி யடைந்து பலத்தைப் பெறும். நல்ல உடலுடன் வாழ்ந் தால் ''தூய உள்ளம்'' பெற்று மற்றவர்க்கும் உதவும் குணம் வளரும்.

## பிரம்மன் — அத்தியிலை

பிரும்மதேவன் கோவில்களில் பெரும்பாலும் அத்தி மரம் இருக்கும். பிரும்மா தேவா! நான்முகனே! என்று பிரம்மனை வேண்டுவதால் மட்டும் பிரம்மன் பூரண ஆயுளைக் கொடுத்துவிட மாட்டான். நான்முகனுக்குரிய தெனச் சொல்லப்படும் அத்திமர இலைகளை அனுதினமும் இரண்டு தின்று விழுங்கி வந்தால் உடலில் பாய்ந்தோடும் இரத்தம் சுத்தமடைந்து உடல் ஆரோக்கியத்துடன் நெடுங் காலம் நீடுழி வாழ்வோம்.

ஆய்வின் முடிவாக பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

1. தமிழிலும், தெலுங்கிலும் பாடப்பெறும் நாட்டுப் புறப் பக்திப் பாடல்களை அனைவராலும் பாடமுடியாது.

2. குடும்ப வாழ்க்கையில் இன்பத்தையும் துன்பத்தை யும் அனுபவத்தின் மூலமாகத் தெரிந்து கொண்டு, இல்லற வாழ்க்கையில் வெறுப்படைந்து, இறைவனுடைய திருவருளை அடைய வேண்டுமென்ற விருப்பமுடைய வர்களே இப்பாடல்களை உருவாக்குகின்றனர்.

3. இயற்கை வழிபாட்டில் தமிழர்களும், தெலுங்கரும் நம்பிக்கை வைத்துள்ளனர். இத்தெய்வங்களுக்கு மேற் கொள்ளப்படும் பூசைகளும், பொருத்தனைகளும், விழாக் களும் தமிழ், தெலுங்கு மக்களிடையே ஒன்றுபட்டுக் காணப் படுகின்றன.

4. நமது நாட்டில் எண்பது விழுக்காடு பேர் மரவழி பாடு செய்கின்றனர். தமிழரிலும், தெலுங்கரிலும் பெண் களே மரவழிபாட்டில் மிகுதியான நம்பிக்கையும் ஈடுபாடும் கொண்டுள்ளனர்.

5. 'பசு' வழிபாடும், பாம்பு வழிபாடும் தமிழர்களை விட தெலுங்கரிடத்தில் சிறப்பாகக் காணப்படுகின்றன. இம் மாவட்டத்தில் பசு, பாம்பு வழிபாடுகளைக் குறித்த தெலுங்குப் பாடல்கள் சிறப்பாகப் பாடப்பெறுகின்றன.

6. பெருந்தெய்வ வழிபாட்டில் தமிழரும், தெலுங் கரும் விநாயகருக்கு முதலிடம் அளிக்கின்றனர்.

7. இம்மாவட்டத்தில் வாழும் தமிழர்கள் முருகனை முழுமுதற் கடவுளாகப் போற்றியும், கருதியும் வழிபடுவது போல, தெலுங்கர் ஸ்ரீ வெங்கடேஸ்வரனை முழுமுதற் கடவுளாகக் கருதி வணங்குகின்றனர். முருகனைப் பற்றிய பாடல்கள் தமிழரிடம் மிகுதியாகக் காணப்படுவது போன்று தெலுங்கரிடம் ஸ்ரீ வெங்கடேஸ்வரனைப் பற்றிய பாடல் கள் காணப்படவில்லை.

8. சக்தி வழிபாட்டில் தமிழரும், தெலுங்கரும் ஆழ மான நம்பிக்கை வைத்துள்ளனர். சக்தி வழிபாட்டில் மேற் கொள்ளப்படும் விரதம், பூசைகள், பொருத்தனைகள், விழாக்கள் போன்றவைகளில் தமிழரும், தெலுங்கரும் பெரும்பான்மையாக ஒன்றுபடுகின்றனர். சிற்சில நிகழ்ச்சி களில் வேறுபடுகின்றனர். இத்தகைய மாற்றத்திற்குக் காரணம் பொருளாதாரமும், கலாச்சாரப் பண்பாடும் ஆகும்.

9. இம் மாவட்டத்தில் தமிழர்களாலும், தெலுங்கரா லும் வழிபடும் சிறுதெய்வங்களுள் ஆண் தெய்வங்களுள் பெண் தெய்வங்கள் மிகுதியாக உள்ளன. தமிழரும், தெலுங்கரும் பெண் தெய்வங்களுக்குச் சிறப்பாக விழா எடுக் கின்றனர்.

10. சித்தூர் மாவட்டத்தில் தமிழரும், தெலுங்கரும் கங்கையம்மன் திருவிழாவைச் சிறப்பாக நடத்துகின்றனர். திருப்பதியில் கங்கையம்மனுக்கு மிகவும் சிறப்பாக விழா எடுக்கின்றனர். தெலுங்கர் இவ்வம்மையார்பால் மிகுதியான நம்பிக்கையும், ஈடுபாடும் கொண்டுள்ளனர்.

11. கிராமதேவதைகள்பால் தமிழரும், தெலுங்கரும் ஆழ்ந்த பக்தியும் பயமும் கொண்டுள்ளனர். தெலுங்கர் 'எல்லம்மா' என்ற கிராம தேவதைக்குச் சிறப்பாக விழா நடத்துகின்றனர். தமிழரிலும், தெலுங்கரிலும் தாழ்த்தப்பட்ட மக்களே கிராம தேவதைகளிடம் ஈடுபாடும், நம்பிக்கையும் கொண்டுள்ளனர்.

12. ஆதி மனிதர்களது பிரார்த்தனையில் தனது விருப்பங்களே தெய்வ சக்திக்கு எடுத்துரைப்பாகத் தெரிகின்றது. இதற்குப் பிரதி பலனாகவும், நன்றி செலுத்தும் வகையிலும் காணிக்கைகளைச் செலுத்துவதைக் காண முடிகின்றது. இது மட்டுமேயன்றி அவனது பிரார்த்தனை முறையில் வேறு எதனையும் காண முடியவில்லை.

13. தெய்வ சக்தியைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதற்கும், கடுமையான வேலைகளை எளிதில் முடிப்பதற்கும் மந்திரங்களைக் கையாண்டனர் என்பதை உணர முடிகிறது.

14. தந்திரம் என்பது தெய்வ சக்தியைப் பெறுவதற்குச் சில தனிப்பட்ட முறைகளைக் கையாளும் சடங்கு என்றும்; இது வைதீக மதத்திலிருந்து தோன்றியது என்றும்; இரகசியமாகவே இது வளர்ந்து வரலாயிற்று என்றும் கூறலாம்.

15. இறந்தவர்களுடைய ஆவிகள்தாம் உயிரோடு இருக்கும் போது விருப்பம் கொண்டவற்றை விரும்புகின்றன என்று ஆதி மனிதர்கள் நம்பினர். அதற்காக அவர்கள் ஆவிகளுக்கு ஏதாவது காணிக்கை செலுத்தும் வழக்கத்தை

ஏற்படுத்திக் கொண்டனர். இந்த சடங்கின் வளர்ச்சி நிலையே 'பலி' ஆக உருவெடுத்தது என்று கூறலாம்.

16. ஆதி மனிதர்கள் தங்களுடைய பயிர்கள் நன்கு விளைச்சல் தரவும், தொற்று வியாதிகள் வராமல் தடுக்கவும் கால்நடைகள் கன்றுகள் போடவும், பணம் சேரவும் அதிர்ஷ்டம் வந்து சேரவும், தேவதை கருணை காட்டவும் நரபலி கொடுத்து வந்ததாகத் தெரிகின்றது. ஆனால் சித்தூர் மாவட்டத்தில் அத்தகைய பலி இன்று காணப் படவில்லை.

17. விலங்கு பலி இன்றும் சித்தூர் மாவட்டம் முழுவதும் பரவலாகக் காணப்படுகின்றது. முக்கியமாக கங்கையம்மன், காளி, எல்லையம்மன் போன்ற சக்தி தேவதைகளுக்கு 'பலி' கொடுக்கின்றனர். முக்கியமாக எருமைகிடா, ஆடு, கோழி போன்றவற்றையே இன்று பெருமளவில் பலி கொடுக்கின்றனர். இந்த பலி நிகழ்ச்சி சாதியின் அடிப்படையிலும் நடைபெறுவதைக் காண முடிகின்றது. தாழ்த்தப்பட்ட மக்கள், பழங்குடிகள் போன்றவர்கள் எருமை கிடாவையே பெரும்பான்மையாகப் பலி இடுகின்றனர். மற்ற இனத்து மக்கள் ஆடு, கோழி போன்றவற்றைப் பெரும்பான்மையாகப் பலி இடுவதைக் காண முடிகிறது. இதற்குப் பொருளாதார வசதியும், உண்ணும் பழக்கமும் காரணங்களாக அமைகின்றன.

18. ஆய்வுக்களமாக விளங்கும் சித்தூர் மாவட்டத்தில் கங்கையம்மன் திருவிழா மிகவும் சிறப்பாக நடத்துவிப்பதைக் காணலாம். குறிப்பாக திருப்பதி மாநகரில் கங்கையம்மன் திருவிழா கோலாகலமாகக் கொண்டாடப் படுகின்றது. மேலும் சித்தூர், மதனபள்ளி, புங்கனூர், பலமனேர்; புத்தூர், நகரி, கடப்பகுண்டா, தூரக்குன்றம், பாலகிருஷ்ணாபுரம் புத்தூர், ஆகிய இடங்களிலும் கங்கையம்மன் திருவிழா மிகவும் சிறப்பாகக் கொண்டாடுவதைக் காணமுடிகிறது.

19. சித்தூர் மாவட்டத்தில் திரௌபதியம்மனுக்கு சிறப்பாக பூசை மேற்கொள்வதைக் காணமுடிகிறது. புத்தூர், நகரி, சத்தியவேடு ஆகிய வட்டங்களில் திரௌ பதியம்மனுக்குச் சிறப்பாக விழா எடுக்கின்றனர். இவ் விழாவின் போது தீ மிதித்தல் நிகழ்ச்சியும் நடைபெறு கின்றது.

20. முனீஸ்வரனை சாதாரணமாக சூத்திரர்களுள் சில இனத்து மக்கள் மட்டுமே வணங்குகின்றமை காண முடி கிறது. முனீஸ்வர பூசை, குறிப்பிட்ட சில மாதங்களிலேயே நடைபெறுகின்றது. மேலும் இப்பூசையில் கருப்பு, ஆடு, கருப்பு பன்றி, கருப்பு கோழி போன்றவற்றை மட்டுமே பலி கொடுக்கின்றனர், இப்பூசையில் தாழம்பூ சிறப்பபான இடத்தைப் பெறுகின்றது.

21. வலசை போதல் வழக்கம் சித்தூர் மாவட்டத்தில் பரவலாகக் காணப்படுகின்றது. அன்று சக்தி கல்லுக்கு சிறப்பாக விழா எடுக்கின்றனர், வலசை போதல் நிகழ்ச்சியை இம்மாவட்டத்தில் ஆதி திராவிடர் இனத்து மக்கள் சிறப்பாகச் செய்கின்றனர். மழை வருவதற்காக இத்தகைய நிகழ்ச்சியை ஆண்டுக்கொரு முறை மேற் கொள்கின்றனர் என்பது தெரியவருகின்றது.

# இயல்—3

# ''புத்தூரும்-புரட்டாசியும்''

ஆய்வுக்களமாக விளங்கும் சித்தூர் மாவட்டத்தில் பாலசமுத்திரம் மண்டலம் என்பது மாவட்டத்தின் தென் பகுதியில அமைந்துள்ளது. மண்டலத்தின் தென்மேற்கு திசையில் 'புத்தூர்' என்ற அழகிய கிராமம் அமைந்துள்ளது. இதற்கு''பாலகிருஷ்ணாபுரம் புத்தூர்'' ஆமுதாலா புத்தூர் என்ற மற்றொரு பெயர்களும் உண்டு. கிழக்கு தொடர்ச்சி மலைகளின் ஒரு பிரிவு இந்த கிராமத்திற்கு அருகே அமைந்துள்ளது. இயற்கை எழில் மிகு காட்சிகள், பச்சை பசேல் என விளங்கும் நெல் வயல்கள், நீரோடைகள், குன்றுகள் போன்றவை இக்கிராமத்தை இயற்கை அழகில் மிளிர வைக்கின்றன.

இக்கிராமத்தில் வாழும் மக்களின் முக்கியத் தொழில் விவசாயம் மற்றும் வியாபாரம். எருதுகளைவும், பசுக்களையும் குறைந்த விலைக்குக் கொள் முதல் செய்து தமிழகத்தில் உள்ள சோளிங்கபுரம் இராணிப்பேட்டை சந்தையில் அதிக இலாபத்திற்கு விற்பது இவர்களுக்குக் கைவந்த கலை. முன்னோர்கள் செய்த தவற்றால் தற்போது வியாபாரம் முழுக்க முடக்கத்தில் வீழ்ந்து விட்டது.

இக்கிராமத்து மக்கள் இந்து சமயத்திலும், கொள்கைகளிலும் ஆழ்ந்த பற்று உள்ளவர்கள். பாலசமுத்திரம்

மண்டலத்தில் உள்ள எல்லா கிராமத்து மக்களையும் கிருத்துவ பாதிரிமார்கள் மதமாற்றம் செய்த போதிலும் இக்கிராமத்து மக்கள் மட்டும் கிருத்துவ மதம் மாற்றத்திற்கு செவி சாய்க்கவில்லை: இருந்த போதிலும் ஆறு குடும்பங்கள் கிருத்துவ மதத்தை தழுவியுள்ளன. மற்ற குடும்பங்கள் இந்து மதத்தில் ஆழ்ந்த பற்றுள்ளவர்களாய் இன்றும் திகழ்ந்து வருகின்றனர்.

ஆய்வாளர் இக்கிராமத்தில் பிறக்கவில்லையென்றாலும் சுமார் ஐந்து வயதிலிருந்து இருபத்தைந்து வயது வரை பெற்றோர்களைப் பிரிந்துதாத்தா வீட்டில் வசித்துவந்தார். ஆய்வாளர் கிராமத்தில் தங்கி இருந்த காலத்தும், தற்போதும் இக் கிராமத்தில் புரட்டாசி மாத நிகழ்ச்சிகள் மிகவும் சிறப்பாகவும் புனிதமாகவும் கொண்டாடப்படுகின்றன.

புரட்டாசி மாதத்தில் ''மூன்றாவது சனிக்கிழமை'' புத்தூரில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. கிராமத்தில் உள்ள 45 குடும்பங்களில் பல பிரிவுகள் உள்ளன. இங்கு தோட்டிகள், தலையாரிகள் என்ற இரண்டு பிரிவு மக்கள் வசிக்கின்றனர். அனைவரும் ஆதி திராவிட இனத்து மக்களே. நெடுங்காலமாகவே தலையாரிகள் மட்டுமே இந்த மூன்றாம் சனி பூசையை விசேஷமாகச் செய்யும் வழக்கம் இருந்து வருகின்றது. தலையாரி இனத்து மக்கள் செய்யும் வழக்கங்களை தோட்டிகள் செய்வதில்லை.

## அலங்காரம்

மூன்றாம் சனிக்கு முன் வீட்டுக்கு வெள்ளையும் சிவப்பும் அடித்து அழகுபடுத்துகின்றனர். வீடுகளில் பயன்படுத்தும் பானைகளுக்கும் பெண்கள் வெள்ளை வர்ணம் பூசி அழகு படுத்துவர். ஆடவரும், பெண்டிரும், சிறாரும்

புத்தாடைகள் உடுத்தி பொலிவுடன் காணப்படுவார்கள். வீட்டு வாசல்களில் மணலும், செம்மண்ணும் பரப்பி அழகு படுத்துவார்கள். வீதிகளிலும், வீட்டு வாசற்படிகளிலும் மாவிலைத் தோரணங்களைக் கட்டித் தொங்கவிடுவார்கள்.

வீதிகளும், மற்றப் பகுதிகளும் பார்க்க மிகவும் அழகாக இருக்கும். மூன்றாம் சனிக்கிழமை வருவதற்கு இன்னும் மூன்று நாட்கள் இருக்கும் போதே கிராமம் விழாக்கோலம் பூண்டுவிடும். ஒலிபெருக்கிகளின் ஓசை விண்ணை முட்டும். உறவினர்கள் விழாக்களில் பங்கு பெறுவதற்காக கிராமத்திற்கு வந்த வண்ணமாக இருப்பார்கள்.

## புதுப் பொருட்கள்

மூன்றாம் சனி அன்று அம்மக்களது உணவுக்கும் பூசைக்கும் பயன்படுத்தும் எல்லா பொருட்களும் புதியன வாகவே இருக்கும். உணவு சமைப்பதற்குப் புதுப்பானை, சட்டி, குடம், தோண்டி போன்றவைகளைப் பயன் படுத்துவார்கள்.

சமையற் கட்டில் பயன்படுத்தும் அகப்பை, கரண்டி போன்றவையும் புதியதாகவே இருக்கும். சில வீடுகளில் புதியதாகஅறுவடை செய்த நெல்லையும் அமுதம் படைக்கப் பயன்படுத்துவார்கள்.

## பூசை நிகழ்ச்சிகள்

குடும்பத்துக்கு ஒருவராக எல்லா மக்களும் அன்று விரதம் இருப்பார்கள். இதனை வட்டார வழக்கில் அம் மக்கள் ஓர்சிந்தி ஒரு பொய்தி என வழங்குகின்றனர். முக்கியமாக குடும்பத்தலைவன், வீட்டுக்குத் தலைமகன் போன்றோர் விரதம் இருப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். இருபத்திநான்கு மணி நேரமும் போதையில் இருப்பவர்கள்கூட அன்று மட்டும் சாராயம் கள்,

போன்ற மதுபானங்களைக் குடிப்பதில்லை. இது அவர்கள் திருமாலிடம் கொண்டுள்ள பக்தியையும், பய உணர்வையும் பிரதிபலிக்கின்றது என்று சொல்லலாம்.

பூசை நிகழ்ச்சிகளைச் செய்வதற்குப் பொதுவான மைந்தர்களையோ, பூசாரிகளையோ தங்களுடைய வீடுகளில் அனுமதிப்பதில்லை. அவர்களே பூசை ஏற்பாடுகளைச் செய்கின்றனர். வெள்ளையடிக்கப்பட்ட சுவரின் வடக்குப் பகுதியில் திருமாலுக்கு இடும் திரு நாமத்தை குங்குமக் கலவையில் வரைந்து கொண்டு மஞ்சள், சந்தனம் போன்றவற்றால் பொட்டு வைத்து சுவற்றை அலங்காரம் செய்வார்கள்,

## படையல்

அலங்கரிக்கப்பட்ட நாமத்திற்கு எதிரில் மூன்று அல்லது ஐந்து இலைகளில் இறைவனுக்குச் சோறு படைப்பார்கள். இதனை ''தளிகை'' என அழைக்கின்றனர். அந்த சோற்றின் இடையில் பள்ளம் செய்து அதில் தயிர் ஊற்றுவர். பின்னர் அவர்களது வீட்டில் செய்யப்பட்ட கிழங்கு வகைகள், காய் வகைகள், கீரை வகைகள் போன்றவற்றைப் படைப்பார்கள். பொதுவாக எல்லாருடைய வீடுகளிலும், தளிகைகளிலும் முருங்கைக் கீரையும், முருங்கைக் காயும் முக்கியமாக இடம் பெறும்.

மேலும் ஆப்பிள், ஆரஞ்சு, வாழைப்பழம், கொய்யா, பொறிகடல், வெற்றிலைப்பாக்கு, முளையிடப் பட்ட கம்பு, வேர்க்கடலை, பச்சைப் பட்டாணி, நெய் பூ, போன்றவைகளையும் படைப்பர். சாம்பிராணி புகை வீட்டைச் சுற்றி வளைத்து மணக்கச் செய்யும். பூசையின் முடிவில் உடைப்பதற்காகக் கற்பூரமும், தேங்காயும் தயார் நிலையில் இருக்கும். ஒவ்வொரு வீட்டுப் பூசையிலும் துளசி மாலைகள் இடம் பெறும். அது மட்டுமல்லாது குடிநீரிலும், துளசி இலைகள் போடப்பட்டிருக்கும்.

## தலையாரிகள் வழக்கம்

குடும்பங்கள் இக்கிராமத்தில் சுமார் இருபது தலையாரி உள்ளனர். இவர்களுள் ஆண்கள் தங்களது நெற்றியில் நாமம் போட்டுக் கொள்வார்கள். பெண்கள்சிவப்பு வண்ணத்தில் நெற்றியில் நேர்க்கோடு போன்று வரைந்து கொள்வார்கள். இவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து முதலில் தங்களுக்குள் தலைவனாக விளங்குபவரின் வீட்டுக்கு முதலில் செல் வார்கள். அவ்வீட்டில் பூசை நிகழ்ச்சிகள் தயார் நிலையில் வைக்கப்பட்டிருக்கும். இம்மக்கள் அந்த வீட்டுக்குச் சென்றதும் வீட்டு எஜமான் இவர் ளை அன்புடன் வர வழைப்பான். அனைவரும் ஒன்று சேர்ந்ததும் வீட்டு எஜமான் கற்பூரம் கொளுத்தி தேங்காய் உடைப்பார். அந்நேரம் கூடியிருக்கும் தலையாரிகள் அனைவரும் வடக்குப் புறமாக திரும்பி கோவிந்தா... கோவிந்தா... என்று ஒன்றாகக் கூக்குரலிடுவார்கள்.

பின்னர் வாசற்படியின் அருகில் வந்து மறுபடியும் கற்பூரம் கொளுத்தி ஆரத்தி எடுத்து தேங்காய் உடைத்த தும் மற்றொருமுறை அனைவரும் ஒன்று சேர்ந்து கோவிந்தா... என்று மூன்று முறை உரத்த குரலில் கூவு வார்கள். அதோடு அந்தக் குடும்பத்தின் விரத நிகழ்ச்சி முடி வடைந்ததாகக் கருதப்படும். அடுத்து வேறு குடும்பத்துக்குள் பிரவேசிப்பார்கள்.

இவ்வாறாக இருபது தலையாரிகள் வீட்டுக்கும் சென்று பூசையை நடத்தி வைப்பார்கள். இதற்கு சுமார் 3 மணி நேரம் பிடிக்கும். இந்த இருபது வீடுகளில் சிலருக்குள் முன் விரோதம் காரணமாய் பூசையின் போது ஒருவர் மற்றொருவருடைய குடும்பப் பூசையில் பங்கு பெறுவது இல்லை.

பிரிவினைகள், மனக்கஷ்டங்கள் போன்றவை இருந்த போதிலும் சிலர் சகோதர மனப்பான்மையுடன் பூசையில்

பங்கேற்பதையும் காணலாம். அன்று மட்டும் புனிதமும், உணவில் சைவமும் முழுமையாக அனுசரிக்கப்படும். தங்களுடைய வீடுகளில் அன்று மாமிசம் வற்றல் ஏதாவது இருந்தால் அதனை அப்புறப்படுத்தி விடுவார்கள்.

## தோட்டிகள்

புரட்டாசி மூன்றாம் சனிக்கிழமையின் தலையாரிகளுடைய பூசை முறைக்கும், தோட்டிகளுடைய பூசை முறைக்கும் வேறுபாடு உண்டு. வீட்டு அலங்காரம், பொருத்தனை ஒன்று போலவே இருக்கும். ஆனால் பூசைகளை இம்மக்கள் தங்களுடைய வீடுகளில் செய்து கொள்வதில்லை. அன்று மாலை 4 அல்லது 5 மணியளவில் கிராமத்திற்கு வடக்கே சற்று தூரம் சென்று வெங்கடேசுவரா நினைவாக ஒரு சிலையை நிறுவி அங்கே பூசை செய்து வழிபாடு செய்வர்: மேற்கண்ட இந்த பூசையைஅனைவரும் ஒன்றாகச் சேர்ந்து செய்வதில்லை.

தனித்தனிக் குடும்பமாகச் சென்று வழிபட்டு வீடு திரும்புவர். இம்மக்கள் வழிபடும் போது தலையாரிகளைப் போன்று கோவிந்தா... கோவிந்தா...என உரத்த குரலில் விளிப்பது இல்லை. தலையாரிகள் கோவிந்தா... என்று அழைக்கும் போது தோட்டிகள் தங்களுடைய வீடுகளில் தாழ்ப்பாள் இட்டு தங்கியிருக்கும் பழக்கம் இன்றும் காணப்படுகின்றது. இந்துக்கள் தங்களுடைய வீடுகளில் சமைத்த உணவு வகைகளை கிருத்துவ மக்களுக்குக் கொடுத்து உண்டு மகிழ்வர். பூசைகளில் வேறுபாடு கண்டாலும் கிராமத்து நிகழ்ச்சிகளில் அனைத்து மக்களும் ஒன்றுபட்டு செயல்படுவார்கள்,

**ஊர்வல நிகழ்ச்சி**

பூசைகளையும், பொருத்தனைகளையும் வெவ்வேறு வகையில் செய்து கொண்ட இம்மக்கள் ஊர்வல நிகழ்ச்சி யில் அனைவரும் ஒன்றாகச் செயல்படுவது மிகவும் வியப் பாக இருக்கும். இந்தக் கிராமத்தில் "அண்ணா சமூகநல சேவா சங்கம்" உள்ளது; ஏறக்குறைய 40 வாலிபர்கள் அங்கத்தினர்களாக இருக்கின்றனர். இவர்கள் முன்னின்று ஊர்வல நிகழ்ச்சியை நடத்துவிப்பார்கள். வண்ண, வண்ண விளக்குகளாலும், வண்ணக்காகிதங்களினாலும், மணிகளா லும், பூக்களாலும் அலங்காரம் செய்யப்பட்ட மாட்டு வண்டி யில் ஸ்ரீ வெங்கடேஸ்வரர் புகைப்படத்தை வைத்துப் பூசை செய்வார்கள். இந்தப் பூசையைத் தலையாரி சண்முகம் என்பவர் நடத்துவிப்பார். பூசைகள் செய்வது, மற்றும் சிலைகளுக்கு அலங்காரம் செய்வதில் இவர் வல்லவர்.

மாட்டு வண்டியை வாலிபர்கள் கைகளால் இழுப் பார்கள். ஒவ்வொரு குடும்பமும் மேற்கொள்ளும் பூசையை ஏற்கும் வகையில் மாட்டு வண்டி இழுத்துச் செல்லப்படும். வண்டியில் அக்கிராமத்து பஞ்சாயத்து தலைவர் திரு. இரகு ராமன் அவர்களும், வாலிபர் சங்கத்தில் பெரிய உறுப்பினர் களாகத் திகழும் வெங்கடாசலம், ரத்தினம், சி. மணி போன்றவர்களும் வீற்றிருப்பார்கள்.

ஊர்வலத்திற்கு முன் வாலிபர்கள், மற்றும் சிறு பிள்ளைகள் கூட்டமாகக் கூடி கோவிந்தா... என்று திருநாமத்தை உச்சரித்த வண்ணம் செல்வார்கள். வாண வேடிக்கைளும் அந்நேரம் இடம் பெறும். ஆய்வாளரின் நண்பரான எம். விஜயன் அவர்கள் வாண வேடிக்கைகளை சிறப்பாக நடத்துவிப்பார். எல்லா வீடுகளிலும் பூசையை ஏற்ற பின்னர் இரதம் கிராமத்துக் காளியம்மன் கோவிலுக் கருகில் நிலைக் கொள்ளும். பின்னர் கலைநிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடுகள் நடக்கும். கலை நிகழ்ச்சியில் முக்கியமாக

நடனங்கள், நகைச்சுவைப் பாடல்கள் போன்றவை இடம் பெறும். பெரும்பாலான பாடல்கள் எம். ஜி. ஆர் படங்களி லிருந்து பாடப்படும்.

பொதுவாக இக்கிராமத்தில் வசிக்கும் நாட்டுப்புற மக்கள் பண்டிகை நாட்களிலும், திருவிழா காலங்களிலும் இறையன்போடும், சகோதர மனப்பான்மையுடனும் செயல்படுவது குறிப்பிடத்தக்கது. ஆனால் இக்கிராமத்தில் நிரந்தர கோயில் இல்லை. கிராமத்துக்கு நடுவில் பெரிய வேப்பமரம் ஒன்று உள்ளது. அந்த மரத்தடியில் சற் சிலைகள் பல வைக்கப்பட்டுள்ளன. இவைகளுக்கு உருவங்கள் கிடையாது. இதனை 'காளி' என்றும் அம்மன் என்றும் அழைப்பர். சில விசேடமான நாட்களிலும், பொருத்தனை நேரத்திலும் இவ்வம்மனுக்குப் பூசை செய்கின்றனர். இதர நாட்களில் அந்தக் கோயில் பகுதி ஊர் மக்கள் தூங்கிக் காலம் கழிக்கவும், ஆடு-புலி ஆட்டம் ஆடவும், வீண் பேச்சுகளைப் பேசிக் காலம் கழிக்கவும் பயன்பட்டு வருகின்றமையைக் காண முடிகின்றது.

திருமாலுக்கென்று நிரந்தரமாக இக்கிராமத்தில் கோயில் அமைக்கப்படவில்லை. பூசையின்போது மட்டும் உடனே சிறிய கோயில் எழுப்பி சிலை வைத்து வணங்கும் பழக்கம் இம்மக்களிடையே இன்றும் காணப்படுகின்றது. திருமாலின் அவதாரமாக விளங்கும் இராமரை வணங்கும் மக்கள் இங்கு அதிகமாக உள்ளனர்.

மேலும் இக்கிராமத்தில் பொங்கல் திருநாள் கங்கை யம்மன் திருவிழா போன்றவைகளும் விசேடமாக நடை பெறுகின்றன. கங்கையம்மன் திருவிழா ஆரம்பமாகும் முன் சாட்டுதல் நிகழும். பின்னர் கங்கையம்மனுக்கு விழா எடுப்பர். விழாவில் எருமைக் கிடாவை அம்மனுக்குப் பலி யாகச் செலுத்துகின்றனர். பொங்கல் திருநாளில் நான்காம் நாள் விழாவான மாட்டுப் பொங்கல் அன்று இக்கிராமத்

திற்குத் தெற்கே நிலை கொண்டிருக்கும் காட்டுமராஜா வுக்கு சிறப்பாக பூசை செய்கின்றனர்.

அன்று மாலை 4 மணிக்கு கிராமத்துப் பெண்கள் அனைவரும் காட்டுமராஜு இருக்கும் பகுதிக்குச் சென்று பொங்கல் வைப்பர். காட்டுமராஜுவுக்குப் பூசைகள் செய்து, பொங்கல் சோறு, மற்றும் பூ, பழம், பொறிகடல் போன்றவை படைத்து வணங்குவர். அங்கு சேவற் கோழியை மட்டுமே பலியாகக் கொடுப்பர். பலி கொடுக்கப் பட்ட சேவலின் இரத்தத்தில் சோற்றைக் கலந்து எல்லா வீடுகளின் மாட்டுத் தொழுவங்களில் போடுவார்கள். கங்கையம்மன் பூசை, மற்றும் காட்டுமராஜுவின் பூசையை கிராமத்தில் உள்ள "சலவாதி" என்பவர் செய்வார்.

கங்கையம்மனுக்குப் போடப்படும் பச்சிலைக் குடிசையை வழக்கமாகச் சுமந்து சென்று நீரில் சேர்ப்பவர்களும் உள்ளனர் பூசைகள் செய்வது, நற்காரியங்களை முன்னின்று நடத்துவது, பலி இடுவது போன்ற செயல் களைப் பரம்பரை பரம்பரையாக ஒரு குடும்பத்தாரே செய்து வருகின்றனர். இதனால் இவர்களுக்குள் போட்டிகள் ஏற்படுவதில்லை. பொது நிகழ்ச்சிகளிலும், திருவிழாக் காலங்களிலும் அவரவர் வேலைகளைச் சிறப் பாகவும், ஊக்கமாகவும், கடமையாகவும், பக்தி உணர் வுடனும் செய்வது பாராட்டுகுரிய தொன்றாகும்.

## விழாவும் வாலிபர்களும்

இன்றைய சமுதாயம் வாலிபர்களின் ஆதாரத்திலேயே நடைபெற்று வருகின்றன எனலாம். சமுதாய உயர்வுக்கும், வருங்கால மாணவ சமுதாயம் வளர்ச்சி அடைவதற்கும் இக்கால வாலிபர்களின் முழு ஆற்றலும், ஒத்துழைப்பும் பெரும்பான்மையாக தேவை என்றே ஆய்வாளர் இங்கு ஆவிந்தரமாகச் சொல்ல விரும்புகிறார். ஏனெனில் இந்திய

துணைக் கண்டத்தில் பல்வேறு மாநிலங்களில் பல பிரச்சனை களுக்கு வாலிப வயதில் உள்ள சில நச்சுக்கிருமிகள் ஒருங் கிணைந்த இந்தியாவை வேறு பிரிக்கவும், அமைதியைக் குலைப்பதற்கும் முயற்சி செய்கின்றனர்.

இதனை ஆய்வாளர் இங்குக் குறிப்பிடுவது அவசியமா கின்றது. இது இவ்வாறு இருக்க பாலகிருஷ்ணாபுரம் புத்தூரில் வசிக்கும் வாலிபர்கள் தங்களுக்குள் பல பிரச் சனைகள், இடர்பாடுகள், கருத்து வேற்றுமைகள் இருந்த போதிலும், பொதுக் காரியங்களில் மின்னல் போல் சீறிப் பாய்ந்து அவரவர் தம் தம் செயல்களைச் செவ்வனே செய்து விழா நன்கு முடிவு பெறுவதற்குத் தூண்களாய் இருக் கின்றனர் என்பதை மறுக்க இயலாது. இக்கிராமத்தில் முதன் முதலாக பி. ஏ. படித்த திரு. வெங்கடாஜலம் என்பவர் பொது நிகழ்ச்சிகளுக்குச் சில ஆலோசனைகளை வழங்குவார்.

மற்ற வாலிபர்கள் அதனை அன்புடன் ஏற்று செயல் படுவார்கள். மேலும் திரு நரசிம்மன் அவர்களும், இரத்தினம் அவர்களும் பற்பல ஆலோசனைகளை வழங்கு வார்கள். அவர்களுடைய ஆலோசனைகளை ஏற்ற இரண்டாம் நிலை வாலிபர்கள் திரு. இரகுராமன், முனுசாமி, சண்முகம், சின்னப்பன், சிகாமணி, வேதாசலம் போன்றவர்கள் மற்ற இளநிலை வாலிபர்களுக்கு விழாவின் அமைப்பையும், மேற் கொள்ள வேண்டிய வேலைகளையும் சிறப்பாக எடுத்துச் சொல்வார்கள்.

பந்தல் அமைக்கும் வேலையை யுவராஜ், ஏகாம்பரம் பழனி, ஜெயபால், வடிவேல், ஏழுமலை, பிரகாசம், பிரபு, வெங்கடேசன், வாசு, செல்வம், சாம்பா, ரவிச்சந்திரன், பதி போன்ற வாலிபர்கள் சிறப்பாக முடித்து வைப்பார்கள். பெரிய நிலச்சுவான்தாரர்களிடம் சென்று தென்னம் ஓலையைக் கொண்டு வந்து பந்தல் அமைத்து விடுவார்கள். சித்தூர் கலைக்கல்லூரியில் படிக்கும் மாணவர்கள், தவமணி

பி. காம், எத்துராஜ், (பி. காம்,) தங்கராஜ், (பி. ஏ,) பார்த்தசாரதி (பி. ஏ) பதி (பி. ஏ,) போன்றவர்களும் மற்றும் குமார், வேல்மணி, சிவராமன், ஜெயராமன், போன்ற மாணவர்களும், வண்ணக் காகிதங்களைக் கொண்டு பல விதமான பூக்களை உண்டாக்கிப் பந்தலில் தோரணங்கள் கட்டி அழகுபடுத்துவார்கள்.

விழாவில் பூசைப் பொருட்கள் வாங்குவதற்கும், விழா ஏற்பாடுகளைக் கவனிப்பதற்கும், உதவுவதற்கும் சிதம்பரம், கோபி, சிவலிங்கம், குஜ்ஜன், சின்ன கண்ணன், பகவான் போன்றவர்கள் ஈடுபடுவார்கள். ஒலி, ஒளி அமைக்கும் வேலையை ஆய்வாளரின் நண்பர், திரு. எம். விஜயன் அவர்களும், C. மணி, நாராயணசாமி, சண்முகம் போன்றவர்கள் பார்த்துக் கொள்வார்கள். வாண வேடிக்கை ஏற்பாடுகளை திரு. விஜயன் முன்னின்று நடத்துவிப்பார். ஆய்வாளரின் படிப்புக்கும், இத்தகையதோர் புத்தகம் எழுதி வெளியிடுவதற்கும் எம். விஜயன் அவர்கள் பேருதவியாக அமைந்தார் என்பதை இங்கு குறிப்பிட விரும்புகின்றேன்.

இவ்வாறாக இந்தக் கிராமத்திலுள்ள வாலிபர்கள் விழா நாட்களில் உற்சாகத்துடன் செயல்படுவதைப் பார்க்க முடிகின்றது. இவ்வளவு தெய்வ வழிபாட்டில் மிகவும் ஈடுபாடு கொண்டு விளங்கும் இந்த நாட்டுப்புற மக்களுக்கு இலவசமாக ஒரு கோயில் அமைத்துக் கொடுக்க எந்த சமயத்தைச் சார்ந்த மதத் தலைவர்களோ, நிறுவனமோ முன்வரவில்லை. இம்மக்களுக்கு அருகாமையில் உள்ள தூரக்குன்றம், சித்தூர் போன்ற இடங்களுக்குச் செல்ல ரோடு வசதியோ பேருந்து வசதியோ இல்லை. இரண்டு கி. மீட்டர்கள் நடந்து சென்றுதான் இவர்கள் பேருந்தில் பயணம் மேற்கொள்கின்றார்கள்.

## அடிக் குறிப்புகள்

1. அன்னகாமு, செ., ஏட்டில் எழுதாக் கவிதைகள்ப. 31
2. லிங்காரெட்டி, கோவு., தெலிங்கானா ஸ்ராமிக்க கேயாலு., ப,3.
3. சுந்தரம். ஆர்.வி. எஸ்., ஜானபத சாஹித்ய ஸ்வரூபம், ப, 42.
4. சக்திவேல்., சு.. முனைவர், நாட்டுப்புற இயல் ஆய்வு., ப,42.
5. லிங்காரெட்டி, கோஷ., மு.நூ ப,3.
6. மேற்படி., ப, 51
7 மேற்படி., ப.51
8. கங்காதரம் நேதுனூரி., மின்னேறு-ப. 213,
9. பாடியவர், சாவித்திரி., முக்களுத்தூர் கங்காதர நெல்லூர் மண்டலம், சித்தூர் வட்டம்.
10. முத்தேலக்கா., எர்ர வாரி பாளையம், வாயல்பாடு மண்டலம்,
11. பாடியவரி., முனியம்மா, நின்ற மண்டலம் நின்ற
12. பாடியவர்., சுகணம்மா., குடிபாலா மண்டலம் குடிபாலா.
13. பாலகிருஷ்ணாரெட்டி, எட்ல., ஜானபத பார்மார்த்திக்க கேய சாஹியம், ப, 51.
14. மேற்படி., ப, 52.
15. மேற்படி., ப, 52.

16. பாடியவர், சாந்தா., பாலசமுத்திரம், பாலசமுத் திரம் மண்டலம்.
27. பாடியவர்., குண்டம்மா., திம்மய்யாபல்லி குடிபாலா மண்டலம்.
18. பாடியவர்., ரேணுகம்மா மாதவரம்., யாதமரி மண்டலம்.
19. பாடியவர்., எல்லம்மா., ஜங்கால்பல்லி, யாதமரி மண்டலம்
20. பாடியவர். அம்சா முட்டுக்கூர்., சித்தூர் மண்டலம்
21. பாடியவர்., கிருஷ்ணவேணி மாயாக்ஷி., சித்தூர் மண்டலம்.
22. சுந்தரம்., ஆர்.வி.எஸ்., தெலுகு கன்னட ஜானபம் கேயாலு., ப.76.
23. பாடியவர்., முருகன்., பாட்டூரு., ஆத்தலப்பட்டு மண்டலம்.
24. பாடியவர்., கோவிந்தய்யா., கொடுகுசிந்தா பூத்தலப்பட்டு மண்டலம்
25. பாடியவர்., துரைசாமி., ஒட்டேபல்லி பூத்தலப்பட்டு மண்டலம்.
26. பாடியவர்., வரதன்,, கசிந்தபென்டா., பெனுமூர்
27. பாடியவர்., புட்ரெட்டி., மஞ்ஜாரபல்லி பெனுமூர் மண்டலம்.
28. அர்க்க சோமயாஜி,டி., சிவராத்ரி மகிமா.,ப.4.
29. பாடியவர்., நாகன் ஆமுதாலா., பாலசமுத்திரம் மண்டலம்.
30. பாடியவர்., புலேந்திரன் , ஸ்ரீ. காவேரி ராஜபுரம்., பாலசமுத்திரம் மண்டலம்.
31. பாடியவர்., ஐய்யாக்கண்ணு., கொத்த வெங்கட்டா புரம், கங்காதர நெல்லூர் மண்டலம்.

32. பாடியவர், கன்னைய்யா மொகிலி. பங்காரு பாளையம் மண்டலம்.
33. அர்க்கு சோமயாஜி, டி.,மு.நூ,. ப,6.
34. பால கிருஷ்ணாரெட்டி., எட்ல., மு.நூ., ப, 25.
35. பாடியவர்,, தேவம்மா., நலகாம் பல்லி பங்காரு பாளையம் மண்டலம்.
36. பாடியவர், பண்டக்கா., அரகொண்டா தவணம் பல்லி மண்டலம்.
37. பாடியவர், சுசீலம்மா நாராயணவனம் புத்தூர் மண்டலம்.
38. பாடியவர், பேசம்மா,. தடுக்கு, நகரிமண்டலம்.
39. பாடியவர்., ரகுராமன் B புத்தூர், பாலசமுத்திரம் மண்டலம்.
40. பாடியவர், வெங்கட்டாபதி நாயுடு., பாலகிருஷ்ணாபுரம் புத்தூர்., பாலசமுத்திரம் மண்டலம்.
41. பாலகிருஷ்ணாரெட்டி., எட்ல., மு.நூ,ப, 75
42. பாடியவர்., கண்ணம்மா,, அகரம்., நின்ற மண்டலம்
43. பாடியவர்., ருத்ரய்யா., பன்னூர்., விஜயபுரம் மண்டலம்
44. பாடியவர்., ராமசந்திரன்., புடிப்பட்லா, திருப்பதி மண்டலம்.
45. பாடியவர்., பெருமாளய்யா., வல்லிவேடு., பாகாலா மண்டலம்.
46. பாடியவர். ராஜம்மாள்., ஆமுதாலா., பாலசமுத்திர மண்டலம்.
47. பாடியவர்., பாப்பம்மா தேவலம்பேட்டா புலிசெர்லா மண்டலம்.
48. பாடியவர்., சின்னஅய்யலு., பனகல்., காளத்தி மண்டலம்.

49. பாடியவர்., கல்லூர்செட்டி., சித்தாராம் பேட்டா ஏர்ப்பேடு மண்டலம்.

50. பாலகிருஷ்ணா ரெட்டி, எட்ல,, மு.நூ ப,94.

51. பாடியவர்., செல்வம்., வேலம்பேடு., ஸ்ரீ காளத்தி மண்டலம்.

52. பாடியவர்., குருவமந்தடி., கும்மிடிகுண்டா., தொட்டம் பேடு மண்டலம்.

55. பாடியவர்., ஆறுமுகம் சென்னேரி., சத்தியவேடு மண்டலம்.

56. பாடியவர் , செங்கல்ராய்டு., ராஜகோபாலபுரம் சத்தியவேடு மண்டலம்.

57. பாடியவர்., நாராயணசாமி காயம் வடமலபேட்டா மண்டலம்.